கல்கி



# பொருளடக்கம்



பட விளக்கம் 6ம் பக்கம் பார்க்க

''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே

சோபகிருது, வைகாசி 12உ
மே, 26உ 1963

# பலே, விற்பனையாளரே!

எமதுடைய ரகங்களை வாங்கிவைத்து, விற்பனை செய்து, அவற்றின் பெயரும் புகழும் பரவப் பேருதவி புரிகின்றீர்கள். உற்பத்தியாளருக்கும் உபயோகிப்போருக்கும் இடையே இன்றியமையாத இணைப்பாக விளங்கும் உங்கள் பணியே பணி. நம் நாட்டு சிகரெட்டுத் துறை வேற்றுநாட்டு ஏகபோக உரிமையாளர்களின் ஆதிக்கத்திலிருப்பதனால், இந்திய சிகரெட்டுத் தொழிலுடன் ஒத்துழைப்பதிலே சில இடர்களை நீங்கள் எதிர்ப்படுகிறீர்கள். நல்லவேளையாக அவை உங்கள் மனவுறுதியைத் தகர்ப்பதற்கு மாறாக உங்களுக்கு ஊக்கமூட்டியே வருகின்றன. நாட்டுப் பற்றுமிகுந்த நல்வணிகருக்கு அடையாளமாக நீங்கள் தூண்டுதல்களையும் தடைகளையும் மீறி, சொந்த சிகரெட்டுத் தொழிலுக்கு ஆதரவுதர அணிவகுத்துள்ளீர்கள். அஞ்சாமையும் ஆர்வமும் சலியாமுயற்சியும் சாதனையுமே உருவகமான தங்களைத் தாயகத்து சிகரெட்டுத் தொழிலைத் தாங்கும் தூணாகக் கருதுகின்றோம். உங்கள் ஒத்துழைப்பையே கொழுகொம்பாகக் கொண்டு இத் தொழில் வளர்ச்சி பெற்று, வருங்காலத்தில் வளமை காணப் போவது உறுதி.

சுதேசி சிகரெட்டுகளை விற்பனை செய்து விதேச நாணயமாற்றினைக் காப்பாற்றுக.






கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்., பம்பாய்-58.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 62. TAM. Greens' Advtg



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 43

# கொடுமைக்குக் கொடியேற்று விழா!

ஹிந்தி ஏகாதிபத்திய விஷத்தை நாட்டு நிர்வாகத்தில் ஏற்றத் தொடங்கி விட்டார்கள்! மத்திய சர்க்கார் காரியாலயக் குறிப்புக்களிலும், நகரங்களிலும் ஹிந்தியை உபயோகிக்கத் தொடங்க வேண்டுமென்று உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டிருக்கின்றன. சிறுகச் சிறுக ஹிந்தியைத் திணிக்கத் திட்டம் தயாராகி விட்டது. தென்னாட்டின் இருள் வாழ்வுக்குத் திரையைத் தூக்கியாகி விட்டது!

'ஹிந்தியை நிர்ப்பந்தத்தின் மீது திணிக்க மாட்டோம்' என்றும் 'ஹிந்தி அறியாதவர்கள் மற்றவர்களைவிட எவ்விதமான பிரதிகூல நிலையிலும் இருக்க மாட்டார்கள்' என்றும் வாய்ச் சொற்களை வீசியதெல்லாம் வியர்த்தமாகி விட்டது. இந்தியாவின் பூரணப் பிரஜை என்ற அந்தஸ்து இனி ஹிந்தி அறிந்தவர்களுக்கு மட்டுமே கிடைக்கும். மற்றவர்கள் இரண்டாந்தரக் குடிகளாகி விடுவார்கள்.

தென்னாட்டினரின் ஒத்துழைப்புத் தேவையில்லை என்று கருதும் யாரோ ஒருவரின் தவறான யோசனையின் பேரில் போடப்பட்டிருக்கும் இந்த உத்தரவு தென்னக மக்களைத் தூண்டித் தங்கள் அதிருப்தியை அவர்கள் வெளிப்படக் காட்டுமாறு செய்யும் என்று எண்ணத் தோன்றுகிறது. நாம் ஒருமுகமாக ஆட்சேபித்து எதிர்ப்புத் தெரிவிக்க இதுவே தருணம். தென் இந்தியாவில் ஒரு பகுதியினர்தான் ஹிந்தியை எதிர்க்கிறார்கள் என்ற வாதம் முழுப் பொய் என்று வட இந்தியர்களுக்கு நாம் இப்போது நிரூபித்துக் காட்ட வேண்டும்.

நம்மிலேயே சிலர் நம்முடைய பிரதேச நலன் இன்னதென்று புரிந்து கொள்ளாமல், ஆளுகிறவர்களுக்குப் பின்பாட்டுப் பாடுவது மிகவும் துரதிருஷ்டமாகும். 'ஹிந்தியைப் புகுத்துவது தவிர்க்கமுடியாத விஷயம்; எனவே ஆங்கிலத்தையும் அதனுடன் உபயோகித்து இரு மொழி ஆட்சி நடத்தலாம்' என்று சிலர் யோசனை சொல்கிறார்கள். இதற்கு எவ்வளவு காலமும், பொருளும் செலவாகும் என்பதையும், இந்தத் 'தர்ஜுமா' வேலையால் எவ்வளவு குழப்பங்கள் உண்டாகி நிர்வாகத்தில் தாமதம் ஏற்படுமென்பதையும் இப்படி யோசனை கூறுகிறவர்கள் எண்ணிப் பார்க்க வேண்டும். காகிதத்தில் உருப்படியாக இருக்கிற திட்டங்கள் நடைமுறையில் சாத்தியமாகா. இரு மொழிக் கொள்கை ஓர் உருப்படாத திட்டம். அதனால் பிரச்னைக்கு நியாயமான தீர்வு கிடைக்காது.

இப்படி 'சமரஸம்' பேசிக் குட்டையைக் குழப்புகிறவர்களோடு நமது ராஜ்ய மந்திரிகளும் தில்லியின் ஏற்பாட்டுக்குத் தாளம் போடுகிறார்கள். தில்லி சர்க்காரிடம் நமது உரிமைகளை நிலைநாட்டக் கடமைப்பட்டவர்கள் தங்களின் கடமையை மறந்து விட்டார்கள். ஹிந்தி யதேச்சாதிகாரம் ஓங்காமல் இருக்க வேண்டுமானால் இனி மக்கள் தான் எழுச்சி கொள்ள வேண்டும். ஒவ்வொரு நகரத்திலும், கிராமத்திலும் உள்ள மக்கள் ஒன்று கூடி ஹிந்திச் சட்டத்தைக் கண்டிக்க வேண்டும். 'ஹிந்தி வேண்டாம்' என்னும் தலைவர்கள் தங்கள் எழுத்தாலும் பேச்சாலும் மக்களைத் தட்டி எழுப்ப வேண்டும். எதிர்ப்புக்கு அஞ்சாமல், மன உறுதி குலையாமல் நம் பணியைத் தொடர்ந்து செய்தால் நிச்சயமாக வெற்றி காண்போம்!

# நாங்குநேரி தேர்தல்

நாங்குநேரியில் சுதந்திரக் கட்சி தோல்வியுற்றது வாஸ்தவம் தான். ஆனால் அது பெற்றுள்ள 19,653 வோட்டுக்களைப் பற்றி நேயர்களை நினைத்துப் பார்க்கும்படி கேட்டுக் கொள்ளுகிறோம். எத்தனையோவிதமான தொல்லைகளுக்கு எதிராக இத்தனை பேர் சுதந்திரக் கட்சிக்கு ஆதரவளித்ததைப் பார்க்கும் போது, இந்நாட்டில் ஜனநாயகம் தழைக்க ஏதுவுண்டு என்ற நம்பிக்கை எழுகிறது.

முதன் மந்திரி திரு காமராஜ நாடார் அவர்கள் தேர்தலுக்கு நான்கு நாட்களுக்கு முன்னதாகவே இந்தத் தொகுதிக்குப் போய், தேர்தல் முடியும் வரை அங்கேயே இருந்திருக்கிறார். அவர் அங்கே நடத்திய நிர்வாகத்தை அந்தத் தொகுதியிலுள்ள மக்கள் அறிவார்கள். முதன் மந்திரியார் மட்டுமல்ல; ஹரிஜன மந்திரி, கூட்டுறவு மந்திரி, தொழில் மந்திரி இப்படிப் பல தரப்பட்ட மந்திரிகள் சென்று தங்கள் அதிகாரச் செல்வாக்கைக்காட்டினார்கள். சாதி பலமும் நன்றாகப் பயன்பட்டது.

இப்படி அதிகார பலம், பணபலம், சாதி பலம் இத்தனையும் தலைவிரி கோலமாக அங்கு ஆடியதைப் பார்த்து விட்டு வந்த நண்பர்கள் ''இந்தக் காங்கிரஸ் ஆட்சி நடக்கும் வரை நேரிய முறையில் தேர்தல் நடைபெற முடியாது'' என்று தீர்மானித்து விட்டார்கள்.

ஆனால் இவ்வளவு மயக்கங்களுக்கும் பணிந்து போகாமல் பத்தொன்பதாயிரம் பேர் சுதந்திரக் கட்சிக்கு வோட்டளித்திருக்கிறார்கள் என்பதைப் பார்க்கும் போது, அந்த வாக்காளர்களைக் கையெடுத்துக் கும்பிடத்தோன்றுகிறது. வோட்டளித்தவர்களில் நாற்பது சதவிகிதம் பேர்கள் இன்றைய ஆட்சியை ஒப்ப வில்லை என்று பகிரங்கமாகத் தீர்ப்பளித்திருக்கிறார்கள். இன்னும் பதினொரு சதவிகிதத்தினரின் ஆதரவு பெறுவது கடினமான காரியமல்ல.

இந்தத் தொகுதியில் நடந்த யுத்தத்தில் தி. மு. க. தொண்டர்களின் பணியைப் பற்றி ராஜாஜி அவர்கள் மிகவும் பாராட்டினார்கள்.

சுதந்திரக் கட்சிக்காக வோட்டளித்தவர்களும் ஊக்கமாக வேலை செய்த தி. மு. க. கட்சியினரும் முஸ்லீம் லீகினரும் நல்ல பணியைப் புரிந்திருக்கிறார்கள். தோல்வியைக் கண்டு மனம் சோராமல் தொடர்ந்து வேலை செய்தால் சீக்கிரத்தில் யதேச்சாதிகார ஆட்சி தடுத்து நிறுத்தப்படும் என்பதில் ஐயமில்லை.

## கிருஷ்ண(மாச்சாரியா)ர் தூது!















# என்ன சேதி?

## மாபெரும் நஷ்டம்

டாக்டர் ரகுவீராவின் அகால மரணம் நாட்டில் பலரைத் துயரத்தில் ஆழ்த்தியுள்ளது. மோட்டார் விபத்துக்குள்ளாகி அவர் உயிர் துறக்க நேரிட்டது அவர் மறைவினால் ஏற்பட்ட சோகத்தைப் பன்மடங்காக்குகிறது. அவர் ஒரு தலைசிறந்த ஆராய்ச்சியாளர். அதோடு ஆயுள் முழுவதும் வட மொழி, ஹிந்தி மொழி பற்றிச் சிறந்த ஆராய்ச்சிகள் நடத்திய அறிஞர். ஹிந்தி மொழிக்கு அவர் ஓர் அரிய அகராதியை அளித்துள்ளார். அம்மொழி வளர்வதற்கும், நவீன கால முன்னேற்றத் தேவைகளுக்கு ஏற்ப அம்மொழியை விரிவாக்குவதிலும் அவர் எடுத்துக் கொண்ட சிரத்தை எக்காலத்திலும் அழியாது நிற்கும். சொற்களின் தாதுக்களிலிருந்து உப சொற்களையும், சொற்கோவைகளையும் புனைந்து வளப்படுத்துவதை நுண்ணிய அறிவுடனும், அசாதாரணத் திறமையுடனும் அவர் செய்து வந்தார். சீனா, இந்தோனேஷியா பிரதேசங்களில் விரிவாகச் சுற்றுப் பிரயாணம் செய்து, அங்குள்ள கலைச் செல்வங்களையெல்லாம் சேகரித்து உலகுக்கு அளித்துள்ளார். ஆராய்ச்சித் துறையில் மட்டுமின்றி அரசியலிலும் ஈடுபட்டு முதலில் காங்கிரஸில் பணியாற்றி, பிற்காலத்தில் அதன் போக்கு பிடிக்காமல் பாரதீயஜனசங்கத்தில் சேர்ந்தார். சமீபத்தில் அதன் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப் பட்டார். அரசியல் வாதிகளுக்குள் தைரியம் சிறிதும் குன்றாதவர். காங்கிரஸின் ஏககட்சிய தேச்சாதிகாரத்துக்கு எதிராகத் தீரத்துடன்பணி


டாக்டர் ரகுவீரா



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளே சென்னைக்கு எழுந்தருளி விட்டார்களோ என்று எண்ணுமாறு இம்மாதம் 10, 11, 12ந் தேதிகளில் அவரது எழுபதாவது ஜயந்தியைத் தியாகராயநகர் பக்தர்கள் கொண்டாடினர். சிறப்பான முறையில் ஸ்ரீ ஆசாரியரின் திருஉருவப் படத்துக்கு வீதி உலா நடத்தினர்.

யாத்திரிய டாக்டர் ரகுவீராவின் மறைவு இந்திய அரசியலுக்கு ஈடுசெய்ய முடியாத நஷ்டம்.

## தங்கக் கட்டுப்பாட்டின் லட்சணம்

'சூப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்ட வில்லை' என்று சொன்ன பயில்வானைப் போல் தங்கக் கட்டுப்பாட்டு விஷயம் நடைபெறுகிறது. தங்கத்தின் விலை குறைந்துவிட்டது என்று தங்கக் கட்டுப்பாட்டு போர்டுத் தலைவரும் அமைச்சர் தேசாயும் பெருமை அடித்துக் கொண்டனர். ஆனால் சமீப காலங்களில் தங்கத்தின் விலை கிட்டத்தட்ட பழைய விலைக்கு வந்து விட்டது. சில இடங்களில் பழைய விலைக்கும் மேலே சென்று விட்டது என்றும் சொல்லப் படுகிறது. இதை போர்டுத் தலைவரே ஒப்புக் கொள்கிறார். ஆனால் ஏன் உயர்ந்தது என்பதற்குக் காரணம் சொல்ல அவரால் முடியவில்லை.

கிராமப் புறங்களில் தங்கக் கட்டுப்பாட்டு உத்தரவுகளுக்குப் பின்னர் கடன் வசதி மிகக் கடுமையாகக் குறைந்து விட்டது என்றும், விவசாயிகளின் நிலை பரிதாபகரமாகி விட்டது என்றும் பலர் எடுத்துச் சொன்னார்கள். ஆனால் இது வரையில் அதிகாரிகள் காதில் அவர்களின் குரல் விழவில்லை. இப்போது இந்த உண்மையையும் போர்டுத் தலைவர் மறுக்கவில்லை. கிராமப் புறங்களில் கடன் வசதி குறைந்துள்ளதற்கு எப்படிப் பரிகாரம் காணலாம் என்று யோசித்து வருகிறார்களாம். ஒருகால் சர்க்காரே கடன் கொடுக்க முன் வருவார்களோ, என்னவோ? இதை ராஜாஜி ரசமான ஓர் உதாரணம் மூலம் விளக்கியுள்ளார். 'ஆண்களுக்குச் சமமாகப் பெண்களுக்கும் உரிமை தேடித் தருவதில் முனைந்துள்ள ஓர் அரசாங்கம் அவர்கள் இனி வீட்டில் சமையல் செய்ய வேண்டியதில்லை என்று உத்தரவுபோட்டு விட்டுக் குடும்பத்தினர் எல்லாரும் சர்க்கார் 'காண்டீனி'ல் சாப்பிட வேண்டும் என்று சொன்னால் எவ்வளவு அசம்பாவிதமோ, அவ்வளவு அசம்பாவிதம் தங்கக் கட்டுப்பாடு போர்ட்டின் கடன் வசதி ஆலோசனைகளும், கூட்டுறவு முறையில் மாற்று வேலை அளிக்கச் செய்யப்படும் முயற்சிகளும்' என்கிறார்.

## அமெரிக்கா செல்லும் ஆப்கன் கம்பளம்

**பா**ரதத்தைப் பாகிஸ்தானியர்கள் பங்கு கொள்ளாததற்கு முன்பு நமது அண்டை நாடாக விளங்கி வந்தது ஆப்கானிஸ்தானம். கலை, கலாசாரம் இவைகளில் மேம்பட்டுப் புராதனப் பெருமையை உடைய நாடு இது. நமது ஜனாதிபதி அவர்கள் சென்ற வாரம் ஆப்கானிஸ்தானத்தின் அழைப்பை ஏற்றுக் கொண்டு சென்றார். ஆப்கானியர்கள் கை வேலைப்பாட்டுப் பொருள்களைச் செய்வதில் வல்லவர்கள். ஆப்கானிஸ்தானில் தயாராகும் கம்பள விரிப்புக்கள் உலகப் பிரசித்தி பெற்றவை. அமெரிக்காவுக்குக் கூட ஆப்கானின் அழகான வேலைப்பாடுகளைக் கொண்ட விரிப்புக்கள் செல்லுகின்றன. வெள்ளிக் குமிழும், பூவேலைப்பாடுமுடைய குல்லாயணிந்த ஆப்கானியப் பெண் அழகான கம்பள விரிப்பைத் தயாரிப்பதில் ஈடுபட்டுள்ளதையே நீங்கள் இவ்விதழின் பொருளடக்கப் பகுதியில் காண்கிறீர்கள். மேற்கு ஆப்கானிஸ்தானத்துக் கிராமப் பெண்கள் இத்தகைய விரிப்புக்களைப் பின்னுவதற்கு ஆண்கள் கம்பளி நூலுக்குச் சாயமேற்றிக் கொடுப்பார்களாம்.






7

தன்னுடைய ஆசைகள் எல்லாவற்றையும் மறந்து தன்னை இறைவனுக்கு அர்ப்பணம் செய்து விடுவதே பக்தியின் பூரண நிலை. நாடுவதெல்லாம் இறைவனுடைய திருவடியேயாகி, பாடுவதெல்லாம் அவனுடைய புகழே என்று நிற்கும் அனன்னிய பக்தியைச் சொல்லுகிறார் ஆழ்வார்.

நாடிலும் நின்அடியே
  நாடுவன் ; நாள்தோறும்
பாடிலும் நின்புகழே
  பாடுவன்—

[நாடிலும்—எது ஒன்றையாவது நாட வேண்டும் என்றால், அது உன் திருவடியே. நாள்தோறும் பாடிலும் நின்புகழே பாடுவன்—நாள்தோறும் பாடினாலும், பாட்டுக்கள் நின் புகழைப் பற்றியே ஆகும்.]

நாடுவதும் பாடுவதும் இறைவனையே பற்றி நிற்கும் இந்த நிலையில், வேறு ஆசைகள் அனைத்தும் தாமாக அழிகின்றன. இப்படி ஆசைகள் அனைத்தையும் விட்டு விட்டால், தனக்கு என்ன ஆகும் என்கிற கவலை வேண்டியதில்லை.

  —சூடிலும்
பொன் ஆழி ஏந்தினான்
  பொன்னடியே சூடுவேற்கு
என் ஆகில் என்னே
  எனக்கு

[பொன் ஆழி ஏந்தினான்—அழகிய சக்கராயுதம் ஏந்திய திருமாலின். பொன்னடி—திருவடியை. சூடுவேற்கு—தலையில் சூடுகிற எனக்கு.]

ஆபரணமாகத் தலையிலே நான் சூடிக் கொள்வது, திருமாலின் பாதங்களே. வேறொன்று வேண்டியதில்லை. அப்படிப்பட்ட எனக்கு என்ன ஆனால் என்ன என்று பக்தியின் தைரியத்தில் பாடுகிறார் ஆழ்வார். திருமாலிடத்திலே தான் வைத்துள்ள பக்தியின் தன்மை என்னவென்றால், அதுவே எல்லா நாட்டமும் எல்லாப் பயனுமாக நிற்கிறது! பூரணமான அந்தப் பக்தி தன்னிறைவும், முற்றின்பமும் கொண்டு, தன்னிலே தான் சுகித்து, அதற்குமேல் வேறொன்றுக்கும் அவசியம் இல்லாத ஒரு பரிபூரண நிலையிலே நிற்கிறது! 'என்னாகில் என்னே எனக்கு' என்பதில் இந்த உணர்ச்சி பூரித்து நிற்கிறது!

நாடிலும் நின்னடியே
  நாடுவன் ; நாள்தோறும்
பாடிலும் நின்புகழே
  பாடுவன்—சூடிலும்
பொன்னாழி ஏந்தினான்
  பொன்னடியே சூடுவேற்கு
என்னாகில் என்னே
  எனக்கு !



**சேலையில் இழையும் இசை**

குளிர்ந்த இளம் சிவப்பு வண்ணத்தின்
பேர்ல் பொன்னிறம் பொதிந்து
உருவான இலைச் சித்திரங்கள் கொண்ட
கட்டாவ் சேலை ஒரு கனவுக் கலை

கட்டாவ் துணிகளின் ஓரத்தில்
ஒவ்வொரு மீட்டர் அளவிலும்
"கட்டாவ் மில்ஸ்" என்ற
வார்த்தைகளைக் கவனிக்கவும்

# கட்டாவ்

## வாயில்கள்

* எதிர்காலத்துக்கு முதலீடு - தேசிய பாதுகாப்புப் பத்திரங்களை வாங்குங்கள்

தி கட்டாவ் மகன்ஜி ஸ்பின்னிங் அண்டு வீவிங் கம்பெனி லிமிடெட்

தலைமைக் காரியாலயம்: லக்ஷ்மி பில்டிங், பல்லார்ட் எஸ்டேட், பம்பாய்-1 மில்கள்: ஜெயினக் ரோடு, பைகுல்லா, பம்பாய்-27 மொத்த விற்பனை நிலையம்: கோவிந்த் சவுக், முல்ஜி ஜேதா மார்க்கெட், பம்பாய் - 2 சில்லறை விற்பனை நிலையம்: 2க, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு, சென்னை - 1





எல்லைப்புற நாடுகள்

# பூடான்



மன்னர் மாளிகை என்பார்கள் மக்கள்; இல்லை, இரும்புக் கோட்டை என்பார்கள் எதிரிகள். மன்னர் நாகூச்சி கட்டிய அரண்மனை இரும்புக் கோட்டையைப் போல்தான் இருந்தது.

நபுதாரா என்றொரு மன்னன். தென் மாகாணத்தை ஆண்டு வந்தான். அவனுக்கும் நாகூச்சிக்கும் பூசல் மூண்டது. நாகூச்சி நபுதாராவை விடப் பெரிய மன்னன். பராக்கிரமசாலி. தன் வீர தீரத்துக்கு அடையாளமாகத்தான் இரும்புக் கோட்டை கட்டி அதில் வாழ்ந்தான். எனவே, நபுதாராவை ஒடுக்கத் தன் மைந்தனை அனுப்பினாலே போதுமென நினைத்தான். அதன்படி பட்டத்து இளவரசன் நபுதாராவுடன் போரிடப் புறப்பட்டான். போர் கடுமையாக நடந்தது. ஆனால் எதிர்பாராத விதமாக இளவரசன் கொல்லப்பட்டான். நபுதாரா வாகை சூடிக் கெக்கலித்தான்.

நாகூச்சிக்குச் செய்தி எட்டியதும் இடி விழுந்தது போலிருந்தது. மகனை இழந்த வருத்தத்துடன், தாமே போருக்குப் போகாது, சிறுவனான மைந்தனை அனுப்பி





வைத்து அவன் மரணத்துக்குக் காரணமானார் என்று உலகம் தம்மைப்பற்றி நினைக்குமே என்ற கவலையும் சேர்ந்தது.

மென்மோ மன்னரின் மகள். இளவரசி மென்மோவுக்கு இருபத்தொரு அம்ச அழகு இருந்ததாம். அந்த இருபத்தொரு அம்சங்கள் யாவை என்ற ஆராய்ச்சி வேண்டாம். மொத்தத்தில் அழகி. அழகுக்கேற்ற புத்திசாலி. சோகமே உருவெடுத்தாற் போலிருக்கும் தந்தையின் கவலையைப் போக்க முயன்றாள். முடியவில்லை. தந்தையின் அருகிலேயே இளவரசியும் பித்துப் பிடித்தவள் போல் அமர்ந்தாள்.

'புத்தம் சரணம் கச்சாமி' என்ற கோஷம் வாசலில் கேட்டது. மன்னனுக்கு அந்தக் கருணை பொங்கும் முகத்தைக் கண்டதும் கவலை மறைந்தது. பிட்சுவின் ஆசீர்வாதத்தைக் கோரினான். அந்தப் புத்த பிட்சுவின் பெயர் பத்மசம்பவா. இந்தியாவிலிருந்து சென்றவர்.

புத்த மதத்தை மன்னன் ஏற்றான். மன்னன் ஏற்றால் மக்களும் ஏற்றார்கள் என்று கருதக் கூடிய எட்டாம் நூற்றாண்டு. அக்காலத்தில் மன்னர்தான் தெய்வம். இப்படியாகத் தொடங்குகிறது பூடான் தேசத்தின் கதை.

இதன்பிறகு சீனத்திலிருந்தும், திபெத்திலிருந்தும், நேப்பாளத்திலிருந்தும் எதிரிகள் வந்தார்கள். போரும் பூசலுமாகத் தேசத்தில் இருந்துவந்திருக்கின்றன. அடிக்கடி பூகம்பங்களும் தீ விபத்துக்களும் ஏற்பட்டு இந்த நாட்டின் சரித்திரத் தொடர்பை நன்கு அறிய முடியாதபடி செய்திருக்கின்றன.

1907ல்தான் ஒரு முக்கிய நிகழ்ச்சி பூடானில் நடைபெற்றிருக்கிறது. பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தின் செல்வாக்கு பூடானில் மிகுந்து நாட்டின் பாதுகாப்புப் பொறுப்புக்களைப் பிரிட்டிஷார் ஏற்றுக் கொண்டனர்.

---

அழகு சொட்டும் முகமும் அமுதூறும் வாயுமாக அட்டைப் படத்தில் காட்சிதரும் சிறுவன் பூடான் தேசத்தைச் சேர்ந்தவன்தான். கிரீடமணிந்திருப்பது அரசனல்ல. அரசவையைச் சேர்ந்த நடனக் கலை வல்லுனர்களில் ஒருவன். அந்த வசீகரமிகு நாட்டின் மக்கள் அளிக்கும் தோற்றத்தையும், இயற்கை எழிலையும் கண்கவர் ஓவியங்களாக மேலட்டையிலும் இவ்விரு பக்கங்களிலும் வரைந்திருக்கிறார் ஓவியர் விஜு.





அரச குலத்தவர், தகப்பனுக்குப் பின் மகன் என்ற ரீதியில் பரம்பரை பரம்பரையாக நாட்டை ஆண்டு வர வேண்டும் என்பதும் அப்போது தீர்மானமாயிற்று. அதற்கு முன்னால் தேசத்தை நான்கு கூறுகளாகப் பிரித்து பென்லோப் (கவர்னர்) என்பவர்கள் ஆண்டு வந்தனர். இவர்களுக்குள் அடிக்கடி சண்டை பூசல் இருந்து வரும். நால்வருள் பலசாலியானவன் தேப்ராஜா என்ற பெயரில் தேசம் முழுமைக்கும் அரசனாக விளங்கி வந்தான். மக்களின் ஆத்மீக வளர்ச்சியையும், மதச் சடங்குகள், தர்ம காரியங்கள் ஆகியவற்றையும் கவனித்து ஆவன செய்யத் தர்மராஜா என்ற பெயரில் ஒருவரும் உண்டு. இவரைப் புத்தரின் மறு அவதாரமாகவே மக்கள் கருதுவார்கள்.

இன்றைய மன்னர் ஜிக்மே தோர்ஜி வாங்சக் 1907ல் பிரிட்டிஷாரின் உதவியுடன் அரசுரிமை பெற்ற வம்சாவளியினரில் மூன்றாமவர். தலைநகர் திம்புவில் புலித்தோல், சிறுத்தைத் தோல் ஆகியவை விரிக்கப்பட்டிருக்கும் தரை, நல்ல வேலைப்பாடமைந்த அரியாசனங்கள், அழகிய வண்ண ஓவியங்கள் தீட்டப்பெற்ற சுவர்கள் இவற்றை உடைய அரண்மனையில் வாழ்கிறார். நாட்டுக்கு நன்மை விளைவிக்கும் சீர்திருத்தங்கள் பலவற்றைச் செய்ய வேண்டும் என்ற ஆர்வம் கொண்டவர். அடிமை வியாபாரம், ஜாதி வேற்றுமைகள் இவற்றை அகற்றியதுடன், மாதர்களின் முன்னேற்றத்திலும் நல்வாழ்விலும் சிரத்தை எடுத்துக் கொண்டுள்ளார். அரசன் வைத்ததே நாட்டில் சட்டம், அவனை மீறி யாரும் எதுவும் செய்துவிட முடியாது. மரண தண்டனை விதிக்கும் அதிகாரமும் அவருக்கு உண்டு. என்றபோதிலும் மன்னர் ஜனநாயகப் பண்புகளில் பற்றுக் கொண்டவர். தமக்கு ஆலோசனை கூற எட்டுப் பேர்கள் அடங்கிய மந்திரி சபையை உருவாக்கியிருக்கிறார். நூற்றி முப்பது அங்கத்தினர்களைக் கொண்ட சட்ட சபையும் உண்டு. நல்லன கெட்டனவற்றை மனம் விட்டு விவாதிக்கும் இவர்கள் சுமார் ஐயாயிரம் மக்களுக்கு ஒரு பிரதிநிதி விதம் சட்ட சபையில் கூடுகிறார்கள். அப்படியென்றால் நாட்டு மக்களின் எண்ணிக்கையைக் கணக்குப் போட்டுப் பாருங்கள். 18,000 சதுர மைல் பரப்பளவுள்ள, அதாவது கேரள மாகாணத்தை விட விஸ்தீரணம் சற்று அதிகமாயுள்ள பூடானின் ஜனத்தொகை ஏழு லட்சத்துக்கும் குறைவு!

நம் பாரத அரசாங்கம் 1949-ல் பூடானுடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டது. அதன் பிரகாரம் பூடானின் சுதந்திரத்தை நாம் மதிக்கிறோம். அதன் உள்நாட்டு விவகாரங்களில் நாம் தலையிடுவதில்லை. ஆனால் அயல்நாட்டுக் கொள்கைகளை வகுத்துக் கொடுப்பதோடு அந்நியரின் ஆக்கிரமிப்பிலிருந்து அச் சிறிய எல்லைப்புற நாட்டைப் பாதுகாக்கிற பெரும் பொறுப்பையும் நாம் ஏற்றுக் கொண்டுள்ளோம். பின்னதற்கு மிகவும் அவசியத் தேவையான சாலைகள் அமைக்கும் வேலை மலைப் பகுதிகளில் மும்முரமாக நடைபெற்று வருகிறது. பாரத அரசாங்கத்தின் செலவில் இந்திய இன்ஜினியர்களின் ஒத்துழைப்புடன் இந்தத் திட்டம் துரிதமாக நிறைவேற்றப்பட்டு வருகிறது.

ஆனால் இன்றைக்கு ஒருவர் நகரங்களோ பெரிய கிராமங்களோ ஏதுமற்ற பூடானின் பல பகுதிகளுக்கும் சென்று பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டால் காடு மலைகளைத் தாண்டிப் பயங்கரமான ஒற்றையடிப் பாதைகளில் கோவேறு கழுதைமீது ஏறித்தான் செல்ல வேண்டியிருக்கும். குதிரைகளைக்கூட இந்தச் செங்குத்தான பாதைகளில் நம்புவதற்கில்லை. சக்கரங்கள் உள்ள வண்டிகளைப் பற்றி மக்கள் அறிந்திருக்கிறார்களே ஒழியப் பயன்படுத்துவது கிடையாது, முடியாது! சரிவான, சறுக்கலான பாதைகளில் கரணம் தப்பினால் மரணம் என்ற கதைதான். இத்தகைய மலைப் பாதைகளில் செல்லும் போது வன விலங்குகளின் உறுமல் ஒலி உடலைக் கிலியினால் வெட வெடக்க வைக்கும். ஆறாயிரம் அடி உயரத்திலும் திடுமென மூடுபனித் திரையை விலக்கிக் கொண்டு யானை ஒன்று எதிர்ப்படும். ஓரிடத்தில் ஆயிரக்கணக்கான வண்ணத்துப் பூச்சிகள் அள்ளித் தெளித்தது போன்ற பல்வகை வர்ணங்களுடன் கூடிய சிங்காரத் திரையிட்டது போல் குப்பென்று பறந்து போகும். அந்தக் கண்கொள்ளாக் காட்சியில் மனத்தைச் சில விநாடிகள் லயிக்க விட்டோமானால் கால்களில் அதற்குள் நாலைந்து அட்டைகள் ஒட்டிக் கொண்டு ரத்தத்தை வேகமாக உறிஞ்சிக் கொண்டிருக்கும். பூட்ஸ்களில் புகையிலையையும், ஸாக்ஸுகளுக்குள்ளே உப்பையும் திணித்துக் கொள்ளாமல் இப் பகுதிகளில் நடக்கவே மாட்டார்கள். அட்டைகளுக்கு அவ்வளவு தூரம் பயப்பட வேண்டும் இங்கே.

பூடானில் காட்டாறுகள் மீதாக அமைக்கப்பட்டுள்ள பாலங்கள் மிகச் சொற்பம். அவற்றில் உள்ளதற்குள் உறுதியானது என்று கருதப்படக் கூடிய குறுகலான பாலங்களே அதன்மீதாக நடக்கும்போது கிடுகிடுத்து நம் கால்களைப் பயத்திலே உதறச் செய்யும் என்றால் மற்றப் பாலங்கள் எந்த லட்சணத்தில் இருக்கும் என்று ஊகிக்கலாம்.

இத்தகைய அபாயங்களை யெல்லாம் பொருட்படுத்தாமல் தைரியமாகச் சென்றால் சாலை ஓரத்தில் ஒரு பூடானியன் நின்று மிகுந்த உற்சாகத்துடன் பலமாகக் கூச்சல் போட்டுக் கொண்டிருப்பான். தன்னைப் பற்றிய வீர தீரப் பிரதாபங்களை வெகு தொலையில் நெல் வயலில் அறுவடைக்கு இறங்கியுள்ள பெண்களிடம் மார் தட்டிக் கூறிக் கொள்கிறான் என்பதைக் கேட்டறிவோம். எதிரொலிகள் அடங்கிய பிறகு பெண் குரல் ஒன்று பதிலளிப்பது மெல்லச் செவிகளுக்கு எட்டும். ''நீ ஒரு ஆண் பிள்ளையா என்ன? அடடா! இத்தனை நாட்களாகத் தெரியாமல் போயிற்றே!'' என்று அவனை வம்புக்கிழுக்கிறாள் அந்தக் குறும்புக்காரி!

இத்தகைய வியப்பும் திகைப்பும் மிக்க காட்சிகள் அதிக நேரம் நீடிக்காது. எதிரே திபேத்திய அகதிகள் வருவார்கள். உணவு, உறக்கம், ஏதுமின்றி ஒட்டி உலர்ந்து தோற்றமளிப்பார்கள். 'இப்படி ஆயிரக் கணக்கில்

நீங்கள் நாடு விட்டு நாடு வந்து கொண்டே இருந்தால் உங்கள் அனைவரையும் எப்படிப் பராமரிக்க முடியும்? நீங்கள் திரும்பிப் போக வேண்டியதுதான்' என்று கடின இதயம் படைத்த எவருவது தப்பித்தவறிக் கூறிவிட்டாலுனும் அவர்கள் உடனே அழ ஆரம்பித்து விடுவார்கள். 'எங்களைக்கொன்றுபோடுங்கள்; சந்தோஷமாகச் சாகிறோம்; ஆனால் தயவு செய்து சீன அரக்கர்களிடம் திருப்பி அனுப்பாதீர்கள்' எனக் கெஞ்சுவார்கள்.

திபெத்தியருக்கு ஏற்பட்டிருக்கும் இத்தகைய பரிதாப நிலை சற்று ஏமாந்தால் தங்களுக்கும் ஏற்படும் என்பதை நன்கு உணர்ந்திருக்கிறார்கள் பூடானியர்கள். அதற்கு இடம் தரக்கூடாது என்ற வைராக்கியத்துடனும் விளங்குகிறார்கள்.

பூடானியர் வெளி உலகத்துடன் அதிகமாகத் தொடர்பு கொள்ளாதவர்கள்தான்; நாணயமாற்று முறையைக் கூட அறியாமல் பண்டமாற்று முறையையே இன்றைக்கும் பின்பற்றுகிற எளிய மக்கள்தான்; குடிசைத் தொழில்களில் ஈடுபட்டுச் சிறந்த கலை நுணுக்க வேலைப்பாடுகளுடன் கூடிய ஆடைகள், தந்தம் வெள்ளி மரச் சாமான்கள் இவற்றைத் தயாரித்தும் விவசாயத்தில் ஈடுபட்டும் அமைதியாகக் காலத்தை ஓட்டுபவர்கள்தான். ஆனால் இவர்கள் சுதந்திர ஆர்வம் மிக்கவர்கள், அடிமை வாழ்வை வெறுப்பவர்கள், அந்நியனை நாட்டினுள் அடியெடுத்து வைக்க அனுமதிக்க மாட்டோம் என்ற உறுதியுடன் விளங்கும் தீரர்கள்.

கடந்த நூறு வருஷங்களாகவே இந்தியா ஒவ்வொரு ஆண்டும் மான்யமாகக் கொடுத்து வரும் சுமார் ஐந்து லட்சத்து இருபத்தையாயிரம் ரூபாய்தான் பூடானுக்குப் பிரதானமான வருவாய். இந்த நிலையில் தன் வருமானத்தில் பாதிக்கு மேல் பாதுகாப்புக்காகவே செலவழிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது அந்நாட்டு அரசாங்கத்துக்கு. இந்தச் சங்கடங்களையெல்லாம் தாங்கிக் கொள்கிற தெம்பு இருக்கிறது சர்க்காருக்கு. பதினெட்டு முதல் ஐம்பது வயது வரை உள்ள அனைவரும் ராணுவ சேவையில் குறிப்பிட்ட சிறிது காலத்துக்கு ஈடுபட வேண்டும் என்ற சட்டமும் இயற்றியிருக்கிறது அரசாங்கம். நூற்றி நாற்பது கெஜம் வரை பாயும் கூரிய அம்புகளைக் குறி பார்த்து எய்வதில் கைதேர்ந்த பூடானிய வீரர்கள் இன்று பிரிட்டிஷ் 'ஸ்டென் கன்'களையும் பயன்படுத்தப் பயின்றிருக்கிறார்கள். மூன்று அல்லது நான்கு மைல் உயரத்தில் அமைந்துள்ள எல்லைப்புற முகாம்களில் விழிப்புடன் இருந்து பாதுகாத்து வருகிறார்கள். இவர்கள் கடுங்குளிரிலும் சரி, வெண்பனி மூடிய பூமியிலும் சரி வெறுங்காலுடன் நடக்கப் பழகியவர்கள்.

இன்று திபெத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் சீனு தன் வலக் கரத்தின் ஐந்து விரல்களாக, லடாக், நேபாளம், பூடான், சிக்கிம், நேபா ஆகிய ஐந்து பிரதேசங்களையும் கருதுகின்றது. இதனை நம்மைக் காட்டிலும் மிகத் தெளிவாகவே பூடானியர் புரிந்து கொண்டிருக்கிறார்கள். தேசத்துக்குத் தீங்கு நேரா திருக்க, அமைதிக்குப் பங்கம் உண்டாகா திருக்க, சதா சர்வ காலமும் பிரார்த்தனைச் சக்கரங்கள் சுழலுகின்றன, பிரார்த்தனைக் கொடிகள் பறக்கின்றன. ஆனால் துர்த்தேவதைகள், மந்திர மாயங்கள் இவற்றில் நம்பிக்கை வைக்கும் பான் மதம் மட்டுமின்றி, பௌத்த மதம், ஹிந்து மதம் ஆகியவற்றின் முக்கிய கோட்பாடுகளையும் தங்கள் தொழுகையில் கடைப் பிடிக்கின்ற பூடானிய மக்கள் பிரார்த்தனையை மட்டும் நம்பி இருக்கவும் இல்லை. சீனர்களின் வஞ்சனையைப் பற்றி அறிவார்களாதலால் நவீன ஆயுதங்களுடன் தயாராக உள்ளார்கள்.

நம் தமிழ் நாட்டில் நடக்கக் கூடாத காரியம் ஏதேனுமிருந்தால் 'புலிப்பால் கொண்டு வருவது போல்' என்போம்.

ஆனால் பூடானியரோ பன்னெடுங்காலமாய் நாய்க் கடிக்கு மருந்தாகச் சிறுத்தைப் புலியின் பாலை அருந்தி வந்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட வீரர்களா சீனப் பதர்களுக்குப் பயந்து விடப் போகிறார்கள்?

# வீட்டிற்கு ஓர் நூல் நிலையம்




## வீட்டிற்கு ஓர் நூல் நிலையம் திட்டத்தில் சேரக் கடைசி நாள் மே 31

நீங்களும் உங்கள் மக்களும் வீட்டில் படித்து மகிழ, மேலும் படிப்பறிவு பெற உங்கள் வீட்டிலே உங்களுக்குச் சொந்தமான அரிய நூல் நிலையம் வேண்டுவது மிக மிக அவசியம் என்று சொல்லவா வேண்டும். மாதம் ஐந்து ரூபாய் - நீங்கள் வெகு சுலபமாகச் செலவு செய்யலாம் - 18 மாதங்களுக்குத்தான். ரூ. 110 பெறுமதிப்புடைய புத்தகங்கள் (தபால் செலவு, மற்ற எந்த வகைச் செலவுகளுமில்லாமல்) உங்கள் வீடு தேடி வரும். இந்த நல்ல வாய்ப்பை அதிக மதிகமான மக்கள் பயன்படுத்திக் கொண்டுவிட்டார்கள். அதை! நீங்களும் அடைந்து பயன் பெறுங்கள்.

### திட்ட விபரம்

இந்தத் திட்டத்தில் 18 வயதிற்கு மேற்பட்ட ஆண், பெண் யாவரும் சேரலாம். மாதம் ஒன்றுக்கு ரூ. 5 விதம் 18 மாதங்கள் தொடர்ந்து செலுத்தவேண்டும். அதாவது

### தினம் ஒன்றுக்கு 17 காசுக்கும் குறைவாகவே ஆகிறது

- முதல் சந்தா கிடைத்ததும் இலவசமாக ரூ. 5 விலையுடைய புத்தகங்களும், விபரப்பட்டியலும் அனுப்பப்பெறும்.
- 6-வது மாதக் கடைசியில் ரூ. 25 மதிப்புடைய புத்தகங்களுடன், இலவசமாக ரூ. 5 மதிப்புடைய புத்தகங்கள் அனுப்பப்பெறும்.
- 12-வது மாதக் கடைசியில் ரூ. 30 மதிப்புடைய புத்தகங்களுடன், இலவசமாக ரூ. 5 மதிப்புடைய புத்தகங்கள் அனுப்பப்பெறும்.
- 18-வது மாதக் கடைசியில் ரூ. 35 மதிப்புடைய புத்தகங்களுடன், இலவசமாக ரூ. 5 மதிப்புடைய புத்தகங்கள் அனுப்பப்பெறும்.

**மேலே கண்டபடி 18வது மாத இறுதியில் ரூ. 110 மதிப்புடைய புத்தகங்கள் தபால் முதலிய எவ்விதச் செலவுமின்றி, நீங்கள் செலுத்திய ரூ. 90க்குக் கிடைக்கிறது.**

புத்தகங்கள் மேலே கண்ட தவணைகளில் அல்லாது மாதா மாதம் அனுப்பப்படமாட்டாது

### விதிகள்

1. பிரதி மாதமும் 10ம் தேதிக்குள் சந்தாவை செலுத்திவிட வேண்டும்.
2. புத்தகங்களை, கழகம் அனுப்பிய விலைப்பட்டியலிலிருந்துதான் தேர்ந்தெடுக்க வேண்டும்.
3. 18 மாதங்களும் சந்தா செலுத்தாதவர்கள் இலவசப் புத்தகங்கள் பெறும் வாய்ப்பை இழக்கிறார்கள்.
4. சில மாதங்கள் சந்தாச் செலுத்தி நிறுத்தியவர்களுக்கு, அவர் செலுத்திய தொகையளவுக்குத்தான் புத்தகங்கள் அனுப்பப் பெறும் அவ்வாறு அனுப்பும்போது, இலவசமாக ஏற்கெனவே அனுப்பப்பட்ட புத்தகங்களின் விலையைக் கழித்து மீதித் தொகைக்குத்தான் புத்தகங்கள் அனுப்பப்பெறும்.

இந்த திட்டத்தின் சம்மந்தமான நடவடிக்கைகளுக்கு 'ஜுரிஸ்டிக்ஷன்' சென்னை நகரம்.

## இலவசமாகப் பெறும் புத்தகங்களின் பட்டியல்

1. அனுவை அறிக, நா. வி. நாகராஜன்: ரூ. 1-50; 2. அரபுக் கதைகள், அ. லெ. நடராஜன்: ரூ. 2-00; 3. அறம் பிழைத்தது, ரூ. 2-00; 4. ஆபத்தில் சிக்கிய அபலைகள், மேதாவி: ரூ. 1-50; 5. இந்தியாவின் கதை, முல்க்ராஜ் ஆனந்த்: ரூ. 1-00; 6. உதயசந்திரன், விக்ரமன்: ரூ. 4-00; 7. உலகத்துச் சிறந்த நாவல்கள், க. நா. சுப்பிரமணியம்: ரூ. 1-50; 8. உலகப் புகழ்பெற்ற நாவலாசிரியர்களும் நாவல்களும், ரூ. 2-00; 9. உலகில் ஒரு மேதை, ய. லக்ஷ்மிநாராயணன்: ரூ. 1-50; 10. உருவகக் கதைகள், க. ரத்தினம்: ரூ. 1-50; 11. ஐந்திணை இன்பம், ரூ. 1-25; 12. என் காதலி, சிரஞ்சீவி: ரூ. 1-00; 13. ஒளி பிறந்தது, எம். ஏ. அப்பாஸ்: ரூ. 1-00; 14. ஒரே ரத்தம், எம். ஏ. அப்பாஸ்: ரூ. 5-00; 15. கணவனின் ரகசியம், மேதாவி: ரூ. 3-00; 16. கள்ளத் தோணி, எம். ஏ. அப்பாஸ்: ரூ. 2-50; 17. கல்வியின் இலட்சியம், கே. ராமராஜன் & எம். எஸ். கல்யாணசுந்தரம்: ரூ. 3-00; 18. கலையின் விலை, எம். ஏ. அப்பாஸ்: ரூ. 1-50; 19. காட்டுப் பாக்கம் கன்னம்மா, சிரஞ்சீவி: ரூ. 1-50; 20. கால நாகம், ய. லக்ஷ்மி நாராயணன்: ரூ. 1-50; 21. கார்வர் நிரச் செயல்கள், தமிழன்பன்: ரூ. 2-50; 22. கூண்டுக்கிளி, ஹரீந்திரநாத் சட்டோபாத்யாயா: ரூ. 1-00; 23. சமையல் கலை, சீதாலெக்ஷ்மி: ரூ. 1-00; 24. சொந்தத் தொழில், ஆர். தயாநிதி: ரூ. 2-00; 25. தமிழ் நாட்டுச் சரித்திரக் கதைகள், பி. ஸ்ரீ: ரூ. 1-75; 26. தமிழ் வளர்த்த சான்றோர், ரம்போலா மாஸ்கரேனஸ்: ரூ. 1-50; 27. தர்மரக்ஷகன் (நாவல், கதை, கட்டுரை): ரூ. 1-00; 28. திறந்த ஜன்னல் மர்மம், மேதாவி: ரூ. 1-50; 29. தெய்வங்கள், எம். ஏ. அப்பாஸ்: ரூ. 2-00; 30. தொழில் செய்வது எப்படி? ஆர். தயாநிதி: ரூ. 1-60; 31. பத்தினிகள் பிரைவேட் லிமிடெட், மேதாவி: ரூ. 1-50; 32. பழங்காலத்துச் சீனக் கதைகள்: ரூ. 2-00; 33. பாகிஸ்தான் கதைகள், எம். ஏ. அப்பாஸ்: ரூ. 2-50; 34. பாரத நாட்டுச் சரித்திரக் கதைகள், பி. ஸ்ரீ: ரூ. 1-75; 35. புதுச்சேரியைப் பாருங்கள், மன்னர் மன்னன்: ரூ. 1-00; 36. பேயாய்த் திரிந்த பித்துக்குளி, சிரஞ்சீவி: ரூ. 1-50; 37. போலி இளவரசன், நா. வயிரவன்: ரூ. 1-00; 38. மகாபாரதம், அ. லெ. நடராஜன்: ரூ. 2-50; 39. மனித மிருகம், எமிலிஜோலா: ரூ. 1-50; 40. மாயமாய் மறைந்த பெண் போலீஸ், மேதாவி: ரூ. 1-50; 41. மானிட உடல்: ரூ. 5-00; 42. மோசம் போனேன் கோவிந்தா, சிரஞ்சீவி: ரூ. 1-50; 43. ருஷ்யக் கதைகள், நா. பாஸ்கரன்: ரூ. 1-50; 44. ரைட் லெப்ட் ராதா ராணி, மேதாவி: ரூ. 1-50; 45. வாழத்தான் வேண்டும், மாஜினி: ரூ. 1-75; 46. ஜீவப் பிரவாகம், (நாவல், கதை, கட்டுரை): ரூ. 1-00; 47. ஹிந்துபத பாதுஷாஹி, (ஹிந்து சாம்ராஜ்ய சரித்திரம்) வீர சாவர்க்கர்: ரூ. 3-75.

**குறிப்பு:** மேலேயுள்ள பட்டியலிலிருந்து ரூ. 5 பெறுமான புத்தகங்களின் பெயரைக் குறித்து முதல் சந்தாவான ரூ. 5 உடன் அனுப்ப வேண்டும். இப்பட்டியலில் கண்ட சில புத்தகங்கள் விற்பனையாகி இருக்கலாம். ஆதலால் அங்கத்தினர் அதிகமான புத்தகங்களைக் குறித்து எழுதினால் கிடைக்காத புத்தகங்களுக்குப் பதிலாக வேறு புத்தகங்கள் அனுப்பத் தோதாக இருக்கும்.

---

**வீட்டிற்கு ஓர் நூல் நிலையம்**

தென் இந்திய புத்தகத் தொழிற் கழகம், த. பெ. எண் 756, சென்னை-8

ஐயா,

நான் "வீட்டிற்கு ஓர் நூல் நிலையம்" திட்டத்தில் அதன் விதிகளுக்கு உட்பட்டு அங்கத்தினராகச் சேர விரும்புகிறேன். இத்துடன் முதலாவது தவணைத் தொகை ரூ. ஐந்து மணியார்டர் மூலம் / போஸ்டல் ஆர்டர் மூலம் அனுப்பியிருக்கிறேன்.

தேதி........................ கையொப்பம்........................................

பெயர்............................................ தொழில்........................................

முகவரி............................................ ........................................

............................................ ரயில் நிலையம்........................................

K. 2/26/5

---

**தென் இந்தியப் புத்தகத் தொழிற் கழகம்**

# அறிவுக்கன
# அருட்புன

கதாதரருக்கு அம்பிகை பிரத்தியட்சமாகத் தரிசனம் தந்த அந்த நிகழ்ச்சியை 'அதிசயம்' என்று ஏன் சொல்ல வேண்டும்?

'அழுதாலுன்னைப் பெறலாமே' என்று மணிவாசகர் பாடியது போல் அழுதழுது கரைந்தார் கதாதரர். அந்தரங்க சுத்தத்துடன் வேறெவ்வித நினைவுமில்லாமல் ஒருமையுடன் அவளது திருவடி மலர்களையே அல்லும் பகலும் நினைந்து பக்தி பண்ணினார். அனலிலிட்ட புழுவாகத் துடிக்கும் இத்தகைய ஒரு பக்தனுக்காக அன்பு வடிவான தேவி தரிசனம் அளிக்காவிட்டால்தானே அதை அதிசயம் என வேண்டும்?

இருந்தாலும் நாம் அதிசயிக்கிறோம் என்றால் அதற்குக் காரணம் நம் உள்ளத்தின் கோளாறுதான். ஏதோ ஒரு மகா சக்திதான் உலகையெல்லாம் இயக்கி வைக்கிறது என்று விஞ்ஞான பூர்வமாக நாம் ஒப்புக் கொண்டாலும் அந்தச் சக்தி வடிவு தரித்து வந்து தரிசனம் தரும் என்றால் அது நமக்கு அதிசயமாகவே இருக்கிறது. 'சின்னம் ஒன்று இல்லாவிடில் தத்துவத்தைக் கிரகித்துக் கொள்ள முடியாது என்பதால்தான் கடவுளுக்குத் தெய்வ மூர்த்தங்களாக உருவகங்கள் அமைத்து வழிபடுகிறோம்' என்று திரும்பத் திரும்ப நாம் படித்து வருவதுதான் இதற்குக் காரணம்.

'தெய்வங்கள் எல்லாம் சின்னம்; சின்னம் மட்டுமே' என்ற எண்ணத்தைத் தீவிரமாக வளர்த்துக் கொள்வது இறுதியில் அன்புத் தத்துவத்தையே சின்ன பின்னமாக்கும் கொள்கை என்று கூடக் கூறலாம். இந்தப் பிரபஞ்சத்



யுக்கும் நமக்கும் எது மூலமோ அது உருவற்றதாகவும், குணமற்றதாகவும் இருக்கலாம். என்றாலும், இத்தனை உருவங்களையும், குணங்களையும் தோற்றுவித்திருப்பது அதுதான். அப்படியிருக்க, தன்னைக் கண்களால் கண்டும், தன்னுடன் வாயால் பேசியும், தனக்குச் சரீரத்தால் தொண்டு செய்தும் ஆனந்தமுற வேண்டும் என்று உள்ளன்புடன் விரும்புவோருக்கு அருள் செய்வதற்காக அது தனக்கென்று உருவமும், குணமும் ஏற்றுக் கொண்டு வரும் என்பதில் ஏன் ஐயம் கொள்ள வேண்டும்?

சர்வ சக்தி வாய்ந்த கடவுளுக்குத் நமக்கென ஓர் உருவம் எடுத்துக்கொள்ளும் சக்தி மட்டும் இல்லாமற் போய்விடுமா?

உளனெனில் உளனவன்
உருவமிவ் வுருவுகள்
உளனலன் எனிலவன்
அருவமிவ் வருவுகள்

என்று நம்மாழ்வார் கூறியதற்குமேல் சொல்வதற்கில்லை.

மெய்ஞ்ஞானப்படியும், விஞ்ஞானப்படியும் எப்படிப் பிரபஞ்சத்திலுள்ள சகல வஸ்துக்களும் ஏதோ ஒன்றின் பலபடித்தான தோற்றங்கள் தானே, அதே மூலப் பொருளின் ரூப பேதங்களே எல்லாத் தெய்வங்களும். இப்படி உணர்ந்து, தெய்வங்களிடையே உயர்வு தாழ்வு கற்பிக்காமலிருப்பதோடு நிற்க வேண்டுமேயன்றித்தெய்வங்களெல்லாம் பக்தியின் கற்பனை, அல்லது பக்திக்கு இலக்காகும் ஒரு சின்னம் என்று மொழிவது சரியாகாது.

நம் நாட்டின் அற்புதமான ஆலயங்களும், அழகுப் பிம்பமான தெய்வத் திருமூர்த்தங்களும், நம் மக்களின் நாவில் உலவும் அன்பு மயமான ஆயிரமாயிரம் கதைகளும் கவிதைகளும் கீதங்களும் எந்த உருப்படைத்த பரம் பொருளை இதயமாகக் கொண்டு உருவாகியிருக்கின்றனவோ அந்த உருவம் படைத்த பரம்பொருளை ஒரு மாற்றுக் குறைவாக மதிப்பிடுவது நம் நாகரிகத்துக்கே விரோதமாகும்.

அடியார்கள் தங்களது இதயக் குகையில் புரியும் சாதனைகளை நாம் யாவரும் புரிவது முடியாத காரியம். ஆனால் பரிசோதனாலயத்தில் விஞ்ஞானி புரியும் சாதனைகளையெல்லாம் நாம் செய்து பார்க்காவிடினும் தயங்காமல் ஏற்றுக் கொள்ளவில்லையா? அப்படியிருக்க அடியார்கள் கண்ட முடிவுகளில் மட்டும் ஏன் சந்தேகம் கொள்ள வேண்டும்? நமக்கு கதாதரரைப் போலக் 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க'த் தெரியுமா? அன்னையைக் காணாவிடில் கத்தியால் தம்மையே வெட்டிக்கொண்டு சாவது என்று முடிவு செய்த பக்தியின் பயனில் அதிசயிக்க என்ன இருக்கிறது!

சர்வேசுவரியான பவதாரிணி அழகுகளின் நிலைக்களனாக கதாதர



ரா. கணபதி

ரின் முன்பு உயிர்ப் பொலிவுடன் நின்றாள். இத்தனை காலமாக எந்தத் தரிசனத்துக்காக அவர் துடிதுடித்துக் கொண்டிருந்தாரோ அந்த அமிருத தரிசனம் அவருக்குக் கிட்டியே விட்டது!

ஆனால் எடுத்த எடுப்பில் அந்த அன்பு வெள்ளத்தை கதாதரரால் தாங்க முடியவில்லை.

ஆம், அது வெள்ளமேதான்!

ஓடையின் கரை விளிம்பில் தொத்திக்கொண்டுள்ள ஓர் அருகம்புல் வெள்ளத்தைக் காண வேண்டுமென்று விரும்பினால் எப்படி இருக்கும்? கரையை அறுத்துக் கொண்டு செல்லும் நீரோட்டத்திலேயே மூங்கி, அதனுடனேயே அருகம்புல்லும் ஓட வேண்டியதுதானே? வெள்ளத்திலிருந்து விலகி, அதனைக் 'காண'ப் புல்லால் முடியுமா ?

அம்பிகை வெள்ளத்தையும் இப்படித்தான் கதாதரரால் முதல் தரிசனத்தின்போது 'காண' இயலவில்லை.

'எவள் கண்ணிலிருந்து கொண்டு கண்ணுக்குள் உறைகிறாளோ, எவளைக் கண் அறிந்து கொள்ளவில்லையோ, எவளுக்குக் கண் உடலாகிறதோ, எவள் கண்ணின் உள் நின்று கண்ணை ஆள்கிறாளோ' அப்படிப்பட்ட அம்பிகையை எப்படிக் காண முடியும்?

வெள்ளத்தோடு அடித்துச் செல்லப்பட்ட கதாதரர் புற உணர்வுகள் சகலமும் மாய்ந்து போகத் தரையில் அப்படியே மடேரென்று சாய்ந்து விட்டார்.

தேவியின் முதல் தரிசனம் பற்றிப் பரமஹம்ஸரின் பாவனமான மொழித் தேறலைச் சிறிது பருகுவோம்:

''அவளைத் தரிசிக்க முடியவில்லையே என்பதால் அன்று என் இதயத்தில் தாங்கொணாத வேதனையாக இருந்தது. ஈரத் துண்டிலுள்ள நீரவ்வளவையும் பிழிய வேண்டும் என்பதற்காக ஒருவன் அதனை ஆத்திரத்துடன் முறுக்கினால் எப்படி இருக்குமோ அதேபோல் என் இதயத்தையும் பிடித்துக் கொண்டு யாரோ பிழிவது போலிருந்தது. அம்பிகையின் தரிசனத்தை நான் பெறப் போவதேயில்லை என்ற எண்ணம் என்னைக் குத்திக் குடைய நான் மனமுடைந்து செத்து வந்தேன். இதே போல வெதும்பி வாழ்வதில் பயனில்லை என்று முடிவு செய்தேன்.

''அப்போது என் கண்கள் அம்பிகையின் ஆலயத்தில் உள்ள கத்தியின் மீது தற்செயலாக விழுந்தன. அந்தக் கணமே என் உயிரைப் பலியிட்டுவிடுவது என்று தீர்மானித்தேன். வெறி பிடித்தவனைப் போல ஓடிக் கத்தியைப் பிடித்து விட்டேன்.

''அந்த அளவிலேயே தேவியின் அற்புதமான தரிசனத்தைப் பெற்றேன்.

''சந்நிதியும், நுழைவாயில் கதவுகளும், சுற்றுக் கோவில்களும் மற்ற எல்லாமும் அடியோடு மறைந்தன. எங்குமே எதுவுமே இருக்கவில்லை. கரை காணாத அனந்தமான ஆனந்த ஒளி வெள்ளம் ஒன்றையே நான் கண்டேன். எங்கெங்கு பார்வை எட்டினாலும் அங்கங்கும் அடுத்து அடுத்து ஒளி அலைகளே பாய்ந்து பாய்ந்து வந்தன. நாற்புறமும் கொந்தளித்துப் புயல் வீசிக்கொண்டு ஆவேச வேகத்தில் வந்தன. வெகு விரைவிலேயே அவ்வளவு அலைகளும் என்மீது மடிந்து விழுந்தன. ஒளிக் கடலின் இறுதி அறியாத அடிவாரத்துக்குள் என்னை அந்த அலைகள் முழுக்கி ஆழ்த்தின. நான் திணறினேன். திண்டாடினேன். ஸ்மரணை இழந்தேன்.

''ஸ்மரணை இழந்து வீழ்ந்தேன். அன்று முழுவதும் சென்றது. மறு நாளும் கழிந்தது. ஆனாலும் என்னுடைய இதய அந்தரங்கத்தில் அடர்ந்து செறிந்த ஆனந்த ஓட்டம் அலைபாய்ந்து கொண்டே இருந்தது. அது போன்ற ஆனந்த அநுபவத்தை நான் அதற்கு முன் கண்டதில்லை. தேவி என்ற தேஜோமயத்தை நேரடியாக உணர்ந்த ஞானம் என்னில் நிறைந்தது.''

தவ்வித் தவ்விக் கொண்டு கடலும் நதியும் நெருங்கி வந்து இப்போது இணைந்தே விட்டன.

ஆகா, எத்தகைய துரிய அநுபவம் அது! பரமானந்த வெள்ளத்தை வெளியில் கண்டதோடு மட்டுமின்றி, தமக்குள்ளும் அதனைக் கண்டுவிட்டார் கதாதரர். 'வெள்ளத்தினுள்ளான்.... உள்ளத்தினுள்ளான்' என்று ஆழ்வார் பாடியது இவரது நாடியில் நிரூபணமாயிற்று. உள்ளும் புறமும் ஒன்றே என்ற அத்வைத அற்புதத்தைப் பக்தியினாலே, பரமேச்வரியின் முதல் தரிசனத்திலேயே துய்த்துவிட்டார் கதாதரர்.

அவர் அவதரித்தது எதற்காகவோ அதன் மையக்கருவான அநுபவமிதுவே!

ஒளி வெள்ளம் இறுகியது. விரல் மலரும், பாத மலரும், கர மலரும், கண் மலரும், முகமலரும் கொண்ட—மென்மையில் மென்மையான, இனிமையில் இனிமையான, உண்மையில் உண்மையான, நன்மையில் நன்மையான நாயகி திவ்யத் திரு வடிவுடன் அவர் முன் நின்றாள். சௌந்தர்ய மூர்த்தியாக, சௌம்ய மூர்த்தியாக விடளிக்கும் வர முத்திரையும், அச்சம் நீக்கும் அபய முத்திரையும் தாங்கிய இருக் கரங்களுடன் பொலிந்தாள்.

ஆகா! இதென்ன? தேவியின் பொலிவு நலியத் தொடங்கியது. தேக நும் தோற்றம் மெல்ல மெல்லப் பிசு பிசுக்கத் தொடங்கியது. எங்கோ கரைந்து கொண்டே இருந்தாள் அவள். கடலுக்கும் நதிக்கு மிடையில் மீண் டும் கரை தட்டலாயிற்று.

ஆனந்தத்தில் சிக்கிச் செயலிழந் திருந்த கதாதரரின் இதயத்தில் சோக பிந்துக்கள் சிந்தத் தொடங்கின.

''அம்மா, அம்மா!'' என்று அவ ருடைய ஆத்மா அழைத்துக் கொண்டே யிருந்தது.

அழைப்பைப் பொருட்படுத்தாமல் அவள் மறைந்து கொண்டே யிருந்தாள்.

அழைப்பு முனகலாயிற்று; முனகல் அலறலாயிற்று. உள்ளத்தின் குரல் தொண்டையில் முட்டியது. உதடுகள் துடித்தன.

''அம்மா, அம்மா'' என்று தேம்பித் தேம்பித் தவித்துக் கொண்டே விழித் தெழுந்தார் கதாதரர்.

ஒன்றரை நாட்கள் உணர்வற் றிருந்த இந்த விந்தையான பட்டாசாரி யரைச் சுற்றி மக்கள் கூட்டமாக நின்று கொண்டிருந்தனர்.

ஆனால் கதாதரரின் கண்களுக்கு அவர்கள் அவர்களாகத் தெரியவில்லை. திரைச் சீலையில் எழுதிய சித்திரங்களாக, திட்பமற்ற வெறும் நிழல்களாகவே தெரிந்தனர். இந்த நிழல்கள் அவரைப் பற்றி விசித்திரமாகப் பேசிக் கொள் வதால் அவர் எவ்விதக் கூச்சமோ, அச்சமோ கொள்ளவில்லை.

அவருக்கு இனி அவசியமான, அத் தியாவசியமான வஸ்து ஒன்றுதான். அதுதான் அவரது பேச்சு; அதுதான் அவரது மூச்சு. அந்த அம்பிகையை மட்டுமே நினைந்தார் அவர். நினைந்து பரிதவித்தார்.

குளிர் பதனம் செய்த அறையிலிருந்து வெளியுலக வெப்பத்துக்கு மீண்டால் நமக்கு எப்படியிருக்கும்? முன்பு பழகிப் போன வெய்யில் இப்போது இன்னும் உக்கிரமாக இருக்குமல்லவா? அதே போல் தண்மையில் தண்மையான பவ தாரிணியைக் கண்டு மீண்ட கதாதர ருக்கு இக உலகம் முன்னைக் காட்டிலும் தகித்தது.

ஆனந்தக் கடலில் இருந்து வெளியே பொரிகிற மணலில் எடுத்துப் போட்ட மீனாகத் துடித்தார் அவர்.

அம்பிகையைக் காணாதிருந்த போது கதறியதை விட, ஒரு முறை கண்டபின் காட்சி நீங்கிய கதாதரர் இப்போதும் மேலும் பரிதாபமாகக் கதறலானார்.

அவளும் அவ்வப்போது தனது திவ்விய தரிசனத்தைத் தந்து மறைந்து தான் வந்தாள். ஒவ்வொரு முறை மறைந்த பின்னும் முன்னைப்போதை யும்விட இதயம் வெடிக்கக் கூவினார் கதாதரர்.

இனிப் பன்னிரண்டு நீண்ட ஆண்டு களுக்கு ஆனந்தாதீதமும், சோகாதீத முமே கதாதரரின் வாழ்க்கையாயிற்று. மனிதர்களோடு நாம் பூணும் உறவு களின் ஆனந்தத்தையும், உறவுகள் முறிவு காணும்போது பெறும் சோகத் தையும் ஒரு சின்னஞ்சிறு துளியாக்கு கிற ஆனந்தக் கடலிலும் சோக சமுத்தி ரத்திலும் மாறி மாறி மொத்துண்டார் கதாதரர். தேன் அலைகள் அவரை நக்கிக் கொடுத்த சமயங்கள் பல; தீ நாக்குகள் அவரைத் தீய்த்த சமயங்களும் பல.

மானுடர்களாகிய நாம் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்வது போலவும் ஒருவரோடு ஒருவர் பேசிக் கொள்வது போலவும் அம்பிகையும் கதாதரரும் உறவு கொண்ட இந்த அமர சம்பவங் களைப் பற்றி மானுட உணர்வுகளை மட் டுமே அறிந்த நம்மால் எப்படி உள்ளது உள்ளபடி சொல்ல முடியும்? மானுட உணர்வுகளை மட்டுமே சொல்லப் புகும் மானுட மொழியால் தெய்வமும் மனித னும் இணைந்து, அதனால் அந்த மனித னும் தெய்வமான நிகழ்ச்சிகளை எப்படி வர்ணிக்க முடியும்? அப்படி வர்ணிக்க முற்படுவது சின்னஞ் சிறு குழந்தை காஞ்சன சிருங்க சிகரத்தில் ஏற முயல்வது போல ஓர் அசட்டுத் துணிச்சலுடன் கூடிய காரியமாகவே தோன்றுகிறது. ஸ்வர ஸ்தானம் நிர்ணயிக்க முடியாத ஆத்மநாதம் போல, சாமானிய மனிதர்களின் எழுத் துக்குள் அகப்பட முடியாத இந்தச் சம்ப வங்களை வாசகர்கள் தமது அக உணர்வு மூலமும் கிரகித்துக் கொள்வார்களாக! நம் காதுக்கு நேரிடையாக எட்டாத நாத மின் அலைகள் 'ஏரியலு'க்கு அகப்படு வது போல், எழுத்துக்கு அப்பாற்பட்ட இந்த அமிருத நிகழ்ச்சிகள் உள்ளத்தின் மொழிக்குத்தான் எட்டும்.

பவதாரிணி உடலும் உயிருமாகத் தரிசனம் அளித்தபின் கதாதரரிடம் விநோத மாறுதல்களைக் கண்டது உலகம்.

முதலில் பூஜை புனஸ்காரம் எது வுமே செய்ய இயலாதவராக இருந்தார் அவர். இனிமை என்ற மதுசாரத்தை மாந்தி மாந்தி அவரது உள்ளம் திகைத் துப் போயிருந்தது. ஹிருதயரும், வேறோர் அந்தணருமாகக் காளிமாதா வின் பூஜையைச் செய்து வந்தனர்

திகைப்பு சிறிது நீங்கியவுடன் கதாதரர் மீண்டும் பூஜை புரியலானார். விக்கிரகத்துக்கு அன்றி அதனில் விகஸிக்கும் உயிருக்கே பூஜை செய்தார். அந்த இருபது பிராயத்து எளிய இளைஞரால் இந்த உன்னத உணர்வை இலேசில் தாங்க முடிய வில்லை. மீண்டும் மீண்டும் நிலைகுலைந்து வந்தார் அவர். ஆலயத்தில் சங்கீத மண்டபத்தின் மாடச் சுவரிலுள்ள பைரவ வடிவத்தை அடிக்கடி பார்ப்பார். 'தியான அநுபவத்தில் பைரவர் எவ்வளவு சாந்தமாக இருக்கிறார்? அது போன்ற சாந்தி எனக்கு ஏன் கைகூடவில்லை? ஏன் இப்படிச் சித்தம் சிதறிப் போகிறேன்?' என்று கூறிக் கொண்டு தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள முயல்வார்.

தேவியின் தாமரைத் திருவடிகளைத் தியானம் புரிய அமருவார். உடனே அவரது கணுக்காலிலிருந்து தொடங்கித் தலை வரையில் எல்லா மூட்டுக்களையும் யாரோ ஒன்றன்பின் ஒன்றாகப் பூட்டுவது போல் இருக்கும். அதன்பின் அவரால் தம் உடலை இம்மிகூட அப்படியிப்படி அசைக்க முடியாது. தேகபிரக்ஞை பரிபூரணமாக அழிந்து போகும்; தியானத்திலிருப்பார். பிறகு மீண்டும் தலையிலிருந்து கால் வரையில் உள்ள பூட்டுக்களைத் திறக்கும் சப்தம் கேட்கத் தொடங்கும். அதன்பின்தான் அவரால் தமது தேகத்தை இயக்க முடியும்.

ஆரம்ப காலத்தில் அவர் தியானம் புரிகையில் மின்மினிப் பூச்சிகள் போல ஒளித் திவலைகள் கூட்டம் கூட்டமாகப் பறப்பதைக் கண்டார். திக்குத் திகந்தமெல்லாம் பனிப் படலம் போல் ஒளிச் சல்லா பரவுவதைக் கண்டார். வெள்ளிக் குழம்பு போல் ஒளி ரசமொன்று எல்லாப் பொருள்களிலும் வியாபித்திருப்பதைக் கண்டார்.

இதெல்லாம் என்னவென்றே அவருக்குப் புரியவில்லை. அறிவுக்கனலாகிய அம்பிகையின் ஒளி வடிவம்தான் இப்படித் தோன்றுகிறது என்றும், இதுவே அருட்புனலாக இருந்து முன்பு தம்மை வெள்ளத்தில் ஆழ்த்தியது என்றும் அவரால் அப்போது புரிந்து கொள்ள முடியவில்லை. நம்முடைய இதயமும், நுரையீரலும் எப்படி இயங்குகின்றன என்று தெரியாமலே நாம் உயிர் வாழ்வது போல, தமது அநுபவங்கள் இன்னவென்று தெரியாமலே அவற்றில் வாழ்ந்து வந்தார் கதாதரர்.

''தாயே, எனக்கு என்ன நேருகிறது என்றே புரிய வில்லை. எனக்கு மந்திர தந்திரம் எதுவும் தெரிய வில்லை. எனவே இந்த அநுபவங்களை யெல்லாம் முறை செய்து கொள்ளவும் முடிய வில்லை. அம்பிகே! நீயே நேராக வந்து இதையெல்லாம் எனக்கு விளக்கி வைத்திடுவாய்! நீ எனக்கு உபதேசிக்காவிடில் வேறு யார் எனக்குக் கதி? என்னிடம் வா, ஜகதம்பிகே! வந்து அனவரதமும் உன் உணர்வைத் தா'' என்று முழு மனதுடன் வேண்டிக் கொள்வார்.

சித்கலையும், ஞான ஸ்வரூபமுமான தேவியைக் குருவாக நினைந்து, அவளுடைய சீடராகத் துடித்தார் கதாதரர். அவளும் அவருக்கு மௌன உபதேசம் அளிக்கத்தான் செய்தாள். இந்தப் பாக்கியம் யாருக்குக் கிடைக்கும்?

''எனக்கு என்ன செய்ய வேண்டும் என்று தெரிய வில்லை; என்ன பேச வேண்டும் என்று தெரிய வில்லை. உன்னுடைய அறியாப் பிள்ளையாகிய நான் என்ன செய்ய வேண்டுமோ, என்ன பேச வேண்டுமோ அதை நான் செய்யும் படியும், பேசும்படியும் நீதான் அருள வேண்டும்'' என்று கூறி அவளிடமே தம்மை ஒப்பித்துக் கொண்டார்.

'எல்லா அறங்களையும் விட்டு என்னை யாரொருவன் சரண் ' அடைகிறானோ, அவனை நான் காக்கிறேன்' என்ற வாக்கைத் தெய்வம் காப்பாற்ற ஒரு வாய்ப்பைத் தந்து விட்டார் கதாதரர். ஆம்! தெய்வம் வாக்குறுதி அளித்தது உண்மை தான். ஆனால், அது போல் சகலத்தையும் துறந்து, ஆண்டவன் விட்ட வழியாகட்டும் என்று தங்களை அர்ப்பணித்துக் கொள்பவர் யார்? கடவுள் சத்தியசந்தன் தான் என்பதை நிரூபிக்க ஒரு கதாதரர் ஏற்பட்டு விட்டார்.

தெய்வத்தை அடைவதற்காகத் தான் பூஜை. தெய்வத்தை அடைந்த பின் எப்படிப் பக்தி புரிவது என்பதற்கு ஏது சாஸ்திரமும், சம்பிரதாயமும்?

கதாதரர் தெய்வத்தை அடைந்து விட்டார். லட்சியத்தை அடைந்த அவரால் அந்த லட்சியத்துக்கு எது மார்க்கமோ அந்த மார்க்கத்தில் தம்மை எப்படிக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியும்? உலகையெல்லாம் கனவாகவும், கனவுகளை உண்மையாகவும் கண்ட அவரால் உலகத்துக்கென ஏற்பட்ட எந்தக் கட்டுப்பாடுகளையும் அநுசரிக்க முடியவில்லை. பூஜா விதிகளையும் அநுசரிக்க முடியவில்லை. தெய்வத்தை நேருக்கு நேராக வைத்துப் பூஜை புரிந்தவரல்லவா அவர்?

ஆரம்ப காலத்தில், அவர் தேவிப் பிரதிமையின் பாதங்களில் மலரிடும் போது அவற்றில் ஜீவன் மலரும். கல் கனிந்து, துவளும் கண்ணாடி போன்ற சதையாகவும், பட்டு இறுகினாற் போன்ற குருத்து எலும்பாகவும் மாறும். நிசி வானில் முளைத்த நிலாப் போல நீலப் புறங்காலின் நுனியில் நகங்கள் ஒளிரும். நிசியைத் தாங்கும் சந்தியா காலம் போலச் செக்கச் சிவந்த உள்ளங் கால்களையும் கதாதரர் காண்பார்.

விக்கிரகத்தின் கரத்தில் ஆபரணங்களை அணிவிக்கும்போது மீண்டும் கல் கனியும். புறங்கை இரவாகவும், நகங்கள் நிலவாகவும், உள்ளங்கை அந்திப் போதாகவும் உயிர் கொழிக்கும், அழகு செழிக்கும்; அன்பு தழைக்கும்; அக்கரங்கள் வரமும், அபயமும் அளிக்கும்.

சிலையின் நெற்றியில் அவர் சிந்தூரம் தீற்றும் போது மறுபடியும் கல் கனியும். முகம் நிசியாக, உதடுகள் சந்திப் பொழுதாக, குலுங்கச் சிரிக்கும் போது அவளுடைய மூரல் நிலவாக ஒளி வீசும்.

ஆரம்ப கால அநுபவம் இது.

நாளாக ஆக, அம்பிகையின் ஒரு பாதம், ஒரு கை, அல்லது ஒரு சிரிப்பை மட்டும் அவர் காண வில்லை. உள்ளங் காலிலிருந்து, உச்சந் தலை வரையில் உயிர் விம்மித் ததும்பிய தேவியையே அவர் கண்டார்.

ஆரம்ப காலத்தில் பூஜை தொடங்கிய பின்தான் அவரால் தேவியின் சாந்நித்தியத்தை உணர முடிந்தது. இப்போதோ சந்நிதியில் பிரவேசிக்கும் போதே கருணாமூர்த்தியாகிய ஜகஜ்ஜனனி தனது உடலின் ஒவ்வோர் அணுவிலும் புன்னகையைப் புலர்த்திக் கொண்டு நின்றாள்! பிரணவம் உள்பட்ட வேத அக்ஷரங்கள் எங்கிருந்து பிறந்தனவோ, காந்தர்வ வேதமாகிய சங்கீதம் எங்கிருந்து பிறந்ததோ, அந்தத் திருவாயிலிருந்து மாதுரியம் சொட்டச் சொட்ட அவருடன் பேசினாள்.

முன்பு, அவர் நிவேதனம் செய்யுங் கால் அவளுடைய நயனங்களிலிருந்து ஓர் ஒளி புறப்பட்டு நைவேத்தியங்களையெல்லாம் ஸ்பரிசித்து விட்டு மீண்டும் அந்த நயனங்களிலேயே புகும். இப்போது தேவியே கோயில் முழுதும் குளிர் நிலத்தை நிரப்பிக் கொண்டு உண்ண அமர்ந்தாள்.

''இரு, இரு! அவசரப்படாதே! நான் மந்திரம் கூறியபின் உண்ணலாம்'' என்று கதாதரர் அவளை நிதானப்படுத்தும் அளவுக்கு ஒரே ஆர்வமாக அங்கு சப்பணமிட்டு அமர்ந்தாள். தம்மையே அவளுக்கு நிவேதிக்க அவர் முன்வந்த தவத்தின் பயன் இது!

பவதாரிணியின் பொன்னடிகளில் கதாதரர் தமது தலையைப் பதித்துக் கொண்டு நீர் சொரியும் போது, அந்த நீரில் குறுகுறுத்த தேவியின் திருவிரல்கள் அசைந்தன. அவரது நெற்றியின் நரம்புத் துடிப்பும் அந்தப் பாதத்தின் ரத்தத் துடிப்பும் கலந்தன. அவள் தனது பாதங்களைப் பாங்குறப் பொருத்திக் கொள்ளும் போது அவளுடைய நூபுரங்கள் அசைய, அவற்றின் மாணிக்கப் பரல்கள் செய்த மணிநாதம் கதாதரரின் செவிகளில் ஊறின.

அன்னையின் மேனியில் படிந்த ஹாரத்தை கதாதரர் சரி செய்யும் போது அவருடைய கையில் தண்ணென்று ஒரு காற்றிழை படியும். ரோமாஞ்சனம் உண்டாகும் அவருக்கு. ஆம், எழிலையே சுவாசிக்கும் அன்னையின் நாசி முனைகள் அலர்ந்து மலர அவள் விடும் மூச்சுக் காற்றுத்தான் கதாதரரின் புறங் கையில் குறுகுறுக்கும்.

சகல ஜீவராசிகளுக்கும் எது உயிர் அளிக்கிறதோ, அந்தத் தத்துவம் சிலைக்குள் குடியேறி அதற்கு உயிர் ஊட்டியது.

விக்கிரகம் வாழ்ந்தது! (தொடரும்)

விசாரணை தொடருகிறது.

மிஸ்டர் தனபால், தங்களைச் சந்தித்த அந்த ஜமீன்தார் விமான விபத்தில் இறந்து விட்டதாகச் சொன்னீர்கள் இல்லையா?

ஆமாம். அப்படிப் பத்திரிகையில் செய்தி வந்திருந்தது.

கனம் நீதிபதியவர்களே எனது நான்காவது சாட்சியாகிய சுந்தராமனை அழைக்க விரும்புகிறேன்.

யெஸ், பர்மிஷன் கிரான்டட். கால் யுவர் விட்னஸ்!

சுந்தராமனா? செத்துப் போன சுந்தராமனைப் பற்றியல்லவா வாதிக்கப்பட்டது.

வாத வக்கீல் ஜெகநாதன் சார்! இந்த வழக்கிலே இன்னும் என்னென்ன அதிசயங்களை எல்லாம் கொண்டு வந்து நிறுத்தப் போகிறாரோ?

இந்த மனிதரை உங்களுக்குத் தெரியுமா மிஸ்டர் தனபால்?

இவரா.. இவரையா?.. நான்.. நான் இதற்குமுன் இவரைப் பார்த்ததே இல்லே...

காரியத்தைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கிட்டீரேயா! உம்ம நடிக்கிறதை இப்படியா வெளிப்படுத்துவது?

இப்படியொரு சந்தர்ப்பத்தில் எப்படி வக்கீல் சார்....?

உஸ்! உரக்கப் பேசாதீரும்.

யார் இந்த மனிதர்?

வேதாரண்யத்தைச் சேர்ந்த இவர் ஒரு முன்னாள் ஜமீன்தார். கடந்த ஏப்ரல் மாதம் மூன்றாம் தேதி இங்கு வந்தது தான் தான் என்பதைத் தவிர வேறு எதையும் சொல்லக் கூற மறுத்து நீதிமன்ற சந்நிதியில்தான் மற்ற விஷயங்களைச் சொல்ல முடியும் என்று கூறி விட்டார்.




சாமர்த்தியமான பேச்சு! ஒரு சாட்சி யார், அவர் என்ன சொல்ல வேண்டும், சொல்லப் போகிறார் என்பதையெல்லாம் வாதி வக்கீல் நன்றாக அறிவார். நீதி மன்றத்திலே எப்படிப் பேச வேண்டும் என்பதற்கெல்லாம் முன்பே ஒத்திகை நடத்தப்பட்டிருக்கிறது. என்னுடைய கட்சிக்காரர் இந்த மனிதரை இதற்கு முன் பார்த்ததே இல்லை என்கிறார். ஆகவே.....


கனம் கோர்ட்டார் அவர்களே! எதிர்த் தரப்பு வக்கீல் கண்ணியக் குறைவான முறையில் பேசுகிறார். இந்தச் சாட்சியை நான் எவ்விதமாகவும் பழக்கிக் கொண்டு வரவில்லை. என் வழக்கின் ஜீவநாடியே இந்தச் சாட்சியிடம்தான் உள்ளது. ஆகவே இவரை விசாரிக்க அனுமதியளிக்க வேண்டும்.


யுவர் ஆனர்! இந்த
ஆரம்பத்திலிருந்தே வழக்குப் பொய்யாக ஜோடிக்கப்பட்டிருக்கிறது. என்பதைத் தாங்கள் அறிந்தீர்கள். ஆகவே..
யுவர் ஆனர்! இந்தச் சாட்சியை விசாரிக்க அனுமதிக்காவிடில் என் கட்சிக்காரருக்கு அநீதி இழைத்ததாகும் என்று தான் சொல்லுவேன்.


அல்ரைட், ஆட்சேபனை நிராகரிக்கப்பட்டது. மிஸ்டர் நந்தன் இந்தச் சாட்சியை நீங்களே முதலில் விசாரியுங்கள்.
சத்தியப் பிரமாணம் செய்தாகி விட்டதல்லவா? உங்கள் பெயர் என்ன?
என் பெயர் சுந்தரராமன்.


ராணுவத்திலே நீங்கள் எந்த இலாக்காவிலே பணியாற்றி வந்தீர்கள்?
வைத்தியப் பகுதியில் - மெடிகல் கோரில் - ஜமேதாராகப் பதவி வகித்து வந்தேன்.
தொடர

## இருபதாவது அத்தியாயம்

வகுப்பறையில் சத்தியமூர்த்தி அந்தச் சொற்பொழிவைச் செய்த நேரத்தில் அவனுடைய சொற்கள், அவனுடைய உணர்ச்சி, முக பாவங்களாலும், அபிநயங்களாலும் அவன் கருத்துக்களைப் பேசிய விதம், எல்லாம் அழகு மயமாயிருந்தன. பிறரை ஏங்கச் செய்கிற வசீகரமான சொல்லுக்கும், நினைப்புக்கும் சொந்தக்காரன் யாரோ அவன் அதிசய மானவனாக இருக்க வேண்டும். அந்த விரிவுரையைக் கேட்ட மாணவர்கள் அத்தனை பேருக்கும் அவன் அப்படி ஓர் அதிசயமாகத்தான் தோன்றினான். 'ஏ மைண்ட் அட் பீஸ் வித் ஆல் பிலோ-ஏ ஹார்ட் ஹூஸ் லவ் இஸ் இன்னொஸெண்ட்' — என்று அந்தக் கவிதையின் கடைசி வரிகளையும் அவன் கூறி விவரித்து முடித்தபோது வகுப்பு முடிய வேண்டிய நேரத்துக்கு மேலும் கால் மணி நேரம் ஆகியிருந்தது. மாணவ மாணவிகள் எழுதி வைத்த சித்திரங்களைப் போல் அசையாமல் கட்டுண்டு கிடந்தார்கள். அந்தப் பாடலின் நடுவே, 'ஹௌ பியூர்?' (எவ்வளவு பரிசுத்தம்?) 'ஹௌ டியர்?' (எவ்வளவு கனிவு) என்ற தொடர்களை ஒலித்தபோதும் மோகினி பரிபூரணமாக அவன் மனக் கண்களில் தோன்றி நின்றாள். வகுப்பை முடித்து விட்டு, அவன் மாணவ மாணவிகள் பக்கம் திரும்பி, மௌனமாக நிமிர்ந்து பார்த்தபோது, அத்தனை பேருடைய கண்களும், முகங்களும் ஆச்சரியத்தினாலும், வியப்பினாலும் மலர்ந்திருப்பதைக் கண்டான். அவனிடமிருந்து புத்தகத்தைத் திருப்பி வாங்கிக்கொள்ள வந்த பாரதி, ''இந்த வகுப்பில் உள்ள எல்லா மாணவர்களும் தங்கள் வாழ்நாளில் இதற்குமுன் இப்படி ஓர் இலக்கிய நய மிக்க விரிவுரையைக் கேட்டதில்லை சார்'' என்று மகிழ்ச்சிப் பெருக்கோடு சொல்லி விட்டுப் போனாள். வகுப்பறையை விட்டு வெளியேறும்போது சத்தியமூர்த்தியைப் பின்பற்றியும், சூழ்ந்துகொண்டும் மாணவர்கள் கூட்டம் மொய்த்தது. தங்கள் மனத்துக்குப் பிடித்த ஒரு நல்ல விரிவுரையாளனைக் கண்டுபிடித்து விட்ட மகிழ்ச்சியில் முகத்திலும், மனத்திலும் ஆர்வம் பொங்கச் சூழ்ந்தார்கள் இளைஞர்கள். அவர்களுடைய அன்பு நிறைந்த பாராட்டுதல்களிலிருந்தும், ஆர்வம் நிறைந்த விசாரிப்புக்களிலிருந்தும் சிறிது சிறிதாகத் தன்னை விலக்கி விடுபட்டு வகுப்பறையிலிருந்து வெளியே வந்த சத்தியமூர்த்தி அந்த அறையின் கதவோரமாக நின்றுகொண்டிருந்த பூபதியைப் பார்த்துத் திகைத்தான்.

# பொன்



அவனைப் பின்பற்றிக் கூட்டமாக வந்து கொண்டிருந்த மாணவர்கள் நிர்வாகியே அங்கு வந்து நின்றுகொண்டிருப்பதைப் பார்த்து விலகிப் பின் தங்கினர். ஆனால் பூபதியின் முகமோ காணாததைக் கண்டுவிட்டது போல் மலர்ந்து போயிருந்தது. அந்த வகுப்புத் தொடங்கிய சிறிது நேரத்துக்கெல்லாம் அவர் வந்து நின்று கேட்க ஆரம்பித்திருக்கவேண்டுமென்று தோன்றியது.

''இளம் நண்பரே! முதலில் என்னுடைய மனப்பூர்வமான பாராட்டுதல்களை ஏற்றுக் கொள்ளுங்கள். கல்லூரி வகுப்பறையில் நிகழ்த்தப்படுகிற ஒரு சாதாரண விரிவுரையில் இத்தனை மெருகும், நயமும் அமைய முடியும் என்பதை நான் இன்றுதான் முதன் முதலாகக் கண்டேன். 'ஷீ வாக்ஸ் இன் பியூட்டி' என்று இன்னும் என் காதில் ஒலித்துக்கொண்டே இருக்கிறது' என்று கூறியபடியே அருகே வந்து

# விலாங்கு

அவன் முதுகில் தட்டிக் கொடுத்தார் அவர். மேலே விரைவாக நடந்து போக முடியாதபடி தன்னைத் தயங்கி நிற்கச் செய்துவிட்ட அந்தப் புகழுக்காக நாணினான் சத்தியமூர்த்தி. புகழோ பழியோ, எதுவானாலும் இரண்டுமே ஒரு நல்ல மனிதனை அவன் இயல்பாக நடந்து போகிற நடையிலிருந்து சில விநாடிகள் நிறுத்தித் தயங்க வைத்து விடக் கூடியவை என்பதைச் சத்தியமூர்த்தி பல முறை அநுபவத்தில் கண்டிருக்கிறான். புகழால் தயங்கி நின்றாலும் அது தயக்கம்தான். பழியால் தயங்கி நின்றாலும் அது தயக்கம்தான். எப்படித் தயங்கினாலும் சரி· தயங்கி நிற்கிறோம் என்ற

**மணிவண்ணன்**

விளைவுதான் முக்கியம். நடந்துபோகிற ஒருவனைக் கல் தடுக்கி நிற்கச் செய்தாலும் தடைதான்; கைதட்டி அழைத்து நிற்கச் செய்தாலும் தடைதான். இன்னும் சொல்லப்போனால் பழியால் தயங்கி நிற்பதைவிடப் புகழால் தயங்கி நிற்பது தான் அதிகமாக இருக்கும் என்பதைப் பல மேதைகளுடைய வாழ்க்கையில் கூட ஒப்பு நோக்கி வியந்திருக்கிறான் சத்தியமூர்த்தி. நடந்துபோவதற்கு முந்தும் வலது காலும் ஒரு நாகரிகத்துக்காகப் போக விடாமல் தயங்கி நிற்க வேண்டிய அவசியமுமாகப் பூபதியை எதிர்கொண்டான் அவன்.

ஆசிரியர்கள் வகுப்பு நடத்துவதை மறைந்து நின்று கேட்டு அவர்களுடைய தரத்தைத் தீர்மானம் செய்கிற வழக்கம் பூபதியிடம் உண்டு என்று தான் கேள்விப் பட்டிருந்த உண்மை இப்போது நிதர்சனமாகிவிட்டதைச் சத்தியமூர்த்தி கண்டான். ஆசிரியர்கள் தங்கி ஓய்வு கொள்ளும் அறைக்குள் போய் அவன் நுழைகிற வரை அவனோடு பேசிக்கொண்டே உடன் வந்தார் பூபதி. அறை வாசல் வரை பூபதி அவனோடு கூட வந்ததனால் உள்ளே உட்கார்ந்திருந்த ஆசிரியர்களில் சிலர் அவனை அதிகமாக உறுத்துப் பார்த்தார்கள். ஒரு மூலையில் உட்கார்ந்திருந்த பொருளாதார விரிவுரையாளர் மெல்ல எழுந்து வந்து குறும்புத்தனமான தொனியில் சத்தியமூர்த்தியிடம் ஒரு கேள்வி கேட்டார். ''நீங்கள் நம்முடைய கல்லூரி நிர்வாகிக்கு மிகவும் வேண்டியவர் போலிருக்கிறதே? நேற்றுதான் அந்த விருந்துக் கூட்டம் முடிந்ததும் உங்களைத் தேடிவந்து நீங்கள் செய்த சொற்பொழிவை வானளாவப் புகழ்ந்தார். இன்றோ உங்களுடன் சிரித்துப் பேசிக் கொண்டே இந்த அறை வாசல்வரை கொண்டுவந்து விட்டுப் போகிறார். பெரிய யோகக்காரர் ஐயா நீர்! பிடித்தாலும் சரியான புளியங்கொம்பாகத்தான் பிடித்திருக்கிறீர்...'' என்று அந்தப் பாமர மனிதர் தன்னை விசாரித்த விதம் சத்தியமூர்த்தியின் மனத்தை மிகவும் புண்படுத்தியது. நாகரிகமாக நினைப்பதற்கும், பேசுவதற்கும் தெரியாதவர்கள்கூடப் படித்துப் பட்டம் பெற்றவர்களாக இருப்பதை எண்ணி வருந்தினான் அவன். பூத்தொடுப்பது போல் முறையான மென்மையோடு மணக்க மணக்க உரையாடவும் பிறரோடு பழகவும் தெரியாத பலர் பெரிய பட்டங்களுக்கும், பதவிகளுக்கும் சொந்தக்காரர்களாயிருப்பதை அவன் பொது வாழ்வில் அதிகம் பார்த்திருக்கிறான். இன்று இங்கேயும் அதைத்தான் பார்த்தான். பதில் சொல்லாமல் சிரித்து மழுப்பிக் கொண்டிருக்கிற வரை இந்த விதமான பேச்சுக்கள் வளர்ந்து கொண்டே போகும் என்பதும் அவனுக்குத் தெரியும். ''வேண்டியவர் வேண்டாதவர் என்பதை இதை வைத்து எப்படித் தீர்மானம் செய்ய முடியும்? நீங்கள்கூடத்தான் நேற்றும் என்னைத் தேடி வந்து பேசினீர்கள். இன்றும் தேடி வந்து பேசுகிறீர்கள். இப்படி இரண்டு முறை தேடி வந்து பேசி விட்டதனாலேயே நீங்கள் எனக்கு மிகவும் வேண்டியவர் என்று நான் தீர்மானம் செய்துவிடமுடியுமா?'' என்று குறும்புச் சிரிப்புடனே அவன் அவரைக் கேட்ட கேள்வி பதில் ஒன்றும் சொல்ல முடியாமல் திணறச் செய்தது. அந்த விநாடியிலிருந்து அவர் சத்தியமூர்த்தியிடம் அநாவசியமாகப் பேசுவதற்குப் பயப்படத் தொடங்கினார். பொருளாதார விரிவுரையாளர் அங்கிருந்து எழுந்து சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் சத்தியமூர்த்திக்கு அருகே அமர்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்த தாவர இயல் விரிவுரையாளர் சுந்தரேசன், ''ஏதோ பேசத் தெரியாமல் பேசி விட்டார். நீங்கள் அவருக்குப் பதில் சொல்லாமல் சும்மா இருந்திருக்கலாம். வந்ததும் வராததுமாகப் புது இடத்தில் ஒருவரைப் பகைத்துக் கொண்டிருக்க வேண்டாமே?'' என்றார். சத்தியமூர்த்தி அதைக் கேட்டுச் சிரித்தான்.

''பொது வாழ்வில் பலவற்றைத் தழுவி உறவு கொள்ளத் தெரிந்திருப்பது போல் சிலவற்றைப் பகைத்து எதிர்கொள்ளவும் துணிவு வேண்டும் என்று நண்பன் குமரப்பன் அடிக்கடி சொல்லுவான். வேண்டாதவற்றிலிருந்து நம்மை அவ்வப்போது தப்பிக்கச் செய்து கொண்டு விலகித் திருப்திப்படுவதைக் காட்டிலும் வேண்டாதவற்றை நம்மிடமிருந்தே தவிர்த்து விலக்கி விடுவது புத்திசாலித்தனம் சுந்தரேசன்! இந்தப் பொருளாதார விரிவுரையாளர் என்னைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டாலும் எனக்குக் கவலை யில்லை. நான் அவருக்குப் பொருத்தமாகச் சொல்ல முடிந்த பதில் எதுவோ அதைத் தான் சொல்லி யிருக்கிறேன்.''

''இதனால் அவருக்கு உங்கள் மேல் அநாவசியமான வெறுப்பும், கோபமும் உண்டாகலாம்....''

''உண்டாகட்டுமே! இன்னொருவருடைய வெறுப்பும், கோபமும், குறுக்கிடாத பகையற்ற வாழ்க்கை எங்கே தான் இருக்கிறது?'' என்று சத்தியமூர்த்தி கேட்ட கேள்விக்குச் சுந்தரேசன் மறுமொழி கூறவில்லை. இடைவேளை

# ஆரோக்கியத்தை வளருங்கள்





WCRY-10-TAM

ஆண்டு முழுவதும்
ஆரோக்கியத்துடனிருக்க,

## குடும்பத்தினர் அனைவரும் அருந்துவது

**வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்** | சிவப்பு லேபில்

வெறும் மருந்துமட்டுமல்ல, நம்பிக்கைக்குப பாத்திரமான டானிக்குமாகும்!




- வருடம் முழுவதும் முதியோர், சிறுவர் யாவரும் சுவைத்துப் பருகுவதற்கு உகந்த இனிய டானிக் வாட்டர்பரீஸ்.
- ரத்தத்தைச் செழிக்கச் செய்து, நரம்புகளுக்கு வலுவூட்டுகிறது.
- பசியின்மைக் கோளாறுகளையும், உணவுக் குறைகளையும் சரிசெய்கிறது வாட்டர்பரீஸ். பிணியாறும் பருவத்திற்குப் பிரத்தியேகமாக உசிதமானது.
- பொது பலவீனம், ஊட்டக் குறைவு, சோர்வு, உணவிலே உலோகப் பொருள் குறைபாடு, மிதமிஞ்சிய உடல், உள்ளத் தளர்ச்சிகள் யாவிற்றுக்கும் உகந்ததெனச் சிபாரிசு செய்யப்படுகிறது வாட்டர்பரீஸ்.



**வார்னர்-லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ். ஏவில் இணைக்கப்பெற்றது)**

யின் போது சத்தியமூர்த்தி சுந்தரேசனையும் அழைத்துக் கொண்டு கல்லூரி உணவு விடுதிக்கே சாப்பிடப் போயிருந்தான். அங்கேயும் மாணவர்கள் கூட்டம் அவனைச் சூழ்ந்து கொண்டு விட்டது. ஒவ்வொரு பிரிவைச் சேர்ந்த மாணவர்களும் தங்கள் தங்கள் வகுப்புக்களுக்கு அவன் வரவேண்டும் என்று ஆசைப்பட்டார்கள். எதிர்காலத்தில் திடமான நம்பிக்கை கொள்ளச் செய்யும் அந்த இளைஞர்களின் ஆர்வம் சத்தியமூர்த்திக்கு மிகவும் இதமாயிருந்தது. பகல் இரண்டரை மணிக்கு அவன் உணவு விடுதியிலிருந்து திரும்பிய போது தமிழ்த் துறைத் தலைவர் காசிலிங்கனார் ஆசிரியர்கள் அறையின் முகப்பில் அவனை எதிர்பார்த்துக் காத்திருந்தார்.

''மிஸ்டர் சத்தியமூர்த்தி! உங்களோடு இரண்டு நிமிஷம் தனியாகப் பேச வேண்டும்'' என்ற வேண்டுகோளுடன் அவனை அணுகினார் அவர். அவர் அருகில் ஏற்கெனவே நின்றுகொண்டிருந்த மிஸ் வகுளாம்பிகை, ''புரொபஸர்! நான் உங்களை அப்புறம் பார்க்கிறேன்'' என்று குறிப்பறிந்து விலகிச் சென்றாள். சத்தியமூர்த்தியை ஒரு பக்கமாகத் தனியே அழைத்துச் சென்று தாம் சொல்ல வேண்டிய செய்தியை எப்படி ஆரம்பித்து எப்படிச் சொல்லி முடிப்பதென்ற தயக்கத்தோடு ஏதோ ஒரு விதத்தில் வார்த்தைகளைப் பின்னிப் பின்னிப் பேசலானார் காசிலிங்கனார்:

''இப்போது நான் சொல்லப் போவதெல்லாம் நம்முடைய 'டமில் டிபார்ட்மெண்ட்'டின் நன்மைக்காகத்தான். தயவு செய்து இனிமேல் எந்த வகுப்புக்குப் போனாலும் நம்முடைய டிபார்ட்மெண்டுக்குத் தொடர்புடைய ஏதாவது ஒரு பாடத்தை நடத்தி விட்டு வாருங்கள். பாடத் திட்டங்களும், யார் யாருக்கு எந்த வகுப்பு என்பதும் இன்னும் முடிவாக வில்லையானாலும், போகிற வகுப்பு எதுவாயிருந்தாலும் நான் சொல்கிறபடி செய்து விடுவது நல்லது. எதற்குச் சொல்ல வந்தேன் என்றால் இன்று காலையில் நீங்கள் பி. ஏ. முதலாண்டு மாணவர்களுக்கு...ஏதோ ஆங்கிலக் கவிதையை விளக்கி விரிவுரை நிகழ்த்தினீர்களாம். கல்லூரி நிர்வாகி அதைக் கேட்டு விட்டுப் பிரின்ஸிபாலிடம் போய் உங்களை ஒரேயடியாகத் தூக்கி வைத்துப் பேசிக் கொண்டாடியிருக்கிறார். 'இங்கிலீஷ் டிபார்ட்மெண்டுக்குப் புதுப்புது 'டீச்சிங் மெத்தேட்ஸ்' (கற்பிக்கும் வழி முறைகள்) தெரிவதற்காக வருஷத்துக்குப் பத்தாயிரம் ரூபாய்க்குக் குறையாமல் ரெபரன்ஸ் புத்தகங்களை வாங்கிக் குவிக்கிறீர்களே? மாணவர்கள் மனத்தில் பதியும்படியான அழகுணர்ச்சியோடு காலையில் அந்தப் பையன் நடத்தியதைப்போல் ஒரு கவிதை வகுப்பு யாராவது இதுவரை இங்கு நடத்தியிருக்கிறீர்களா?' என்று கல்லூரி நிர்வாகி உங்களைக் கொண்டாடியதை ஒட்டி இங்குள்ள இங்கிலீஷ் டிபார்ட்மெண்டைப் பற்றிக் குறைத்துச் சொல்லியிருக்கிறார். பிரின்ஸிபால் அவரிடம் ஒன்றும் எதிர்த்துப் பேச முடியவில்லை. பேசாமல் தலையைக் குனிந்து கொண்டு இருந்து விட்டார். நிர்வாகியின் தலை மறைந்ததும் என்னைக் கூப்பிட்டு வயிற்றெரிச்சலையெல்லாம் கொட்டித் தீர்த்துக் கொண்டாயிற்று. நீங்கள் அந்த வகுப்பில் மாணவர்களுக்கு ஆங்கிலக் கவிதையை விளக்கி விரிவுரை நிகழ்த்தியதனால் தான் இவ்வளவு வம்பும் வந்ததாம். 'இனிமேல் தமிழ்ப் பகுதியைச் சேர்ந்த ஆசிரியர்கள் எந்த வகுப்புக்குப் போனாலும் தமிழையே நடத்தச் சொல்லுங்கள். இல்லாத அதிகப் பிரசங்கித்தனமெல்லாம் வேண்டாம்' என்று என்னிடம் எரிந்து விழுகிறார் பிரின்ஸிபால். நேற்று நிர்வாகியின் வீட்டுத் தோட்டத்தில் நீங்கள் பேசியதைப் பற்றியும் பிரின்ஸிபாலுக்கு நிறைய மனத்தாங்கல் இருக்கும் போல் இருக்கிறது....''

இவ்வாறு காசிலிங்கனார் கூறியவற்றையெல்லாம் கேட்டுச் சத்தியமூர்த்திக்குச்



சிரிப்பு வந்தது. சிரித்தால் அவர் தம்மை அவமதிப்பதாக நினைத்துக் கொள்ளப் போகிறாரே என்று எண்ணிச் சிரிப்பை அடக்கிக் கொண்டு, ''உங்கள் அறிவுரைக்கு மிக்க நன்றி புரொபஸர்! நான் கவனமாக நடந்து கொள்வேன்'' என்று சத்தியமூர்த்தி அவருக்குப் பதில் கூறினான். ''ஒன்றும் மனத்தில் வைத்துக் கொண்டு வேதனைப் படாதீர்கள். உடனே சொல்லி விடுவது நல்லதென்று உங்களைக் கூப்பிட்டுச் சொன்னேன்'' என்றார் காசிலிங்கனார்.

''பரவாயில்லை! நான் பார்த்துக் கொள்கிறேன்....'' என்று அவருக்குப் பதில் சொல்லி விடை பெற்றுக்கொண்டு நகர்ந்தான் சத்தியமூர்த்தி. பெரிய பட்டங்களைப் பெயருக்கு முன்னும் பின்னும் போட்டுக் கொண்டு நவநாகரிகமாக உடையணிந்து படிப்பும் பதவியும் உண்டாக்கிய கௌரவத்தோடு நடக்கிற முதிய மனிதர்களிடம் கூட இத்தனை பலவீனங்களும், ஆற்றாமைகளும், அசூயைகளும் இருப்பதை எண்ணி உள்ளூறச் சிரித்துக் கொண்டே போனான்

**பொன் விலங்கு**

புகழோ பழியோ, எதுவானாலும் இரண்டுமே ஒரு நல்ல மனிதனை அவன் இயல்பாக நடந்து போய்க் கொண்டிருக்கிற நடையி லிருந்து சில விநாடிகள் தடுத்து நிறுத்தித் தயங்க வைத்துவிடக் கூடியவை.

அவன். அந்த வகுப்பில் அன்று காலையில் தான் நடத்திய ஆங்கிலக் கவிதையைப் பற்றிய விரிவுரையைப் பூபதி கேட்க நேரும் என்றோ அதன் விளைவாக உண்டாகிய புகழ்ச்சியால் தன் மேல் இத்தனை அசூயைகள் குறி வைத்துப் பாயும் என்றோ அவன் ஒரு சிறிதும் எதிர்பார்க்க வில்லை. அதே சமயத்தில் அவன் இந்த விளைவுகளுக்காகப் பயப் படவும் இல்லை. உணர்ச்சியும், மலர்ச்சியும் நிறைந்த இளம் மாணவர்கள் கூட்டம் தான் நடக்கிற வழியில் தனக்குப் பின்னால் தொடர்ந்து வருவதற்குத்தயாராக இருக்கும்போது மூத்த பொய்ம்மைகளை நினைத்துக் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை என்று நம்பினான் அவன். 'நீங்கள் இந்தக் கல்லூரிக்கு விரிவுரையாளராக வந்தபின் எப்படிப்பட்ட முரட்டு இளைஞர்களும் உங்களைச் சுற்றிக் கைகூப்பிக் கொண்டு திரியப் போகிறார்கள்; பாருங்களேன்' என்று பூபதியின் மகள் பாரதி தன்னுடைய கடிதத்தில் எழுதியிருந்ததை நினைத்துக்கொண்டான். கல்லூரி முதல்வரும் ஹெட்கிளார்க் சிதம்பரமும் முதலிலிருந்தே தன்னிடம் பழகுகிற விதம் சரியாயில்லை என்பது அவனுக்குத் தெரிந்து தான் இருந்தது. அதை நினைத்தும் அவன் கவலைப்பட வில்லை. அந்த இரண்டு மூன்று நாட்களிலேயே மாணவர்கள் மனத்தில் எல்லாம் தவிர்க்க முடியாத இடத்தைப் பெற்று விட்டான் சத்தியமூர்த்தி. அவன் கல்லூரிக்குள் நுழையும் போதும், கல்லூரி முடிந்து வெளியேறும் போதும் மலர்ச்சி நிறைந்த முகங்களோடு மாணவர்கள் பலர் அவனைச் சூழ்ந்து கொள்வதைப் பார்த்துக் கல்லூரி முதல்வரும், வேறு சில வயதான ஆசிரியர்களும் அந்தரங்கமாக மனம் புழுங்கினார்கள். மலர்ந்த முகத்தோடு அளவாகவும், அழகாகவும், சிரித்துப் பழகுகிற சுபாவம், நயமும் கருத்தும் கலந்த உரையாடல், எதைப் பற்றியும் சிக்கலோ, முரண்பாடோ இல்லாமல் விவாதிக்கும் திறன், இவற்றால் அந்தக் கல்லூரியின் மாணவர்களை எல்லாம் அபிப்பிராய பேதத்துக்கு இடமில்லாமல் மொத்தமாகக் கவர்ந்து விட்டான் சத்தியமூர்த்தி. அரைகுறையாகப் பொருமைப் பட்டுக் கொண்டிருந்தவர்கள், நன்றாகவே பொறாமைப்படும்படியான காரியம் ஒன்று ஒரு வாரம் கழித்து நடந்தது. கல்லூரி நிர்வாகி என்ற முறையில் இரண்டு வாரத்துக்கு ஒரு முறை எப்போதாவது கல்லூரிக்கு வந்து சுற்றிப் பார்த்து விட்டுச் செல்லுவார் பூபதி. அன்றும் அப்படிச் சுற்றிப் பார்க்க வந்திருந்தவர் கல்லூரியைச் சுற்றிப் பார்த்து விட்டுத் தமது அறையில் போய் இருந்து கொண்டு சத்தியமூர்த்தியைக் கூப்பிட்டு அனுப்பினார். சத்தியமூர்த்தி அவரைச் சந்திக்கச் சென்றான். அவர் அவனை வழக்கத்துக்கு அதிகமான ஆவலோடும் உற்சாகத்தோடும் வரவேற்றுப் பேசினார். 'அவனுக்கு அந்த ஊர் உடல் நலத்துக்கு ஒத்துக் கொள்கிறதா? கல்லூரியின் சூழ்நிலை பிடித்திருக்கிறதா? சௌகரிய அசௌகரியங்கள் எவையேனும் உண்டா?' என்பது போல் பொதுவான அக்கறையோடு எல்லாவற்றையும் விசாரித்த பின்பு அவனே முற்றிலும் எதிர்பார்த்திருக்க முடியாத ஒரு கேள்வியை அவனிடம் கேட்டார் பூபதி.

''இந்தக் கல்லூரியின் ஹாஸ்டலுக்குச் சரியான 'வார்டன்' இல்லை. ஒரு சம்பிரதாயத்துக்காக நம்முடைய வைஸ் பிரின்ஸிபாலையே வார்டனாகப்

ஒரு கிளாஸ்

# கிஸான் ஸ்க்வாஷ்

## அருந்தி இளைப்பாறுங்கள்




சுவைமிக்கது; அலுப்பு நீக்குவது; ஆரோக்கியமானது. தானே கனிந்த கனிகளிலிருந்து தயாரானது. வைட்டமின் சத்து நிறைந்தது.

திடீரென்று வரும் விருந்தாளிகளுக்கென்றே தனியாக ஒரு பாட்டில் கிஸான் வைத்திருங்கள்.

ஆரஞ்சு, லெமன், மற்றும் ஆறு ரகங்களில் கிடைக்கிறது கிஸான் ஸ்க்வாஷ். மற்ற எல்லா ஸ்க்வாஷ்களையும்விட கிஸான் ஸ்க்வாஷ்தான் இந்தியாவில் அதிகமாக விற்பனையாகிறது.

AVT/KP-2143A

கிஸான் பிராடக்ட்ஸ் லிமிடெட், பெங்களூர்




விஞ்ஞான முறையில் தயாராகும் லாக்டோ-காலமைன் உபயோகிக்கும்போது உங்கள் சரும எழில் மேம்பட்டு விளங்குகிறது. ● மறைந்து நின்று குணமளிக்கும் லாக்டோ-காலமைன் துரிதமாய் வேலை செய்யும் உயர் ரக காலமைன் அடங்கியது. களங்கங்களைக் களைந்து, வெயில், காற்று ஆகியவற்றால் முகம் கறுத்து விடாமல் காப்பாற்றுகிறது. ● உங்கள் மேனியெழிலை சாடின்போல் வழவழப்பாய் வைத்திருக்கும் லாக்டோ-காலமைனை முகவசிகரப் ● பொருளாக டாக்டர்கள் சிபாரிசு செய்கின்றனர். ● லாக்டோ-காலமைன் வரிசையில் மேலும் கிடைப்பவை: க்ரீம் மற்றும் டால்கம் பவுடர். லாக்டோ-காலமைன் எங்கும் கிடைக்கிறது

# லாக்டோ-காலமைன்



போட்டிருக்கிறோம். கல்லூரி காம்பவுண்டுக்குள்ளேயே மேற்குக் கோடியில் அவருக்கும், பிரின்ஸிபாலுக்கும் வீடு கட்டிக் கொடுத்திருக்கிறோம். வயதாகி விட்ட காரணத்தினால் வைஸ் பிரின்ஸிபால் ஓடியாடி அலைந்து ஒன்றும் பார்க்க முடியவில்லை. அவருக்குத் துணையாக உதவலாம் என்பதோடு ஹாஸ்டலில் இன்னும் நன்றாகக் கவனம் செலுத்தி உழைக்க வேண்டும் என்பதற்காக உங்களை 'உதவி வார்டனாக' நியமிக்கலாம் என்று நினைக்கிறேன். இதில் உங்களுக்கு ஏதாவது ஆட்சேபனை உண்டா? நீங்கள் இதை விரும்பாததற்குத் தவிர்க்க முடியாத காரணம் ஏதாவது இருந்தாலொழிய உங்களை நான் விடமாட்டேன். இந்த ஒரு வாரமாக 'இதற்கு யார் தகுந்த ஆள்' என்று இடைவிடாமல் சிந்தித்து உங்களைத் தேர்ந்தெடுத்தேன்! நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள் ?''

இதற்கு என்ன மறுமொழி கூறுவதென்று சத்தியமூர்த்தி சிறிது நேரம் தயங்கினான். பெருந் தொழிலதிபராகிய அந்தத் தேர்ந்த வியாபாரி தன்னை எதற்காகவாவது பரீட்சை பார்க்கிறாரோ என்றும் நினைக்கத் தோன்றியது அவனுக்கு. 'மல்லிகைப் பந்தல் கல்லூரிக்கு நீங்கள் ஆசிரியராக வந்து பாடங்கள் கற்பிப்பது தவிர அந்தக் கல்லூரியின் அநுபவங்கள் உங்களுக்கே சில நல்ல பாடங்களைக் கற்பிக்கும் என்பது என் கருத்து' என்று தனக்கு எழுதிய கடிதத்தில் அவர் குறிப்பிட்டிருந்த வாக்கியம் வேறு இப்போது நினைவு வந்தது. அவனும் ஒரு பெரிய கல்லூரியில் மாணவனாக இருந்தவனாதலால், 'வார்டனாக' இருப்பதில் உள்ள கஷ்ட நஷ்டங்களைச் சிந்தித்து முடிவு சொல்லக் கூட அவகாசமில்லாமல் எப்படி ஒப்புக் கொள்வதென்று தான் தயங்கினான். இப்போது இப்படி வேண்டுகோள் விடுக்கிற இதே பூபதிதான் இண்டர்வ்யூவின் போது, 'நீங்கள் மிகவும் இளைஞராக இருக்கிறீர்கள். உங்களுக்கு இன்னும் திருமணமாகவில்லை. மாணவ மாணவிகளிடம் நீங்கள் அதிகக் கவனத்தோடு பழக வேண்டும்' என்றெல்லாம் சொல்லித் தயங்கினாரென்பதும் அவனுக்கு மறந்துவிடவில்லை.

அவனுடைய தயக்கத்தைப் புரிந்து கொண்ட பூபதி மேலும் தெளிவாக விளக்க முற்படுகிறவராகத் தம் மனக் கருத்தை அவனுக்கு விவரிக்கலானார்:

''நான் சொல்கிறபடி மறுக்காமல் ஒப்புக் கொள்ளுங்கள் மிஸ்டர் சத்தியமூர்த்தி! என்னுடைய மனக் கருத்தை நம்முடைய கல்லூரி முதல்வரிடமும், துணை முதல்வரிடமும் கூட இன்னும் நான் தெரிவிக்கவில்லை. உங்களைக் கேட்டுக் கொண்டு செய்யலாம் என்றிருக்கிறேன். இந்தக் கல்லூரியின் வளர்ச்சிக்காகவும், நலனுக்காகவும், நானாக ஒவ்வொன்றாய் நினைத்து நினைத்துச் செய்தால்தான் உண்டு. நான் வேற்றுமைகளையும், ஏற்றத் தாழ்வுகளையும் பார்ப்பதில்லை. இங்கே படிக்கிற ஒவ்வொரு மாணவியையும் என் மகள் பாரதியைப் போலவே அக்கறையும் சிரத்தையும் செலுத்தி வளர்க்க விரும்புவது என் வழக்கம். என் சொந்தப் பிள்ளைகளை வளர்ப்பதுபோல்தான் மாணவர்களைப் படிப்பும் பொறுப்பும் உள்ள இளைஞர்களாக உருவாக்கி அனுப்ப விரும்புகிறேன் நான்.' எப்போதும் போல் இருப்பவர்களே இருக்கட்டுமே! புதிதாக 'உதவி வார்டன்' எதற்கு?'' என்று முதல்வரே என் அபிப்பிராயத்துக்குத் தடை கூறினாலும் கூறலாம். நான் அதைப் பொருட்படுத்தப் போவதில்லை. மாணவர்களை இன்னும் சிரத்தையோடு கவனித்துக் கொள்ள வேண்டும். அந்தக் காரியத்தைத் தைரியமாக உங்களிடம் ஒப்படைக்கலாம் என்று தோன்றுகிறது எனக்கு'' என்றார் அவர்.

நீண்ட நேரத் தயக்கத்துக்குப்பின் சத்தியமூர்த்தி அவருக்குப் பதில் சொல்லியே தீர வேண்டியதாயிற்று! ''நீங்கள் இந்தக் காரியத்துக்காக என்னைத் தேர்ந்தெடுத்திருக்



கிறீர்கள் என்பதற்காக நான் மிகவும் மகிழ்கிறேன். அதே சமயத்தில் இதை ஏற்றுக்கொள்ளவும் எனக்குத் தயக்க மாக இருக்கிறது சார்! வயதும், அநுபவமும் மிகுந்த ஆசிரியர்கள் பலர் இந்தக் கல்லூரியில் இருக்கிறார்கள். நான் வயதில் இளையவன். புதிதாக வந்திருப்பவன். உங்கள் எண்ணத்தை என்னால் முழுமையாக நிறைவேற்ற முடியாமல் போனாலும் போகலாமோ என்றுதான் தயங்குகிறேன் சார்....''

இப்படி அவன் சாதாரணமாகக் கூறிய பதிலே அவர் தம்மைக் குத்திக் காட்டுவதாக எடுத்துக் கொண்டார். முதன் முதலாக அவன் இண்டர்வ்யூவுக்கு வந்திருந்த போது அவனுடைய வயது, இளமை, அநுபவம் ஆகியவற்றைப் பற்றித்தான் அதிகமாக விவாதித்து விட்டதை இப்போது அவன் இப்படிச் சொல்லிக் காட்டுவதாகப் புரிந்து கொண்ட பூபதி, ''மிஸ்டர் சத்தியமூர்த்தி! நீங்கள் எதற்காகவோ என்னிடம் இதைச் சொல்லிக் காண்பிக்கிறீர்கள் என்று படுகிறது. அப்படியானால் என்னை நீங்கள் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை என்றுதான் நான் நினைக்க வேண்டியிருக்கும்'' என்றார். சத்தியமூர்த்தி மௌனமாக இருந்தான். பூபதி அவ்வளவுடன் அவனை விட்டுவிடவில்லை.

''இதோ என்னைப் பாருங்கள் சத்தியமூர்த்தி! நான் உங்களுக்குச் சம்மதமா, இல்லையா என்று கேட்டு இது வரை தயங்கிக் கொண்டிருப்பதை இனி மேல் செய்யப் போவதில்லை. இன்னும் அரை மணி நேரத்தில் நீங்கள் இந்தக் கல்லூரியின் விடுதிக்கு உதவி 'வார்டனாக' நியமிக்கப்பட்டிருப்பதைப் பற்றி 'சர்க்குலர்' வரும். அப்போது தெரிந்து கொள்வீர்கள். இப்போது நீங்கள் புறப்படலாம்'' என்று புன்முறுவலோடு அவன் பதில் சொல்ல இடமின்றிப் பேச்சை முடித்தார் பூபதி.

முக்கால் மணி நேரத்துக்கு மேல் கல்லூரி நிர்வாகியின் அறையில் உட்கார்ந்து அவரோடு பேசிக்கொண்டிருந்து விட்டு அவன் வெளியே வந்து ஆசிரியர்கள் அறைக்குள் திரும்பி நுழைந்த போது மற்றவர்கள் அவனைப் பார்த்த பார்வையே 'ஒரு மாதிரி' இருந்தது.

''என்ன விசேஷமோ? ரொம்ப நாழிகை பேசிக் கொண்டிருந்தீர்கள் போலிருக்கிறதே?'' என்று விஷயத்தை அறிந்து கொண்டு வம்பளக்கும் ஆவலோடு அவனை அணுகிக் கேட்டார் ஒரு பேராசிரியர்.

''ஒன்றுமில்லை'' என்று சுருக்கமாக அவருக்குப் பதில் சொல்லி அனுப்பினான் சத்தியமூர்த்தி. காசிலிங்கனாரோ வேறு எதையோ நினைத்துக் கொண்டு பயந்தார்: ''ஏதோ நமக்குள்ளே பேசிக் கொள்ளுவதையெல்லாம் நீங்கள் மேலே இருக்கிறவர்களுக்குச் சொல்லி ரசாபாசம் பண்ணக் கூடாது. பிரின்ஸிபால் 'தமிழ்ப் பிரிவு ஆசிரியர்கள் தமிழ் தவிர வேறெதுவும் நடத்தக் கூடாது; ஆங்கிலத்தை ஆங்கில விரிவுரையாளர்கள் நடத்திக் கொள்ளுவார்கள்' என்று கூறியதைப் பூபதி அவர்கள் காதில் போட வேண்டாம். இதெல்லாம் நமக்குள் ஓர் ஏற்பாடு. பிரின்ஸிபாலையும் பகைத்துக் கொள்ள முடியாது. மற்றவர்கள் நன்றாக ஆங்கிலம் நடத்திப் பேர் வாங்கி விட்டால் அவருக்குப் பிடிக்காது. இதெல்லாம் பட்டும் படாமலும் இருக்கணும்'' என்று காசிலிங்கனார் உடனே வலுவில் தன்னிடம் வந்து கூறியதைப் பார்த்தால் அவர் பேசியதை யெல்லாம் தான் பூபதியிடம் சொல்லி யிருப்பதாக அவரே சந்தேகப்படுகிறார் என்பது சத்தியமூர்த்திக்குப் புரிந்தது. 'படித்த மனிதர்கள் ஏன் இப்படி இருக்கிறார்கள்? இப்படி நினைக்கிறார்கள்? ஏன் இப்படிப் பொய்யாகப் பழகுகிறார்கள்?' என்று எண்ணி எண்ணி நொந்து கொள்வதைத் தவிர சத்தியமூர்த்தியால் அப்போதுவேறொன்றும் செய்யமுடியவில்லை.

'பொய் தவழும் உலக நடை என்னென்பேன்? என்னென்பேன்?' என்று இராமலிங்க சுவாமிகள் கதறியிருப்பதை நினைத்துக் கொண்டான் அவன். வகை வகையான எண்ணங்களையும் பழக்க வழக்கங்களையும் உடைய மனிதர்களை இரசிக்கத் தெரிய வேண்டுமென்று குமரப்பன் அடிக்கடி சொல்லிக் கொண்டிருப்பானே — அது இப்போது ஞாபகம் வந்தது. செய்தி அதற்குள் எப்படியோ கல்லூரி முழுவதும் பரவியிருந்தது. கல்லூரி முடிந்து அறைக்குத் திரும்பிக் கொண் டிருக்கையில் ''உங்களை உதவி வார்டனாக நியமிக்கப் போவதாகப் பேசிக் கொள்கிறார்களே?'' என்று பாடனி விரிவுரையாளர் சுந்தரேசன் நடுவழியில் கேட்ட போது சத்தியமூர்த்தி மௌனமாகப் புன்னகை செய்தான். ஆமாம் என்றும் ஒப்புக் கொள்ளவில்லை; இல்லை என்றும் மறுக்கவில்லை. பலர் பணிபுரியும் பொது நிறுவனங்களில் தனி ஒருவனுடைய வளர்ச்சியும், தளர்ச்சியும், ஒவ்வொரு விநாடியும் அந்தப் பலராலும் கவனிக்கப்பட்டுக் கொண்டிருக்குமென்று அவனுக்குத் தெரியும். வளர்ச்சியைக் கண்டு பொறுமைப்படவும் தளர்ச்சியைக் கண்டு பெருமைப்படவும் செய்வார்கள் என்பதும் தெரியும். (தொடரும்)

# சிறந்த தரத்துடன் சிக்கனமும்
## குடும்பத்தினர் அனைவருக்கும் கிடைக்கிறது

எத்தனை சிக்கனமானது! எத்தனை புத்துணர்ச்சி தருவது! இந்தப் பெரிய சைஸ் டால்க்கில் உங்களுக்கு பெயர் பெற்ற கால்கேட்டின் சீரிய தரம் கிட்டுகிறது.

எத்தனை நறுமணமுடையது! எத்தனை நீடித்திருப்பது! ஸ்நானத்திற்கு பின்-வெளியே செல்லுமுன்-தாராளமாக உங்கள் உடலில் தூவிக்கொண்டு நளினமாய் விளங்குங்கள்.

எத்தனை நேர்த்தியானது! எத்தனை மிருதுவானது! கால்கேட் ஆல்-பர்ப்பஸ் டால்க்கை குழந்தை விரும்புகிறது. இளஞ்சருமத்திற்கு அது மிகவும் ஏற்றது.



# கால்கேட்
## ஆல்-பர்ப்பஸ் டால்க்

அபூர்வ மலர்களின் நீடித்திருக்கும் நறுமணங்கொண்டது!




## யார் இவர் அறிவாயோ ?

அற்புதமான சிறுகதைகளை எழுதினர் இவர். இவர் கதைகளைப் படித்தவர்கள் 'அபாரம்', 'அற்புதம்' என்று பாராட்டினர்கள். சிறுகதை எழுத்தாளர்களின் மன்னன் என்ற சிறப்பைப் பெற்ருர் இவர். இவரது புத்தகங்கள் அறுபது லட்சம் பிரதிகள் விற்பனையாயின. உலக மொழிகளிலெல்லாம் இவரது கதைகள் மொழிபெயர்க்கப்பட்டன.

ஆனல் இவரது வாழ்க்கையோ? எத்தனை வசதிக் குறைவு, எவ்வளவு வேதனைகள், சோதனைகள், கஷ்ட நஷ்டங்கள் — அத்தனையையும் சமாளித்து அழியாப் புகழ் பெற்றுப் பேரு மன்னரானுர்.

பள்ளிக்குச் சென்று படித்ததில்லை. கல்லூரியின் உட்புறம் எப்படி இருக்குமென்று தெரியாது இவருக்கு. ஆனல் இவரது கதைகளை, இன்று முறையான நல்ல எழுத்துக்கு உதாரணமாகப் பயிலுகிருர்கள்.

அடுத்தபடியாக உடல்நலக் குறைவால் அவதிப்பட்டார் இவர். காச நோயின் பிடியில் அகப்பட்டுக்கொண்டுள்ள இவர் தமது சொந்த ஊரான வடக்குக் கரோலினவில் இருந்தால் இறந்துதான் போவார் என்று கருதிய டாக்டர்கள் இவரை டெக்ஸாஸ் மாகாணத்துக்கு அனுப்பினர்கள். அங்கு ஆடுகளை மேய்க்கும் இடையனுக வேலை பார்த்து வந்தார் இந்த மேதை.

இன்றைக்கு அவர் இடையனுகப் பணியாற்றிய பண்ணையைக் காண இலக்கிய ரசிகர்கள் எங்கிருந்தெல்லாமோ அங்கு செல்கிருர்கள். அந்தப் பண்ணையின் அருகே செல்லுமுன் காரை விட்டிறங்கிப் பக்தி வணக்கத்துடன் நடந்து சென்று அவர் வாழ்ந்த வீட்டினைத் தரிசித்துத் திரும்புகிருர்கள்.

இவருக்கு வந்த சோதனைகள் இது மட்டுமா? அரசாங்கம் இவரைச் சிறைச் சாலையில் தள்ளியது. டெக்ஸாஸில் இருக்கும்போது உடல் கொஞ்சம் குணமாகவே ஆஸ்டின் நகரின் பாங்கி ஒன்றில் காஷியராகப் பணியாற்றினர் இவர். ஆடு மாடு மேய்ப்பவர்கள் அதிகம் இங்கு. பாங்கிக்குப் பணம் வாங்கவருபவர்கள், குமாஸ்தாக்கள் வேலையாக இருந்தால் ரசீதில்கையெழுத்துப்போட்டு வைத்துவிட்டு வேண்டிய பணத்தைத் தாங்களே எடுத்துக்கொண்டு போவது வழக்கம். ஒருநாள் திடீரென்று பாங்கிக் கணக்குகளைச் சரிபார்க்கும் அதிகாரி வந்தார். பணத்தை எண்ணிக் கணக்கைச் சரிபார்த்தார். தொகை குறைந்தது. காஷியர் தானே அதற்குப் பொறுப்பு. யாரோ பணத்தைக் கையாண்ட குற்றத்துக்கு ஐந்து வருஷச் சிறைத் தண்டனை கிடைத்தது இவருக்கு.



முதலில் இந்தத் தண்டனை பெரிய அதிர்ச்சியாக இருந்தாலும் பின்னல் அதுவே அவருக்கு அதிர்ஷ்டத்தைக் கொடுத்தது. சிறையில் இருந்த காலத்தில்தான் இவர் அற்புதமான சிறுகதைகளை எழுதித் தள்ளினர். ஆங்கில மொழி எங்கெல்லாம் பேசப்படுகிறதோ, அங்கெல்லாம் இவரது கதைகளுக்கு மதிப்பும் கௌரவமும் ஏற்படும்படியான சிருஷ்டிகளை இந்தச் சிறையில்தான் படைத்தார். இவரைச் சிறைச்சாலைக்கு அனுப்பாதிருந்தால் இன்று இலக்கிய உலகம் போற்றிப் புகழும் மகத்தான படைப்புக்களை இவர் எழுதியிருப்பாரா?

இத்தகைய சிறுகதை மேதை யார் தெரியுமா? அமெரிக்க நாட்டைச் சேர்ந்தவரான வில்லியம் ஸிட்னி போர்ட்டர். ஆனல் இப்படிச் சொன்னல் இவரைப் பற்றி யாருக்கும் எதுவும் தெரியாது. 'ஓ ஹென்றி' என்பது இவரது புனைபெயர். இந்தப் பெயரிலேயே இலக்கிய உலகிலே இணையற்றதொரு இடத்தைத்தேடிக்கொண்டார் இவர். ஆங்கில அறிவு உள்ளவர்கள் யாரும் 'ஓ ஹென்றி'யின் கதைகளை ரசித்துச் சுவைக்காதிருக்க மாட்டார்கள்.

## உங்களுக்குத் தெரியுமா ?

❀ உலகிலுள்ள ஜீவராசிகளுக்குள்ளேயே அதன் உருவத்தோடு ஒப்பிடும்போது மிகப் பெரிய மூளை எறும்புகளுக்குத்தான் இருக்கிறது.

❀ இம்க்கண்ட கண்டங்களின் முதல் எழுத்தும் கடைசி எழுத்தும் (ஆங்கிலத்தில்) ஒன்ருக இருக்கும் விந்தையை எழுதிப் பாருங்கள். அண்டார்டிகா, ஆஸ்திரேலியா, அமெரிக்கா, ஆசியா.

❀ கங்காருவின் வாலைப் பூமியில் படாமல் தூக்கிப் பிடித்துக் கொண்டு விட்டால் அதனல் தாவிப் போக முடியாது.

❀ முதலைகள் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் என்று உங்களுக்குத் தெரியுமா? ஆனல் முட்டையிலிருந்து வெளிவரும் முதலைக் குஞ்சு தான் வெளிவந்த முட்டையைப் போல் மூன்று மடங்கு பெரிதாக இருக்கும் என்ற விஷயம் உங்களுக்குத் தெரிந்திருக்காதே!

❀ ஒட்டகத்தின் முதுகு எப்படி? ஆனல் அதன் முதுகெலும்பு கோணல் வளைசல் இல்லாமல் சுத்தமான நேர் கோடு போல் இருக்கும்.

❀ ஒரு கடிகாரத்தின் நிறை சாவி கொடுத்த பிறகு அதிகமாகி விடும். சாவி யெல்லாம் குறைந்த பிறகு அதன் நிறை குறையும். சந்தேகப்பட வேண்டாம். இது உண்மை!



## உலகத்தின் கதை - 7     25,000,000 ஆண்டுகளுக்கு முன்



குட்டி போட்டுப் பால் தரும் மம்மல்கள் உலகில் தோன்றிய காலத்தைப் பற்றிச் சென்ற வாரம் படித்தீர்கள். இந்தக் காலத்தில் இன்னும் மனித குலம் தோன்றவில்லை. இப்போது நாம் உலகில் காணும் ஜீவராசிகளின் தோற்றம் இந்தக் காலத்திலிருந்துதான் ஆரம்பமாகியது. முதலில் தோன்றி வாழ்ந்த மம்மல்கள் பயங்கரமான தோற்றத்தோடும் மிகப் பெரியவைகளாகவும் இருந்தன. நாளாவட்டத்தில் இவைகளின் உடலில் சிறு சிறு மாற்றங்கள் ஏற்பட்டன. உருவம் சிறியதாகியது.

முதல் மம்மல்கள் தோன்றிய இந்தக் காலத்தில் அதாவது இன்றைக்குச் சுமார் 25,000,000 ஆண்டுகளுக்கு முன்னால் பூமியின் சீதோஷ்ண நிலை ஒருநிலைப்படவில்லை. மிக மிக அதிகமான உஷ்ணத்தினாலும், குளிரினாலும் இந்தக் காலத்தில் பூமி அல்லலப்பட்டது. ஆரம்பத்தில் கடுமையான உஷ்ணம் — கொளுத்தும் வெய்யில் — பிறகு திடீரென்று அதற்கு நேர்மாறான உறை பனி, ஆகிய சீதோஷ்ண நிலைகள் பூமியை ஆட்டி வைத்தன. இது மட்டுமா? திடீரென்று ஆங்காங்கே பூகம்பங்கள் தோன்றின, எரிமலைகள் குமுறின. மலையாக இருந்த பகுதிகள் உருகிக் கொண்டிருக்கும் பூமியின் நடு மையத்தில் அழுந்திக் கடலாயின. கடலாக இருந்த பகுதிகள் திடீரென்று உயர்ந்து அங்கு பெரிய மலைகள் தோன்றின. இந்தக் காலத்தில் தான் வானத்தைத் தொடும் மலைகள் தோன்றி நிரந்தரமாக நிலைத்து நிற்க ஆரம்பித்தன. கொடும் பனிக் காற்று வீச ஆரம்பித்தது. தொடர்ந்து பல வருஷங்கள் இத்தகைய குளிர்ந்த காற்று வீசவே பாளம் பாளமாகப் பனிக் கட்டிகள் படிந்து உறைந்து பூமியை மூடிக்கொண்டன. உருகாத பனி மூடிய உலகத்தின் வட கோடி தோன்றலாயிற்று. இத்தகைய கொடிய பனி யுகத்திலிருந்து தங்களைக் காத்துக்கொள்ள அந்தக் காலத்து மம்மல்களின் உடலில் ஏராளமான ரோமங்கள் தோன்றி வளரலாயின. இந்த யுகத்தின் கடுமையான உஷ்ணத்துக்கும் பனிக்கும் ஈடு கொடுத்து வாழ முடியாமல் பிராணி இனங்களில் பல வகை அழிந்து போயின. இத்தகைய சீதோஷ்ண நிலைகளைச் சமாளிக்க முடிந்த ஜீவராசிகள் தொடர்ந்து வாழலாயின.

இங்குள்ள படங்களில் இத்தகைய விபரீதமான சீதோஷ்ண நிலைகளைச் சமாளித்து வாழ்ந்த சில மிருகங்களையே காண்கிறீர்கள். இன்றைய காண்டா மிருகம் அன்றைக்கும் இருந்தது.

(1) சரித்திர காலத்துக்கு முற்பட்ட மிருகங்களில் 'மம்மத்' என்றழைக்கப்படும் ஆதி கால யானை பிரசித்தமானது. உடலெங்கும் மயிர் அடர்ந்து தொங்கப் பார்க்க அதி பயங்கரமாக இருந்தது. (2) இன்றையச் சிங்கத்தின் மூதாதையர்களான நீண்ட கோரைப் பற்களையுடைய ஒரு பிராணி 'சாப்ர டூத்' (3) பைஸன் போன்ற காட்டெருமை. 'அவ்ராக்ஸ்' என்று பெயர். (4) அந்தக் காலத்து அடர்ந்த காடுகளில் இதைப் போன்ற மான் இனங்கள் ஏராளமாக வாழ்ந்து வந்தன. (5) கரடியைப் போன்ற தோற்றமுடைய ராட்சச 'ஸ்லாத்'துகள் மரங்களின் இலைகளைத் தங்கள் நாக்கினால் வளைத்துப் பறித்துத் தின்றன.











# மேனகா

மறக்க முடியாத திரைப்படங்கள்

பம்பாய் ஸ்டுடியோ ஒன்றில் 'மேனகா' ஷூட்டிங் நடந்துகொண்டிருந்தது. ஒரு நாள் ''மேனகா''வில் டெபுடி கலெக்டரின் பங்களாக் காட்சியில் மட்ட ரகமான சோபா, நாற்காலிகள் போடப்பட்டிருப்பதைக் கண்ட டைரக்டர் ராஜா சாண்டோவுக்குக் கடும் கோபம் வந்துவிட்டது. 'ஸ்டுடியோவில் செட்டுகள் போடப் பணம் வாங்குகிறீர்களே கூசாமல்! இப்படித்தான் ஓட்டை, உடைசலாகப் போடுவதா? கொண்டு வாடா, கடப்பாரையை!' என்று கூச்சல் போட்டு ஸ்டோர் அறையின் பூட்டை உடைப்பதற்குத் தயாராகி விட்டார். அந்தச் சமயம் பார்த்து வந்த ஸ்டுடியோ முதலாளி நடுங்கிப் போய் அவருக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்கும்படி சைகை காட்டி விட்டு ராஜா சாண்டோவின் கண்ணில் படாமல் போய் விட்டார். அப்புறம் கேட்க வேண்டுமா? எல்லாம் சரியாக நடந்தன. ராஜா சாண்டோவின் திறமையான டைரக்ஷன், ஒத்துழைப்பு காரணமாகப் படம் இரண்டே மாதங்களில் தயாராகிவிட்டது. இச்சம்பவத்தைக் கலைஞர் டி. கே. ஷண்முகம் கூறக் கேட்டதும், ''ராஜா சாண்டோ ரொம்பக் கோபக்காரரோ!'' என்று வினவினேன்.

''ஆம். ஆனல் திறமையைக் கண்டுதான் சித்தம் அடைவார்'' என்றார் அவர்.

சமூக நாடகங்களை நடத்த நினைப்பதே மகத்தான சாதனையாகக் கருதப்பட்ட காலத்தில் டி. கே. எஸ். சகோதரர்களின் நாடகக் குழு அச்சாதனையைத் துணிந்து சாதித்து வந்தது. 1926ம் ஆண்டிலேயே ''மேனகா'' என்ற புரட்சிகரமான கதைப் போக்கைக் கொண்ட சமூக நாடகத்தை மிகவும் பாராட்டத் தக்க விதத்தில் நடத்தி வந்தனர். 1936ம் ஆண்டு அந்த நாடகத்தைப் படமாக்கி வெளியிட்டனர் ஷண்முகானந்தா டாக்கீஸார். அதிலும் டி. கே. எஸ். சகோதரர்களே நடித்தனர். அவர்களுடைய முதல் திரைப் படம் இதுவே. திரு என். எஸ். கே. அந்நாட்களில் இவர்கள் குழுவில் இருந்தார். அவருடைய முதல் திரைப் படமும் மேனகாதான். ஸ்ரீமதி மதுரத்தை அப்போது அவர் சந்தித்திருக்கவில்லை. வடுவூர் துரைசாமி அய்யங்கார் எழுதிய நாவலை அடிப்படையாகக் கொண்டது ''மேனகா'' நாடகம். நாடகமாக்கித் தந்தவர் கந்தசாமி முதலியார். பாடல்கள் இயற்றியவர் பூமி பாலகதாஸ்.

''மேனகா'' படத்தைப் பற்றிப் பேசலாம் என்று திரு டி. கே. சண்முகத்தின் இல்லத்துக்குச் சென்றிருந்தேன். பேச்சு சுவாரசியமாகத் தொடர்ந்தது.

''இப்பொழுது வரும் படங்களில் அலட்சியமாகக் காதல் காட்சிகள் காட்டப்படுவதைப் பார்க்கும் போது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. அந்த நாட்களில் காதலைப்பற்றிக் கற்பனை செய்யக்கூட முடியாது. அதுவும் எங்களைப் பொறுத்த வரையில் நேருக்கு நேர் பெண்களுடன் நடித்து அநுபவமே இல்லை. பெண்வேடம் பூண்ட ஆண்மணிகளோடுதான் மேடையில் நடித்திருக்கிறோம். ''மேனகா'' படத்தில் பெண்களுடனேயே நடிக்க வேண்டும் என்று தெரிந்தவுடன் எனக்கும் என் சகோதரர்களுக்கும் உண்டான கூச்சத்தைச் சொல்லி முடியாது. ஆனலும் வெள்ளித் திரையில் தோன்ற வேண்டும் என்னும் ஆர்வம் காரணமாகப் படத்தில் நடிக்க ஒப்புக் கொண்டு நாங்கள் சகோதரர் நால்வரும் ஈரோடிலிருந்து பம்பாய்க்குப் பயணமானோம். ரெய்ச்சூர் ஜங்ஷனுக்குப் போனதும் படத் தயாரிப்பாளர்களில் ஒருவரான எஸ். கே. மொகைதீன் பெண்கள் வண்டியில் அமர்ந்திருந்த நடிகைகளுக்கு எங்களை அறிமுகப் படுத்தினர். கே. டி. ருக்மிணியிடம் என்னைச் சுட்டிக் காட்டி, ''இவர்தானம்மா உன் கணவர்!'' என்றார். என் தம்பி பகவதியைச் சுட்டிக் காட்டி, எம். எஸ். விஜயாளிடம், ''இவர்தான் உன் கணவர்!'' என்றார். இளம் பெண்களிடம் 'கணவர்' என்ற பதத்தை அவர் அவ்வளவு தாராளமாக உபயோகித்தது எனக்குப் புதிய அநுபவமாகத் தெரிந்தது. படப் பிடிப்பின்போதும் காதல் காட்சிகளில் நடிக்கவே தோன்றாது. என்னையறியாமல் வெறுமனே அடக்கமாட்டாமல் சிரித்துக் கொண்டே இருப்பேன்'' என்றார் சண்முகம்.



''நீங்கள் 'மேனகா'வில் வில்லனா?''

''ஆம். என் பெயர் நைனா முகம்மது. என் மனைவியின் பெயர் நூர்ஜஹான். தம்பி பகவதி வக்கீல் வராகசாமி. மேனகாவின் கணவன். யாராவது அவனைப் பார்த்து, 'நீதான் அப்பவே சாப்பிட்டாகி விட்டதே' என்று கூறி விட்டால் போதும். தலையை ஆட்டி விட்டுச் சாப்பிடாமலே போய் விடுவான்...விசித்திரமான கதாபாத்திரம்.''

''என். எஸ். கே.க்கு என்ன பாத்திரம்?''

''சாமா ஐயர் என்ற பொல்லாத பாத்திரமாக வருவார். ஆனால் மிகவும் அருமையாக நடிப்பார். படப் பிடிப்பின்போது அவர் செய்த தமாஷ் ஒன்று சொல்லுகிறேன் கேளுங்கள். ஒழுக்கம் கெட்ட கமலம் என்பவன் வீட்டில் சாமா ஐயர் திருடர்களிடம் அகப்பட்டுக்கொண்டு விடுகிறார். டைரக்டர் காட்சியை விளக்கினார்:— 'கிருஷ்ணா, நீ இப்படி இருக்கிறாய். கமலம் இங்கே இருக்கிறாள். திருட்டுப் பசங்க வந்ததும் அவள் பயந்து ஓடி வந்து உன்னைக் கட்டிக்கிறா. நீ உடனே திருடங்க மேலே பாயணும்!'

'' 'எல்லாம் சரி. அந்தம்மா கமலம் என்னைக் கட்டிக்காதபடி வேறே ஏதாவது வழி பண்ணுங்க' என்றார் கிருஷ்ணன். 'ஏண்டா அவ உன்னைக் கட்டிக்கப்படாது?' என்று கேட்டார் டைரக்டர். 'நான் பதிவிரதன்' என்றார் கிருஷ்ணன். 'அப்படின்னா....?' என்றார் டைரக்டர். 'பொம்பளையிலே பதிவிரதையில்லே? அந்த மாதிரி நான் ஆம்பிள்ளைப் பதிவிரதன். எந்தப் பொம்பளையும் என்னைத் தொடக் கூடாது' என்றார் கிருஷ்ணன்.



ராஜா சாண்டோ

''எல்லோரும் சிரித்து விட்டார்கள். கமலமாக நடித்த பெண்மணி தன் கிட்டத்தில் நெருங்காமலே நடித்தது இயற்கையாக இல்லே என்பதை என். எஸ். கே. இப்படி நாசூக்காகச் சுட்டிக் காட்டுகிறார் என்று புரிந்து கொண்டார் டைரக்டர். தம் தவற்றை உணர்ந்து, 'சரிடா, கிருஷ்ணா! உன் இஷ்டம் போல நெருங்கி ஜோராக நடி!' என்றார். பிறகு கிருஷ்ணன் ஜமாய்த்து விட்டார்'' என்றார் சண்முகம்.

''டைரக்டர் ராஜா சாண்டோவைப்பற்றி இன்னும் கொஞ்சம் சொல்ல முடியுமா?''

சண்முகம் கண்களை மூடி மௌனம் சாதித்து விட்டு, ''கொஞ்சமாகப் பேசக் கூடிய மனிதர் அல்ல அவர். அவரைப் பற்றி நிறையப் பேச வேண்டும். ஒவ்வொரு கரத்திலும் ஐந்து மனிதர்களை ஏந்திக் கொண்டு நடக்கக் கூடிய உறுதியான உடல் கட்டு; உரம் பெற்ற உள்ளம்—அத்தனையும் ஒருங்கே அமையப் பெற்ற அற்புதக் கலைஞர் அவர். தமிழை முறைப்படி இலக்கிய இலக்கணங்களுடன் படித்து அறிந்தவர். நடிப்புச் சொல்லிக் கொடுப்பதில் இணையற்றவர். ராஜா சாண்டோ பல ஹிந்திப் படங்களை டைரக்ட் செய்திருக்கிறார். ஹிந்தி திரைப்பட உலகம் அவருக்கு மிகவும் நன்றிக் கடன் பட்டிருக்கிறது. ''மேனகா'' அவரது முதல் தமிழ்ப் படம். சோகக் காட்சிகளில் நடிக, நடிகையர்களில் யாருமே கண்ணீர் விடுவதற்கு 'கிளிஸரை'னின் உதவியை நாடாதவரில்லே. ஆனால் ராஜா சாண்டோ அதற்கு நேர் விரோதம். நடிக, நடிகை யார்களையும் நிஜமாகவே கண்ணீர் விடச் செய்து விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பார். சிறந்த டைரக்டர்...'' என்றார் பரவசத்துடன்.

மேனகாவின் நாத்தி பெருந்தேவியாக நாடகத்தில் நடித்தவர் டி. கே. சண்முகத்தின் சின்னண்ணா டி. கே. முத்துசாமி. அந்தப் பாத்திரத்தை ஏற்கச் சரியான நடிகை கிடைக்காததால் திரைப்படத்திலும் முத்துசாமியே ஏற்று அபாரமாக நடித்தார். தத்ரூபமா யிருந்தது.

தமிழ் நாடகங்களை வாழவைத்த பெருமையோடு, நாடகத் தமிழை அழிந்து விடாமற் பாதுகாத்த பெருமையும் டி. கே. எஸ். சகோதரர்களையே சாரும் என்றாலும் திரைப்பட உலகுக்கு அவர்கள் புரிந்துள்ள சேவையும் மறக்க முடியாததாகும். - **விஜயம்**

# புது மலர்



அவள் பெயர் மஞ்சுளா.

அந்தக் காரியாலயத்தில் மானேஜருக்குப் பிரத்தியேகமான லேடி டைப்பிஸ்டாக நியமனமாகி வந்திருந்தாள்.

அந்தக் காரியாலயத்தின் மானேஜர் மணிரங்கன். தன் மேலதிகாரியைக் கடைக் கண்ணால் நோக்கினாள் மஞ்சுளா.

மணிரங்கனது கம்பீரத் தோற்றமும், அழகு முகமும், விசால நெற்றியும், எடுப்பான நாசியும், கவர்ச்சி நிறைந்த கண்களும் பொருட் செறிவுடைய பார்வையும், முத்துப் பல் வரிசையும் அவள் உள்ளத்தைக் கவர்ந்து அங்கே நன்கு பதிந்து கொண்டுவிட்டன. எனவே இப்போது அவள் அவனை நேராகப் பார்க்காவிடினும் மனத் திரையில் கண்டு மயங்கி ரசித்துக் கொண்டிருந்தாள். அதே சமயத்தில் அவன் மிக அருகே இருந்து கொண்டு தன்னையே நோக்குகிறான் என்பதையும் தன் அவயவங்களை ஊடுருவி அணு அணுவாக ஆராய்கிறான் என்பதையும் உணர்ந்தே இருந்தாள்.

ஆறு ரூபாய் மில் புடவை, ஒன்றரை ரூபாய் ஜாக்கெட்டு, முக்கால் ரூபாய் ஸ்டெட், ஆறணா கண்ணாடி வளையல், இரண்டணா ரிப்பன், நாலணா மணி மாலை, ஓரணாப் பூ இவற்றில் அவன் ரசிப்பதற்கு என்ன இருக்கிறது? அரை ஆயிரம் சம்பளம் பெறும் ஒரு கம்பெனியின் உதவி மானேஜர் முன் அவள் ஒரு பிச்சைக்காரிக்குச் சமம். அவளுக்கு அப்படித் தோன்றிற்று; அவனுக்கு அவ்வாறு தோன்றவில்லையே!

அவன் இமையாது அவளையே பார்ப்பதும் அவள் குனிந்த தலை நிமிராமல் இருப்பதும் அடிக்கடி நிகழும் காட்சிகள்.

தன்னு கதவைத் தள்ளிக் கொண்டு அட்டெண்டர் வந்தான். கற்றைத் தபால்களை மேஜை மீது வைத்து விட்டுச் சென்றான்.

சூழ்நிலை மாறிற்று. மணிரங்கன் செய்தித் தாளை மடித்து வைத்துவிட்டு, தபால்களைப் பார்வையிட்டான். உடனே பதில் கடிதங்களை 'டிக்டேட்' செய்யத் தொடங்கினான். மஞ்சுளா பரபரவென்று செயல்பட்டாள். பொழுது ஓடிற்று.

மாலை நேரம். சாந்தோம் கடற்கரை கண்காட்சிச் சாலை போல் இருந்தது. 'துன்பத்தை மறக்கக் கடற்கரைக்குப் போ' என்று ஒரு புதுமொழியைப் படைக்கத் தூண்டுவதாக இருந்தது அப்போதைய அவ்விடத்துச் சூழ்நிலை.

மணிரங்கன் குறிக்கோள் எதுவுமின்றி வட திசை நோக்கி மணற் பரப்பில் மெல்ல நடந்து போய்க் கொண்டிருந்தான். மெரீனாவின் துறையோரமாக அவன் சென்றபோது அங்கே மணலில் தனிமையில் அமர்ந்திருந்த பெண் சட்டென்று எழுந்து நின்றாள். கரம் கூப்பி, ''வணக்கம்'' என்றாள். 'அட!' என்று வியந்த மணிரங்கன் அங்கேயே அசைவற்று நின்றான்.

அவனும் எதிர்பார்க்கவில்லை. அவளும் எதிர் பார்த்திருக்க முடியாது. இருவருமே வியப்புறும் வகையில் இருந்தது அந்தச் சந்திப்பு. அதனால் இருவரிடமுமே மகிழ்ச்சியும் வியப்பும் கலந்த ஓர் உணர்ச்சி பரவி நின்றது.

''உன் வீடு எங்கே?''

''இதோ, மிக அருகில்தான்; கங்குவார் தெருவில்.''

''நான் மயிலாப்பூரில் இருக்கிறேன். தினமும் கடற்கரைக்கு வருவேன். நீ?''

''தினமும் வராவிட்டாலும் வாரத்தில் இரண்டு மூன்று நாட்களாவது வருவேன்.''

''அப்படியானால் இதுவரையில் நாம் சந்திக்கவே இல்லையே!''

மஞ்சுளா கலகலவென்று சிரித்தாள்.

''சிறு குழந்தையின் பேச்சுப் போல் இருக்கிறது. நீங்கள் அந்தத் துறைக்கு வந்துவிட்டு அப்படியே போய்விடுவீர்கள். நான் இங்கே வந்துவிட்டு இப்படியே போவேன். சந்திப்புக்கு வாய்ப்பு ஏது? தப்பித் தவறி இன்று போல் என்றேனும் நீங்கள் இந்தப் பக்கம் வந்து, நானும் இங்கே இருந்திருந்தாலும் ஒருவருக்கொருவர் அறிமுகமில்லாத நிலைதானே முன்பு?''

''உண்மைதான். இதை கவனிக்க எனக்கு மூளை இல்லை'' என்று கன்ன மேட்டிச் சிரித்தான் மணிரங்கன். பிறகு, ''சற்று உட்காரலாமா? போக வேண்டுமா?'' என்றான்.

மஞ்சுளா பதில் சொல்லவில்லை; உட்கார்ந்தாள்.

பேச்சுக் காதில் விழுகிற தூரத்தில் அவளெதிரே அமர்ந்து கொண்டான் மணிரங்கன். நேரம் போவதே தெரியாமல் தான் இருவரும் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தார்கள். நேரம் போய்விட்டதை உணர்ந்தபோது அவள் ''இருள் பரவி வருகிறது. போகலாமா?'' என்றாள்.

'இன்னும் சற்று நேரம் இருப்போமே' என்று அவன் நெருப்பாசையுடன் சொல்லவில்லை. ''ஓ!...'' என்று எழுந்தான். அதனால் அவன் மனத்தில் உயர்ந்தான். சேர்ந்தாற்போல் மணலில் அடி அசைந்து நடந்து போகும்போது அசந்து மறந்துகூட அவள் மேல் அவன் படவில்லை. படக்கூடிய நெருக்கத்தில்கூட வரவில்லை. அதனால் அவன்

மனத்தில் அவன் மேலும் உயர்ந்தான். 'இவர் உத்தமர்' என்றது அவள் உள்ளம்.

"பெற்றோர் எங்கேயோ கிராமத்தில் இருக்கிறார்கள் என்றீர்களே, இங்கே யார் இருக்கிறார்கள்?"

"மாமா மனைவி. அவளுக்கு நான் துணை; எனக்கு அவள் துணை."

"அப்படியென்றால்?..."

"என் தகப்பனார் ரெட்டிக்குப்பம் என்ற கிராமத்தில் சிறு விவசாயி. சொந்தமாக இருந்த சொற்ப நிலமும் போனபின் ஊரார் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்து விவசாயம் செய்து குடும்ப வண்டியை ஓட்டிக் கொண்டிருக்கிறார். சிரம ஜீவனம். தமக்கை ரெட்டிக் குப்பத்தின் அருகே உள்ள பள்ளத்தூர் கிராமக் கணக்கருக்கு வாழ்க்கைப் பட்டிருக்கிறாள். இரண்டு தங்கைகள். படிப்பும் இன்றி, வேறு பயிற்சிகளும் இன்றி மதமதவென்று வளர்ந்து கொண்டிருக்கிறார்கள். கடைசியாக ஒரு தம்பி. உள்ளூர்ப் பள்ளிப் படிப்பை அடுத்த ஆண்டு முடிக்கிறான். என் மாமா சமீபத்தில் தான் காலமானார். ஆகவே மாமிக்குத் துணையாக வந்து நான் இருக்கிறேன்."

**ம**ங்களாவும் மணிரங்கனும் தம்பதிகள் ஆயினர். மகனின் மனம் கோணாமல் நடக்கும் லட்சியப் பெற்றோர்களைப் பெற்றிருந்தான் மணிரங்கன். ஆகவே பெற்றோரிடம் மனம் விட்டுப் பேசி இந்தக் காரியத்தைச் சாதித்துக் கொள்வதில் அவனுக்கு அதிகமான சிரமம் இருக்கவில்லை.

"அழகு இருக்கிறது. அறிவு இருக்கிறது. படிப்பு இருக்கிறது. பண்பு இருக்கிறது. குலமும் சிறந்ததாய் இருந்தால் சரிதான். நாமே முழுச் செலவும் செய்து கல்யாணத்தை நடத்திக் கொண்டுவிடுவோம்" என்றார் அவன் தகப்பனார் ராமாமிருதம்.

"பல பேச்சு எதற்கடா மணி? உனக்குப் பிடித்திருந்தால் சரிதான். ஆயிரங் காலம் சேர்ந்து வாழப் போகிறவன் நீதானே?" என்றாள் தாயார் ஜானகி அம்மாள்.

இரண்டு நாட்களில் கிராமத்திலிருந்து வேதமூர்த்தி வந்தார். பெண் சொல்கிறபடியெல்லாம் கேட்டார். ராமாமிருதத்தைப் பார்த்துப் பேசினார். காரியம் மளமளவென்று நடந்தேறியது.

பலவித சௌகரியங்களை முன்னிட்டுத் திருமணம் சென்னையிலேதான் நடந்தது. மணம் முடிந்த உடனேயே மங்களா கணவன் வீட்டை அடைந்து விட்டாள். காரியாலயத்தில் அவனுக்குக் கீழே பணி புரிய வந்தவள் அவன் இதயத்திலே இடம் பிடித்துக் கொண்டதோடு இல்லத்தரசியும் ஆகி விட்டாள்.

சொந்த வீடு; வீடு நிறைய ஆளும் பண்டங்கள். ஏவின பணிகளை உடனே செய்ய ஆட் படை. செல்வம் கொழிக்கும் நிலை.

ஜானகி அம்மாள் தன் மருமகளின் அழகைக் கண்டு கண்டு மயங்கினாள்; அறிவை உணர்ந்து உணர்ந்து பூரித்தாள். பண்புகளைப் பார்த்துப் பார்த்துப் பரவசமானாள். அவளைத் தங்கக் கூடாக ஆக்கினாள். வைர மணிகளை இழைத்தாள். பட்டாடைகளும் மண மலர்களும் கொண்டு பார்த்துப் பார்த்து அலங்கரித்தாள்; மேலும் மேலும் மெருகிட்டாள். பெற்ற மகளின் அருமையைப் பெருமையாகக் கொண்டாடினாள்.

ராமாமிருதம் அவளுக்கு மேல். வலக் காலை முன் வைத்து அவள் வாழ வந்த அன்றே பெட்டிச் சாவி, பீரோச் சாவிகளை அவளிடம் ஒப்படைத்து விட்டார். தொட்டதற்கெல்லாம், 'மங்கை, மங்கை' என்று அவளையே அழைக்கலானார்.



மணிரங்களைப் பற்றியோ ஒன்றும் சொல்லவே தேவையில்லை. அப்படி ஒரு வாலிபன் அந்த வீட்டில் நடமாடுகிறான் என்று ஐயுறும் வண்ணம் அவன் அவளில் லயித்திருந்தான்.

மணிரங்கனுக்கு அடுத்தவள் பார்வதி- பதினைந்து வயது. கடைக்குட்டி கபாலி - பத்து வயது. இருவரும் படித்து வந்தனர்; அன்பில் ஊறி வந்தனர். பெரியோர்களைக் காட்டிலும் அதிக அன்பை மஞ்சுளா மீது பொழிந்து வந்தனர்; எந்நேரமும் அவளையே சுற்றிக் கொண்டிருந்தனர்.

மஞ்சுளா அங்கே அன்பின் உருவாய் வளைய வந்து கொண்டிருந்தாள்; இளவரசியாக ஆட்சி புரிந்து வந்தாள். குடும்பத் தலைவியாகப் பணி புரிந்து வந்தாள்.

மணிரங்கன் மனத்துக்குள் வியந்து கொண்டான். திருமண நிகழ்ச்சிக்கு முன் அலுவலகத்திலும் கடற்கரையிலும் பார்த்து அளவளாவிய மஞ்சுளா வேறு; இவள் வேறு என்று சொல்லும்படி அவள் நடந்து கொண்டாள். 'அது எப்படி அவளால் முடிகிறது? 'அந்த வாய் இப்போது எங்கே?' என்பதே அவன் வியப்பு. இதைப் பற்றி அவளிடமே கேட்டும் விட்டான். அவள் தந்த பதில் மென்மையான ஒரு மோகனச் சிரிப்புத்தான். தன் பெரும் பாக்கியத்தை எண்ணி எண்ணி மணிரங்கன் மனம் பூரித்தவண்ணம் இருந்தான். ஆனால்...

மனித உள்ளத்தின் மாண்பை அவன் நன்கு அறியவில்லை. பளபள வென்று பகட்டாக மின்னும் உடம்புக்குள்ளே நோயின் ஆட்சிக்கும் இடம் உண்டு என்பதை அவன் எண்ணிப் பார்க்கவே இல்லை.

'கரும்புக்கட்டியிலும் கல் இருக்கும்' என்பது பழமொழி. 'அரண்மனை வாசமும், ஆடை அணிகளும், ஆனை குதிரைகளும் அரச போகமுமாய் வாழ்பவர்களின் உள்ளங்களிலும் புரைசலுக்கு இடம் உண்டு; ஏதாவது ஒரு சிறு குறையேனும் அந்த உள்ளங்களில் மறைந்து நின்று அரித்துக் கொண்டிருக்கும்' என்பதைக் குறிப்பதே மேற்கூறிய பழமொழி. மஞ்சுளாவின் உள்ளத்தில் இப்படி ஒரு குறை புரையோடியிருப்பதை மணிரங்கன் உணரவில்லை. அவன் உணரும்படி அவள் நடந்து கொள்ளவில்லை. ஆகவே அவனைக் குற்றம் கூறுவதிலும் பயன் இல்லை.

கைப்பிடித்த கணவனும், அவனோடு பிறந்தவர்களும், அவர்களைப் பெற்ற பெரியோர்களும் அவளைத் தங்கள் கண்ணுக்குள் வைத்து இமையால் மூடிப் போற்றி வந்தார்கள். வீட்டிலே எந்த அம்சத்திலும் குறை என்ற சொல்லுக்கே இடம் இல்லை. ஆனால் மஞ்சுளாவின் உள்ளத்திலே குறை இருந்தது.

அவள் திருமணம் ஆனவுடனே கணவன் வீட்டிலே புகுந்தவள் தான். மீண்டும் பிறந்த வீட்டில் காலடி வைக்கவே இல்லை. பெற்றோர் பன்முறை அழைத்தனர். அவளும் ஆசைப் பட்டாள். இவர்கள் அனுப்பி வைக்கவில்லை.

'அவளுடைய பெற்றோர் ஏழைகள்; தங்கள் அந்தஸ்துக்கு அவர்கள் நிகர் அற்றவர்கள்' என்று மணிரங்கனோ, அவன் பெற்றோரோ ஒரு பொழுதும் நினைக்கவே இல்லை. அப்படி அவர்களில் யாரேனும் ஒருவர் ஒரு சிறிது நினைத்திருந்தாலும் இந்தப் பிணைப்பு ஏற்பட்டே இராது.

திருமணச் செலவுகள் முழுவதையும் பிள்ளை வீட்டாரே வலியப் பெற்றுக் கொண்டு செய்தாலும் பெண் வீட்டாரைச் சற்றும் உதாசீனம் செய்ய வில்லை. அவர்களை மிகவும் மரியாதையாகவே நடத்தினார்கள்; அவர்களோடு மிக்க அன்புடன் பழகினார்கள். அவர்களைப் பரிந்து பரிந்து அழைத்தார்கள்; எத்தனை காலமாயினும் தங்கள் இல்லத்திலே இருக்கச் சொல்லி ராஜ உபசாரம் செய்தார்கள். ஆனால்—

மஞ்சுளா அவள் பிறந்த வீட்டுக்குச் செல்வதை மட்டும் யாருமே விரும்பவில்லை; அனுமதிக்க வில்லை.

''உன்னைப் பிரிந்து நான் எப்படி இருப்பேன்?'' என்றான் மணிரங்கன். குழந்தைத்தனமான அவன் பேச்சைக் கேட்டு அவள் கன்னங் குழியச் சிரித்தாள்.

''இங்கே பாலாறும் நெய்யாறுமாக ஓடுகின்றன; நீ இவ்விடம் விட்டுப் போனால் உன் உடம்பு குட்டிச்சுவராகி விடும். அதை நான் எப்படியம்மா சகிப்பேன்?'' என்றாள் ஜானகி அம்மாள்.

மாமியாரின் பரிவு கண்டு மருமகள் மகிழ்ச்சியுடன் முறுவல் புரிந்தாள்.

''உன் கை உணவை உண்ட வாய் இனியொருவர் கை உணவை ஏற்கவே ஏற்காதம்மா'' என்றார் ராமாமிருதம்.

மாமனாரின் மனப் பூர்வமான பாராட்டுரை கேட்டு மருமகள் மனம் பூரித்தாள்.

''நீ ஊருக்குப் போவதானால் நாங்களும் உன்னோடு வந்து விடுவோம். படிப்பெல்லாம் அரோஹராதான்!'' மைத்துனன், நாத்தி இருவரின் பாச உணர்ச்சி கண்டு மதனியின் உள்ளம் பெருமிதம் கொண்டது.

'என்னை மனைவியாக அடையுமுன் எப்படித் தனித்து இருந்தீர்கள்?' என்று கணவனிடம் அவள் கேட்க வில்லை.

'இங்கே வருமுன் கிராமத்தில் என் தாய் வீட்டில் பழைய சோறும் அதன் நீரும் உண்டுதான் இந்த உடம்பு இப்படி வளர்ந்தது' என்று மாமியாருக்குப் பதில் சொல்லவில்லை.

இப்படி ஒவ்வொருவருக்கும் அவள் பதில் சொல்லவில்லை என்பது மட்டும் அன்று; மனத்தினால்கூட இந்தப் பதில்களை அவள் நினைத்துப் பார்க்காததுதான் வியப்புக்குரியது. குறைவான சிரிப்பு, மகிழ்ச்சிப் புன்முறுவல், பூரிப்பு, பெருமிதம் இவற்றின் அடியிலே அந்தர்வாகினியாக, குறையுணர்ச்சி இழையோட்டம் கொடுத்துக் கொண்டே போவதை அவளே நன்கு உணர்ந்து கொள்ளவில்லையோ என்று ஐயுறும் வண்ணம் இருந்தது அவளுடைய மேலாழ்ந்த போக்கு. ஆனால்...

தனிமையில் எப்போதாவது அவள் இதைப் பற்றி எண்ணமிடுவதும் உண்டு. 'இவர்கள் இப்படி அன்பினால் செய்து வருகிற கொடுமையை எண்ணி அழுவதா சிரிப்பதா?' என்று எண்ணிச் சிரிப்பாள். சிந்தனை வரவர வலுப் பெற்று வளரும்.

'ஒவ்வொருவருக்கும் தனித்தனியே உள்ளம் என்று ஒன்று உண்டு; அதில் பல் வேறு விதமான ஆசாபாசங்கள் தோன்றுவதும் இயல்பு என்பவற்றை இவர்கள் எண்ணவே இல்லையே! பேயானாலும் தாய்-அவள் அன்பின் ஆலயம் அல்லவா? குடிசையானாலு

ஊரும் தாய் வீடு மாளிகைக்கும் மேலானது தானே? குப்பமேயானாலும் பிறந்து வளர்ந்த ஊர் குபேர பட்டணத்தைக் காட்டிலும் உயர்வல்லவா? இவர்களில் ஒருவருக்குமே இது ஏன் புரியவில்லை? அன்பென்னும் கொடுமையை ஆலோசிக்காமல் இழைக்கிறார்களே! பார்வதி நானே என் நிலைக்கு உள்ளானால் இவர்கள் சகிப்பார்களா ?.... ஆனால்.... இவர்கள் பணக்காரர்கள், பணக்கார இடத்திலே பெண்ணைக் கொடுப்பார்கள். அழைக்க, அனுப்ப எல்லாம் இருக்கும். பாருவுக்கு என் நிலை ஏன் வருகிறது?....'

எண்ணத்தின் வேகத்தைத் தாளாமல் சில சமயம் அவள் கண்களில் நீர் துளிப்பதும் உண்டு. தாபம் அதிகரிக்க அதிகரிக்க அடி நாட்களில் பிறந்த வீட்டில் உடன் பிறந்தவர்களுடன் விளையாடியும் சண்டையிட்டும் கழித்த நினைவு மேலோங்க மேலோங்கத் தாபம் மிதம் மீறி அவளை அல்லல்படுத்தும்.

அன்று காலை. மணி எட்டடித்தது. மஞ்சுளா சமையல் செய்து கொண்டிருந்தாள். ஜானகி குளித்து விட்டுச் சூரிய நமஸ்காரம் செய்து கொண்டிருந்தாள். ராமாமிருதம் செய்திப் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார். மணிரங்கன் குளித்துக் கொண்டிருந்தான். பசங்கள் பள்ளிக்குச் செல்லத் தயாராகிக் கொண்டிருந்தார்கள்.

''ஸார்!.... அம்மா....!''

ராமாமிர்தம் எட்டிப் பார்த்தார். வாடிக்கையான புடவை வியாபாரி.

''என்ன, இப்பொழுது வந்தாய் ரத்தினவேலு?''

''பெரியம்மாதான் வரச் சொன்னாங்க.''

''ஏ, ஜானகி! ரத்தினவேலுவை வரச் சொன்னாயா?''

''போகச் சொல்லுங்கள், அப்பா! ஆபீஸ் போகும் நேரத்தில் கொந்தரவு!''

''இருடா! அபசகுனம் போல் ஏதாவது சொல்லாதே!'' என்று சூரியனைப் பார்த்துக் கன்னத்தில் போட்டுக் கொண்டாள் ஜானகி.

''இந்த அம்மா எப்பவுமே இப்படித்தான், சமயம் போது தெரியாமல்!'' என்று மணிரங்கன் முணுமுணுத்தான்.

ஜானகியம்மாள் வராந்தாவுக்கு வந்தாள். ''நான் சொன்ன மாதிரி புடவை கொண்டு வந்திருக்கிறீரா?'' என்று கேட்டாள்.

''இல்லாமலா அம்மா வருவேன்? இன்னி நேத்துப் பழக்கமா?'' என்ற ரத்தினவேலு மூட்டையை அவிழ்த்தான். அடுக்குப்புடவைகளும் தகதக வென்று கண்ணைப் பறிப்பனவாயிருந்தன. குறிப்பாக ஒன்றை எடுத்து அவன் அம்மாவிடம் கொடுத்தான். அவள் மஞ்சள் பூசிய முகம் மலர்ந்தது.

''மஞ்சு! எனக்கு நேரமாகிறது. சோறு போடு!'' என்றான் மணிரங்கன் சற்று வெடுவெடுப்பாக. பெரியவர்கள் சும்மா இராமல் நேரம் போது தெரியாமல் ஏதாவது செய்கிறார்களே என்று அவனுக்கு ஆத்திரம்.

''சமையல் முன்பே ஆகி விட்டது. மனை தட்டு எல்லாம் போட்டு விட்டுக் காத்துக் கொண்டிருக்கிறேன் உங்கள் வருகைக்காக'' என்றாள் மஞ்சுளா.

மணிரங்கன் எட்டிப் பார்த்தான். கூடத்தில் வரிசையாக அவனுக்கும் குழந்தைகளுக்கும் தட்டுகளும் தம்ளர்களில் நீரும் வைக்கப் பெற்றிருந்தன.

'என் மஞ்சு...' எதை நினைத்துப் பாராட்டுவது என்றே தெரியவில்லை. அவன் வந்து அமர்ந்து கொண்டு குரல் கொடுத்தான். கபாலியும் பார்வதியும் வந்து உண்ண உட்கார்ந்தார்கள். அவர்கள் அவனோடு அமர்ந்து உண்டால் ஓரளவு அங்கே அமைதி இருக்கும். தனிமையில் என்றால் ஒரே ரகளைதான். அதற்காக மஞ்சுளாவின் ஏற்பாடு இது!

ஜானகியம்மாள் இரண்டு புடவைகளுடன் அங்கே வந்தாள். இரண்டு பட்டுப் புடவைகள். ஒன்று முழுக் கறுப்பு; அரக்குக் கரை; மற்றது பச்சை உடலும் மஞ்சள் கரையும்.

''இது உனக்குப் பிடித்திருக்கிறதா மஞ்சு?''

''நன்றாயிருக்கிறது.''

''உன் சிவப்பு உடம்புக்கு எடுப்பாக இருக்கும். உனக்குப் பிடிக்கிறதா?''

''என்ன விலை அம்மா?'' என்றான் மணி.

''பச்சை நூற்று நாற்பதாம்; கறுப்பு நூற்றெண்பதாம்.''

''அடேயப்பா!'' என்று துள்ளினான் அவன். பிறகு, ''முந்நூற்றிருபது ரூபாய்! இத்தனை விலையில் எதற்கம்மா இப்போது இரண்டு புடவைகள்?'' என்று கேட்டான்.

'' பச்சையை நீங்கள் கட்டிக் கொள்ளுங்கள் அம்மா!'' என்றாள் மஞ்சுளா.

''எனக்கு இருக்கிறது. இரண்டுமே உனக்குத்தான்'' என்று மருமகளிடம் சொன்ன ஜானகி மகனை நோக்கினாள். ''எதற்கு எடுத்தாலும் தடுத்துப் பேசாதே மணி. அப்பாவுக்கு 'ராயல்டி'ப் பணம் வந்திருக்கிறது. அவர் ஆசையோடு நாட்டுப் பெண்ணுக்கு மசக்கைக் கறுப்பும், மருதோன்றிப் பச்சையும் வாங்குகிறார். நீ வாயை மூடிக் கொண்டிரு!'' என்று சொல்லி விட்டுப் போனாள்.

மணிரங்கன் மஞ்சுளாவைப் பார்த்து உதட்டைப் பிதுக்கினான். 'அடேயப்பா! மாமனாரும் மாமியாரும் உன்னை உள்ளங்கையிலே வைத்துத்தான் தாங்குகிறார்கள்!' என்று சொல்வது போல் இருந்தது.

மஞ்சுளாவுக்கும் பெருமையாகத்தான் இருந்தது; முறுவலித்தாள்.

மஞ்சுளா டாக்ஸியில் சோர்ந்து சாய்ந்து கொண்டிருந்தாள். மணிரங்கன் உள்ளே டாக்டரோடு பேசிக் கொண்டிருந்தான்.

''என்ன டாக்டர், விளையாட்டுப் போல் நாட்கள் ஓடுகின்றன. மஞ்சுளா நல்லுணவு கொண்டு, நல்ல தூக்கம் தூங்கி மாதம் ஒன்றுக்கு மேல் ஆகிறது. நீங்களும் நுணுக்கமாகக் கவனித்துத்தான் வைத்தியம் செய்கிறீர்கள். மருந்து அவள் உடம்பில் பிடிப்பதாகவே தெரிய வில்லையே!....''

''மிஸ்டர் மணிரங்கன்! நமக்குள் இன்று நேற்றுப் பழக்கம் இல்லை. என் அறிவை முழுமையாக உபயோகித்துப் பொறுப்புடன் தான் கவனித்து வருகிறேன். மஞ்சுளாவின் இன்றைய நிலையில் கண்டபின்னு என்று கண்ட மருந்துகளை உபயோகிப்பதற்கில்லை பாருங்கள். இப்படியே ஓடிக் கொண்டிருக்கட்டும். பிரசவத்துக்குப் பிறகு....''

'' பிரசவம் நல்லபடியாக ஆனபிறகல்லவா....?''

''ஸ் ஸ் ஸ்!.... என்ன பேசப் பேசுகிறீர்கள் மணி! உங்களுக்கு என்னிடம் நம்பிக்கை இல்லா விட்டால் நீங்கள் வேறு டாக்டரிடம் செல்லுவதில் வருத்தமில்லை!''

''மன்னித்துக் கொள்ளுங்கள் டாக்டர்! ஏதோ அஞ்ஞானத்தில் பேசி விட்டேன்'' என்று மணிரங்கன் எழுந்தான்.

டாக்டரும் கூடவே எழுந்தார். ''நானும் ஏதோ அலுப்பிலே வார்த்தைகளைக் கொட்டி விட்டேன். மனத்தில் ஒன்றும் வைக்காதீர்கள்'' என்று அவன் தோளிலே தட்டிக் கொடுத்தார். ''கொஞ்சம்கூடக் கவலையே படாதீர்கள். மஞ்சுளா உடம்பில் ஒரு கோளாறும் இல்லை'' என்று சொல்லிக் கொண்டே வாசல் வரையில் வந்து வழியனுப்பினார்.

மணிரங்கன் சாம்பிய முகத்துடன் டாக்ஸியில் ஏறி அமர்ந்தான். டாக்ஸி புறப்பட்டது.

டாக்டர் ராமச்சந்திரன் சொன்னதில் தவறு ஒன்றும் இல்லை. கிரமப்படி கருவுயிர்ப்புக்குரிய குணங்குறிகள் எல்லாம் சீராகவே இருந்து வந்தன. மயற்கை மிகக் கடுமை. அதன் விளைவாக எதைக் கண்டாலும் வெறுத்தபடி தலைதூக்காமல் கிடந்தாள் மஞ்சுளா. அப்போதெல்லாம் யாரும் கவலைப்படவில்லை. அவள் உடம்பும் இளைக்க வில்லை. மாமியாரும் மாமனாரும் கணவனும் யோசித்து யோசித்து என்னவெல்லாமோ வாங்கி வந்து கொடுத்துத் தாங்கினார்கள். அவள் எதையுமே கண்ணெடுத்துப் பாராமல் வறட்டுச் சாம்பாருக்குத் திருட்டுத்தனமாக அலைந்து கொண்டிருந்தாள்.

ஆனால் மயற்கைக் கட்டம் தீர்ந்து, மயக்க நிலை தெளிந்து வாய்க்கு வேண்டியதை உண்ணத் தொடங்கிய போதில் அவள் உடம்பு சரக்கென்று உள் வாங்க ஆரம்பித்ததும்தான் ஜானகியம்மாள் கவலைப்படலானாள்; குடும்ப டாக்டரைக் கொண்டு கவனிக்கச் செய்தாள். தினசரி மணிரங்கனும் மஞ்சுளாவும் டாக்ஸியில் டாக்டரிடம் போய் வருவதும் 'இஞ்செக்ஷ'னும், மிக்ஸ்'சரும், 'டாபிலெட்டு'மாகப் பில் ஏறுவதும்தான் பெருமையாக அமைந்தனவேயன்றி அவள் உடம்பு சிறிதும் தேறவே இல்லை.

வெகு சீக்கிரத்தில் அவள் உடம்பு மிகக் கேவலமான நிலையை எட்டி விட்டது. ஜாக்கெட்டுக்கள் குடுகுடுப்பாண்டி சட்டைகளைப் போல் உடம்பிலே ஒட்டாமல் போயின. வளையல்கள் முழங் கையைத் தாண்டி ஓடின. அழகாக, வரிசையாகப் பளிச்சிடும் பற்கள் விகாரமாக வெளிப்பட்டன. முன்பு அவள் சிரித்தால் புது மலர் போல் இருக்கும்; இப்போது அதே சிரிப்பு பயமுறுத்துவதாக இருந்தது.

டாக்ஸி நின்றது. டிரைவர், ''மாமா!'' என்று குரல் கொடுத்தான். தெருவோடு போய்க் கொண்டிருக்கும் முதியோன் அருகே வந்தான். டிரைவர் அவனிடம், ''ரத்தினசாமி வீட்டிலிருந்தா வர்றீங்க? அவனோட அம்மாளுக்கு எப்படி இருக்கு?'' என்றான்.

முதியவன் சொன்னான்: ''இருக்கிறது என்னத்தெ தம்பி? 'குடலைத்தம் தெரியாம் கோடி வைத்தியம் செய்தாங்க'ன்னு வசனம் சொல்லுவாங்க. அது போல் இந்த வைத்திய




''கோடை விடுமுறையாக இருக்கு. நாம் எல்லோரும் கிளம்பி எங்கேனும் ஊருக்குப் போய்விட்டு வந்தால் என்ன?'' என்றாள் சீதம்மாள்.

''இந்தக் குழந்தைகளை இழுத்துக்கொண்டு போய்விட்டு வர்றது இலேசான காரியமா?'' என்றார் பரசுராமன்.

''அதைப் பார்த்தால் நாம்ப எப்பத்தான் ஊருக்குப் போகிறது?.. சீக்கிரம் கிளம்ப ஏற்பாடு செய்யுங்கோ'' என்றாள் சீதம்மாள்.

மறு நாள் குழந்தை குட்டிகளுடன் பரசுராம தம்பதிகள் சிதம்பரத்துக்குப் பயணமானார்கள். வழியெல்லாம் குழந்தைகள் பாடு பெரும்பாடாய்ப் போய்விட்டது.

சிதம்பரம் அடைந்தவுடன் அந்த ஊரில் உள்ள பெரிய மனிதர் ஒருவரைப் பற்றி ரொம்ப உயர்வாகப் பேசி அவருடைய பிராபல்யத்தையும் பற்றி ஒரு நண்பர் அவரிடம் தெரிவித்தார். அவர் அந்த ஊரில் எட்டு கண்ணும் விட்டடித்துக் கொண்டிருப்பதாயும், அவர் பேரைச் சொன்னால் அழுத பிள்ளை வாய்மூடும் என்றும், ஊரில் அவர் வைத்ததுதான் சட்டம் என்றும் அவர் பெயரை விஸ்தரித்தார்.

அப்போது பரசுராமனின் குழந்தை அழுது பிடிவாதம் பிடிக்கலானான். மேலும் பஞ்சமத்திலேயே நின்று கூச்சல் போட்டான். பல விளையாட்டுச் சாமான்களைக் கொடுத்தும் சமாதானப்படுத்தியும் சமாதானமடையாமல் பையன் அலறினான்.... சட்டென்று பரசுராமனுக்குத் தன் நண்பன் சொன்ன ஞாபகம் வந்தது. பையனிடம் போய், ''கல்யாணம் பிள்ளை....கல்யாணம் பிள்ளை....கல்யாணம் பிள்ளை...'' என்று பலதடவை கத்தினார். நண்பர் உள்பட எல்லோருக்கும் ஆச்சரியமாக இருந்தது.

நண்பர் உடனே அவரை அணுகி, ''என்னய்யா, குழந்தையைச் சமாதானப்படுத்தக் கல்யாணம் பிள்ளை என்று பலதடவை சொல்லிக் கத்துகிறீரே?'' என்றார்.

''அட போய்யா! நீர்தானே சொன்னீர் இந்த ஊரில் அந்தப் பெரிய மனிதர் கல்யாணம் பிள்ளை பெயரைச் சொன்னால் அழுத பிள்ளைகூட வாய் மூடும் என்று!'' என்றார் பரசுராமன்.

அவர் என்ன பதில் சொல்வார் பாவம்!

சத்தியங்களாலே ஒன்றும் புண்ணியப் படாது. அந்தம்மாளுக்கு உடம்பிலே என்ன? ஒரு கேடும் இல்லே. மனக் குறை. அது தீர்ந்துட்டால் எல்லாமே சரியாயிடும். கோவத்திலே ஓடிப் போயி மாமியார் வீட்டிலே ஏறிக்கின அந்தப் பய மவன் மொகத்தை ஒருமுறை பார்க்கணும். இதையே நான் திரும்பத் திரும்பச் சொன்னேன். நேத்து ஆளு போய் இருக்கு. பய வரணும்.''

''ஊம்'' என்று வண்டியை நகர்த்தினான் டிரைவர்.

'ஹூம்'' என்று மஞ்சுளாவிடம் முனகல் கேட்டது. மணி ரங்கன் திரும்பிப் பார்த்தான். அவள் இலேசாகச் சிரிக்கிறாள்; உதடுகள் இன்னும் கூடவில்லை.

''என்ன மஞ்சு?''

''ஒன்றும் இல்லை.''

அவள் கண்கள் மூடிக் கொண்டன; அதே சமயத்தில் அவள் மனம் திறந்து கொண்டது; வேகமாக இயங்கத் தொடங்கியது.

டாக்ஸி நின்றது. மணிரங்கனும் மஞ்சுளாவும் இறங்கி உள்ளே சென்றார்கள். அவள் படுக்கையை அடைந்தாள். அவன் அம்மாவிடம் சென்றான்.

''அம்மா! நாகராஜன் கலியாணத்துக்கு மஞ்சுவையும் அழைத்துக் கொண்டு போய் வருகிறேன் அம்மா'' என்றான்.

''அவள் எதற்கு, இந்த உடல் நிலையில்?''

''டாக்டர் சொன்னார்: உல்லாசப் பயணம் போய் வந்தால் அந்த மாற்றம் குணமளிக்கும் என்று.''

''இது என்னடா, புதுவித வைத்தியமாக இருக்கிறது!''

இதைக் கேட்டுக் கொண்டே அங்கே வந்த ராமாமிருதம், ''டாக்டர் சொன்னார் என்றால் அத்துடன் விடேன். மனத் தத்துவ முறையாக இருக்கும்.... ஜாக்கிரதையாக அழைத்துக் கொண்டு போய் விட்டு வாடா'' என்று கூறினார்.

இரவு ரயிலில் மணிரங்கன் மனைவியோடு பயணப்பட்டான். ஜானகியம்மாள் அரை மனத்துடன் விபூதி இட்டு வேப்பிலை கட்டி அனுப்பி வைத்தாள்.

மூன்றாம் நாள் மணிரங்கன் திரும்பி வந்த போது அவனோடு மஞ்சுளா வரவில்லை. திடுக்கிட்ட ஜானகி அம்மாள் பரபரப்புடன், ''மஞ்சுளா எங்கேடா?'' என்றாள்.

'' ரெட்டிக் குப்பத்தில் இருக்கிறாள்'' என்று சிரித்தான் மணிரங்கன். ''அந்தக் கல்யாணத்துக்குப் பெண் வீட்டார் தரப்பில் அவளுடைய அப்பாவும் வந்திருந்தார். மிகவும் கெஞ்சினார். எல்லோரும் அவர்களோடு ஒத்துப் பாடவே என்னால் மறுக்க முடியவில்லை'' என்று பச்சைப் பொய்யை அளந்தான்.

'' எப்பொழுது கொண்டு விடுவதாகச் சொன்னார்கள்?'' என்று கேட்ட ஜானகியின் குரலில் கவலை குமிழியிட்டது.

''இது என்னவோ ஐந்தாம் மாதமாமே; வளைகாப்பு—''

''ஆறு எட்டில் வளைகாப்பு, சீமந்தம் அல்லவா நம் குடும்ப வழக்கம்?''

''இருக்கட்டுமே, ஜானகி! நம்மைக் கலந்து கொள்ளாமல் செய்து விடுவார்களா? அப்போது தெரிவித்து விட்டால் போகிறது. சும்மா இரு.''

''அதற்கில்லை. அவள் உடம்பு இருக்கிற நிலையில் இங்கே அடிக்கொரு தடவை டாக்டரிடம் பார்த்துக் கொண்டிருக்கிற போதே கவலையாக இருக்கிறது. எங்கோ பட்டிக்காட்டில்.... அதிக நாள்... அதுதான் எனக்கு.''

அப்பாவையும் அம்மாவையும் பேசிக் கொண்டிருக்க விட்டு விட்டு மணிரங்கன் குளிப்பதற்கு நழுவினான். பிறகு உண்டு உடுத்துக் கொண்டு ஆபீசுக்கு ஓடி விட்டான்.

ஜானகி அம்மாள் அன்றையத் தபாலுக்கே பெண்ணை விட்டுக் கடிதம் எழுதச் செய்தாள். அதே தபாலுக்கு மணிரங்கனும் அலுவலகத்திலிருந்து மனைவிக்கு எழுதினான்.

'இதோ அதோ' என்று நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. சென்னைக்கும் ரெட்டிக் குப்பத்துக்கும் கடிதப் போக்குவரத்து நடந்து கொண்டே யிருந்தது. முடிவில் மஞ்சுளாவுக்கு ஆறாம் மாதம் பிறந்து விட்டது. ராமாமிருதம் வளைகாப்பு சீமந்தத்துக்கு நாள் பார்த்து எழுதினார். எழுதி விட்டு இங்கே வேண்டிய ஏற்பாடுகளை மகிழ்ச்சியோடு செய்யத் தொடங்கினார். ஜானகி அம்மாள் மட்டும் கவலை தோய்ந்த முகத்துடனேதான் வளைய வந்து கொண்டிருந்தாள், உடம்பு தேறி வருகிறது என்று மஞ்சுளா எழுதியதில் நம்பிக்கை சிறிதும் இல்லாதவளாக.

**வை**பவத்துக்கு முதல் நாள் காலை. வாசலில் டாக்ஸி வந்து நின்றது. ஹாலில் படித்துக் கொண்டிருந்த கபாலியும் பார்வதியும், ''அம்மா, மன்னி!....'' என்று கூவினார்கள்.

மஞ்சுளாவும் அவள் பெற்றோரும் உள்ளே வந்தார்கள். மஞ்சுளா பெரியவர்களைப் பணிந்தாள். பழைய செழிப்புடன் மருமகளைப் பார்த்த ஜானகிக்கு மகிழ்ச்சியால் பேச வாய் வரவில்லை. ராமாமிருதம் குரல் தழுதழுத்தது.

''எல்லாம் என்னுடைய முட்டாள்தனம். இவள் பேச்சைக் கேட்டது தப்பு. குழந்தையை முன்பே கிராமத்துக்கு அனுப்பியிருக்க வேண்டும். காலந் தாழ்ந்து மணிக்காவது அந்த யோசனை தோன்றிற்றே!''

' இல்லாமை நிறைந்த பிறந்தகத்தில் இருந்து, இப்படிக்கூட உடம்பு தேறுமா? குழந்தைக்குக் கண் திருஷ்டி விழாமல் இருக்க வேண்டும்' என்று ஜானகி அம்மாள் மனத்துக்குள் எண்ணிக் கொண்டாள். சம்பந்தியை உபசரிக்கலானாள்.

மஞ்சுளா உள்ளே சென்றாள். மணிரங்கன் சிரித்துக் கொண்டே அவள் அருகில் வந்தான். அவள் அவனைப் பணிந்து எழுந்தாள். அவள் கன்னத்தை அவன் வருடினான். மெல்லிய குரலில், ''அப்பா! இந்த மாம்பழக் கன்னம் எப்படித்தான் ஒட்டி உலர்ந்து போயிருந்தது! குடல் ஏற்றம் தெரியாமல் கோடி வைத்தியம் செய்தோமே! என் அறிவுக் கண்ணைத் திறக்க ஒரு குடியானவக் கிழவன் வேண்டியிருந்தது! வாழ்க, அந்தக் கிழவன்!'' என்றான் மகிழ்ச்சியுடன்.

''டாக்ஸி டிரைவரும் சேர்ந்து வாழ்க!'' என்று மெல்லக் கூறிய மஞ்சுளா கன்னங் குழியச் சிரித்தாள். அந்தச் சிரிப்பு அன்றலர்ந்த மலர் போல் ஒளிர்ந்தது.

# மானேர்ஸ் கிரைப் மிக்ஸர்

**குழந்தையைச் சிரித்த முகத்துடன் வைத்திருக்கிறது.**

இக்காலத் தாய்மார்கள், தங்கள் குழந்தைகளுக்கு இனிமையான சுவைதரும் மானேர்ஸ் கிரைப் மிக்ஸர் தருகிறார்கள். ஒழுங்காக மானேர்ஸ் கிரைப் மிக்ஸர் கொடுத்து வந்தால் குழந்தைகள் உடல் நலத்துடனும் உற்சாகத்துடனும் இருக்கும்.



**முடிவுகள்! மானேர்ஸ் அதிர்ஷ்டக் குழந்தை விழா :** 1963 மார்ச்/ஏப்ரல் மாதங்களில் பிறந்த குழந்தைகளுக்கு அதிர்ஷ்ட நேரமும் தேதியும் மாலை 4-26 மணி. 3 - 4 -1963 முதல் பரிசு (ரூ. 22.60. பிரதி மாதமும் 5 வருடங்களுக்கு அனுப்பப்படும்) பேபி உஷா, 18, சபாபதி லேன், காவல் ரோடு, பெங்களூர். இரண்டாவது பரிசு (ரூ 500) பேபி செந்தேல்வர் வின்துரா, [illegible] (தமிழ்) [illegible] P. O. 3வது பரிசு (ரூ. 250) பேபி தனலக்ஷ்மி, 18/188, [illegible], ஜூலை 1963 மே/ஜூன் மாதங்களில் பிறந்த குழந்தைகளுக்கு அடுத்த விழா. முடிவு தேதி 5-7-1963 விவரங்களுக்கு உங்கள் டீலர்களை விசாரிக்கவும்.

GEOFFREY MANNERS & CO., LTD.

ASP/GM. 21TAMIL

அத்தியாயம் பதினேழு

## ஊடலில் ஒரு புதிர்

வீரக் கழல் ஒலிக்க, போர்க் கவசங்கள் பூட்டிய மார்பு விம்மிப் புடைக்க, செருக்கலை ஏறிச் சிவந்த முகத்தினனாய், சர்வ கம்பீர மிடுக்குடன் அந்த மேன்மாடத்துப் படிகளில் இறங்கி வந்து கொண்டிருந்தான் பல்லவ இளவரசன் கோவிந்தவர்மன்.

முன்றிலையடுத்த உள்கூடத்தின் பாரிய தூண் ஒன்றில் ஒடுங்கிச் சாய்ந்து நின்ற இளங்கோப்பிச்சி, நிலைகொள்ளாமல் சுழலும் தன் விழிகளை மேலுயர்த்தி அவனைப் பீதியுடன் நோக்கினாள்.

பார்வையும், அலட்சிய மிடுக்கு நிறைந்த புன்னகையும், பேராண்மை செருமிய பாவனைகளுமாக விளங்கினான்!

இளங்கோப்பிச்சியின் மனம் மிரண்டு நடுங்கியது. பிரமித்த நிலையில் அவனைப் பார்த்துக் கொண்டே பின்னால் நகர்ந்தாள் அவள்.

அரண்மனைச் சோலையில் அவளைச் சந்தித்தபோது அவளருகில் நெருங்கவோ, நெருக்கு நேர் பார்க்கவோ அஞ்சி ஒதுங்கி நின்ற அவன், இப்போது சிறிதும் தயக்கமின்றிச் சிம்ம நடைபோட்டு வந்து, ''சோழ இளவரசிக்கு என்மேல் ஏற்பட்ட கோபம் இன்னமும் தணியவில்லையா?'' என்று குறும்பாகக் கண் சிமிட்டிக் கேட்டவாறு அவளது வாழைக் குருத்துப் போன்ற கரத்தை உறுதியாகப் பற்றினான்.

இளங்கோப்பிச்சியின் உடல் சில்லிட்டது. பார்வையை நிமிர்த்தி அவனைப் பார்க்கவும் சக்தி யிழந்தவளாய் நிலவுத் தாமரையெனத் தலை குனிந்து நின்றாள் அவள்.

# பத்தினிக் கோட்டம்

### ஜெகசிற்பியன்

சற்று நேரத்துக்கு முன் அரண்மனைச் சோலையில் பார்த்த அவனது தோற்றத்துக்கும் இப்போதைய கோலத்துக்கும்தான் எவ்வளவு வித்தியாசம்! கவலை தேங்கிய முகம், வினயமான நடை, குழைவு நிறைந்த பார்வை, கனிவு கலந்த புன்சிரிப்பு — என்றிவ்வாறான தோற்றத்துடன் அங்கே காணப்பட்ட அவன், இப்போது ஆவேச உணர்ச்சியில் மூழ்கித்த பயங்கர மகிழ்ச்சி நிலவும் முகமும், கடாக் களிற்றின் மதர்ப்பேறிய நடையும், அஞ்சா நெஞ்சங் கொண்ட அரிமாவின்





"என் இதயக் கனியாளின் பூ மனத்தை நோக வைத்த குற்றத்துக்காக இனி நான் மன்னிப்புக் கோரப் போவதில்லை; அதற்கு அவகாசமும் இல்லை. ஆனால் அப்படியொரு தவறு இழைக்க நேர்ந்த காரணத்தை மட்டும் இப்போது சுருக்கமாகச் சொல்லி விடுகிறேன்: பழையாறைச் சோழர் தம் மகளைச் சளுக்கிய விக்கிரமாதித்தனின் மைந்தனுக்கு மணம் செய்து தரப் போவதாகப் பெரும்பிடுகு முத்தரையர் சொன்னதைக் கேட்டுத்தான் அன்று அப்படி மனம் பேதலித்துப் பித்தனைப் போல் நடந்து கொண்டு விட்டேன். என்னுடைய நிலையில் வேறு யார் இருந்தாலும் அப்படித்தான் நடந்து கொண்டிருக்க முடியும் என்றும் நினைக்கிறேன்." -கனிந்த குரலில் இவ்வாறு கூறி மெல்லச் சிரித்தான் கோவிந்தவர்மன்.

இளங்கோப்பிச்சி இதைக் கேட்டுத் திடுக்குற்றுத் தலை தூக்கினாள். "என்ன சொன்னீர்கள், இளவரசே? என் தந்தையார் அப்படியொரு முடிவு செய்திருப்பது உண்மைதானா?"

'ஆம்' என்று இலேசாகத் தலையசைத்தான் கோவிந்தவர்மன்.

"அந்த முடிவை முத்தரையர் எவ்வாறு அறிந்தார்?" என்று அவசரமாக வினவினாள் இளங்கோப்பிச்சி.

"பழையாறைக்குப் போனபோது பழையாறைச் சோழரின் வாயிலாகவே அதை அவர் அறிந்தார்!"

"அப்படியானால் என் அநுமானம் சரி என்றே ஆகிறது...."

"நீ என்ன அநுமானித்தாய், இளவரசி?"

"என் தந்தையாரின் அந்த முடிவைக் கேள்விப்பட்டுத்தான் அன்றைய தினம்

நீங்கள் என்னைத் திரும்பியும் பார்க்காமல் அலட்சியப்படுத்தி விட்டுச் சென்றீர்கள் என்று எண்ணினேன். அது சரியாகவே ஆகி விட்டது.''

''உனக்கும் அவ்விஷயம் தெரியுமா? உன் தந்தையார் அந்த முடிவை உன்னிடமும் வந்து சொல்லி விட்டாரா...?''

'' இல்லை ; பழையாறை அரண்மனையை விட்டு வெளியேறி ஆலம்பாக்கம் இல்லத்தில் வந்து தங்கின நாள் முதல் இன்றுவரை என் தந்தையாரை நான் இன்னும் பார்க்கவே இல்லை.''

''அப்படியானால் உனக்கு அந்தச் சேதி எப்படி, யார் வாயிலாகத் தெரிந்தது ?''

''நீங்கள் யார் மூலமாகத் தெரிந்து கொண்டீர்களோ, அவரே எனக்கும் அதைத்தெரிவித்திருக்கலாம்அல்லவா?''

''முத்தரையரைச் சொல்கிறாயா, இளவரசி?''

''அவராகத்தான் இருக்கும் என்று வைத்துக் கொள்ளுங்களேன்!''

''ஏன்சந்தேகத்துடன் சொல்கிறாய்?''

''அவர் அவ்விஷயத்தை என்னிடம் நேரிடையாகத் தெரிவிக்கவில்லை.''

''வேறெப்படித் தெரிவித்தார்?''

'' ஆலம்பாக்கத்துச் சாலையோரம் நின்று, எல்லையற்ற தாபத்துடன் இதயத்தைக் கண்ணிலே ஏந்திக் கொண்டு உங்களை எதிர்நோக்கிக் காத்திருந்த என்னைத் திரும்பியும் பார்க்காமல் போனீர்களே, அன்றைய தினம் இருள் சூழ்ந்த நேரத்தில் யாரோ ஒரு மனிதர் வந்து, நான் இருந்த அறைக்குள் ஓர் ஓலையைப் போட்டுவிட்டு ஓடி மறைந்தார். அப்படி ஓடிய மனிதர் யார் என்று அறிய முடியாத நிலையிலிருந்த நான் அவ்வோலையை மட்டும் எடுத்துப் படித்துப் பார்த்தேன். ஊர் பேர் இல்லாமல் எழுதப் பெற்றிருந்த அந்த ஓலையில், உங்கள் மனத்தைக் கலக்கிய அதே சேதி எனக்கும் தெரிவிக்கப் பட்டிருந்தது.

இந்த விவரத்தைக் கேட்டு வியப்படைந்து நின்ற கோவிந்தவர்மன், ''அது சரி, இளவரசி! அன்று நான் மதுரைக்குத்தான் புறப்பட்டுப் போகிறேன் என்பதை நீ எப்படி அறிந்தாய்? அதை அறிந்துதானே என்னைப் பின் தொடர்ந்து இங்கு வந்து சேர்ந்தாய்?'' என்று வினவினான்.

''அன்று நீங்கள் எங்கே புறப்பட்டுப் போகிறீர்கள் என்ற விவரமே எனக்குத் தெரியாது. இந்த அரண்மனைக்கு வந்த பிறகுதான் உங்களை எதிர்பாராதவிதமாகச் சந்தித்தேன்.''

''அப்படியானால் நீ மதுரைக்கு வரக் காரணம்?''

''அநாமதேயமாக எனக்குக்கிடைத்த அவ்வோலையில் மேலும் சில முக்கிய சேதிகள் இருந்தன. சளுக்கிய விக்கிரமாதித்தனுடன் என் தந்தை கூட்டுச் சேர்ந்திருக்கிறார் என்றும், அந்தக் கூட்டுறவை வலுப்படுத்தவே அவனுடைய மைந்தனுக்கு என்னை மணம் முடித்துத் தர அவர் இசைந்திருக்கிறார் என்றும் வரையப் பெற்றிருந்ததோடு, சளுக்கிய விக்கிரமாதித்தன் இன்னும் ஓரிரு வாரத்துக்குள் பாண்டி நாட்டைத் திடீரென்று படை கொண்டு தாக்கிக் கைப் பற்றிக் கொள்ளத் திட்டமிட்டிருக்கிறான் என்னும் சேதியும் அதில் குறிக்கப் பெற்றிருந்தது. அந்தப் பயங்கரச் சேதியைப் பாண்டிய மன்னருக்கு உடனடியாகத் தெரிவிக்க வேண்டியது என் கடமை என்று எண்ணினேன். இதை அநந்தமஹியம்மையிடமோ இளங்காரிக் குடையானிடமோ சொன்னால் அவர்கள் அநாவசியமாகப் பீதியடைந்து நான் மதுரைக்குப் போவதையும் தடுத்து விடுவார்கள் என்று அஞ்சி, அவர்களிடமும் சொல்லிக் கொள்ளாமல் தனியாகவே புறப்பட்டு வந்து விட்டேன்.''

திகைத்து நின்ற கோவிந்தவர்மன் திடுமெனத் தலை தூக்கிக் கேட்டான்: '' 'சளுக்கியர்கள் பாண்டி நாட்டின் மேல் படையெடுக்க விருக்கும் சேதி உனக்கு எப்படித் தெரிந்தது' என்று பாண்டிய மன்னர் கேட்டபோது இந்த ஓலையைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவில்லையே, ஏன்? மதுரைக்கு வரும் வழியில் அவ்விவரத்தை நீ அறிந்ததாக அல்லவா அவரிடம் சொன்னாய்?''

''ஆமாம், இளவரசே! படையுதவி கோரி நீங்கள் எடுத்து வந்த ஓலையையே அவர் பொய் ஓலை என்று நிராகரித்துப் பேசிய சமயம், நானும் ஓர் அநாமதேய ஓலை மூலம் சளுக்கியரின் படையெடுப்புத் திட்டத்தை அறிந்ததாகச் சொன்னால் அதை உண்மை என்று நம்புவாரா? எனவேதான் அந்த விஷயத்தை அவரிடம் சொல்லாமலே மறைத்து விட்டேன்.''

வியப்பு மேலிட்டவனாய் அவளைக் குறுகுறுவெனக் கூர்ந்து நோக்கிய கோவிந்தவர்மன் தயங்கிய குரலில், ''இளவரசி! நீ நினைப்பதுபோல் இந்த விவரங்களை அவ்வோலையின் மூலம் உனக்கு அறிவித்தவர் முத்தரையராக இருக்க முடியாது. வேறு யாரோ அந்தக் காரியத்தைச் செய்திருக்க வேண்டும்....'' என்று இழுத்தான்.

இளங்கோப்பிச்சி இதை ஒப்புக் கொள்ள மறுப்பவள்போல் தலையை

5-26-5

வேகமாக ஆட்டினான். ''என் தந்தையாரின் அந்தத் தகாத போக்கைப் பற்றி முதலில் அறிந்தவர் முத்தரையர்தானே? ஆகவே, அவர்தான் அவ்வோலையின் மூலம் என்னை எச்சரித்திருப்பார்.''

''அப்படி இருக்க முடியாது, இளவரசி! ஏனென்றால், பழையாறைச் சோழரின் முடிவுகளை மட்டும்தான் முத்தரையர் அறிவாரே தவிர, சளுக்கிய விக்கிரமாதித்தன் பாண்டி நாட்டின் மேல் படையெடுக்கப் போகிறான் என்னும் விவரம் அவருக்குத் தெரியவே தெரியாது. அவரிடம் நான் விடை பெற்றுக்கொண்டு மதுரைக்குப் புறப்பட்ட அந்த விநாடி வரையில்கூட அவருக்கு அவ்விஷயம் தெரியாதென்று நிச்சயமாகச் சொல்வேன். அப்படித் தெரிந்திருந்தால் பாண்டிய மன்னரிடம் படையுதவி பெற்று வர என்னை இங்கே அனுப்பியிருக்க மாட்டார். எனவேதான், உனக்கு அவ்விவரங்களைத் தெரிவித்து ஓலை எழுதியவர் வேறு யாரோ ஒரு மூன்றாம் மனிதராக இருக்க வேண்டும் என்கிறேன்.''

குழப்பமும் திகிலுமாகத் தலை குவிந்த இளங்கோப்பிச்சி சிறிது நேரச் சிந்தனைக்குப் பின், ''சரி; இளவரசரின் கூற்றுப்படியே அந்த விஷயம் இருக்கட்டும். என் திருமணத்தைப் பற்றி என் தந்தையார் செய்த முடிவைக் கேட்டு என்னையே வெறுக்கத் துணிந்த நீங்கள், இங்கு வந்த பிறகு அந்த வெறுப்பை அத்தனை சீக்கிரம் மாற்றிக் கொண்டு விட்டீர்களே, அது ஏன்?'' என்று துக்கம் பீறிடும் குரலில் குமுறிப் போய்க் கேட்டாள்.

கோவிந்தவர்மன் கலகல வெனச் சிரித்தான். ''பழையாறைச் சோழரின் அந்தப் பயங்கர முடிவை முத்தரையரின் வாயிலாகக் கேட்டபோது உன்னை மட்டுமல்ல இளவரசி, இந்த உலகத்தையே நான் வெறுத்துச் சபித்தது உண்மைதான்! ஆனால், இங்கு வந்து அவருடைய அதே முடிவைப் பாண்டிய மன்னரின் வாயிலாகக் கேட்டதும் அந்த எனது வெறுப்பு வேதனைக் குமுறல் எல்லாம் பஞ்சாய்ப் பறந்தோடி, என் அன்புக் கோமகள் இளங்கோப்பிச்சியை முன்னை விடப் பன்மடங்கு ஆவேசத்துடன் நேசித்துப் பூசை செய்ய வேண்டுமென்ற துடிப்புக்கு நான் உள்ளாகிப் போனேன்!'' என்று கூறி மீண்டும் நகைத்தான் அவன்.

புதிர் போன்ற இந்தப் பதிலைப் புரிந்து கொள்ள முடியாமல் திகைப் படைந்து நின்றாள் இளங்கோப்பிச்சி.

## அத்தியாயம் பதினெட்டு

# நெல்வேலி நோக்கி....!

இரண்டாம் முறையாக முரசு முழங்கியது. கொம்பொலி எழுந்து விண்ணைச் சாடியது.

அந்த ஒலிகளைக் கேட்டு விம்மிப் புடைத்து நிமிர்ந்த கோவிந்தவர்மன் திமிறலிடும் காளைபோல் சடாரென்று திரும்பி, ''நேரம் நெருங்கி விட்டது! நெடுமாறர் காத்துக் கொண்டிருப்பார்! நான் சென்று வர விடை கொடு, கண்ணே!'' என்று அடித்தொண்டையில் கரகரத்தவாறு அவளெதிரே வந்து விறைத்து நின்றான்.

ஆண்மை பொங்கிக் குமுறும் அவனது அதிகாயபாகுவான தோற்றத்தைக் கண்டு மெய்சிலிர்த்து மயங்கி நின்ற இளங்கோப்பிச்சி, ''தாங்கள் இப்போது....?'' என்று தயங்கித் தடுமாறும் குரலில் இழுத்தாள்.

''ஆணவத் திமிர் கொண்ட சளுக்கியப் படைகளை நெல்வேலிப் போர்க் களத்தில் தூக்கியெறிந்து பந்தாடப் புறப்பட்டு விட்டேன், கண்ணே!'' — பயங்கர உறுமலுடன் சிரித்துச் சொன்னான் கோவிந்தவர்மன்.

இளங்கோப்பிச்சி இதைக் கேட்டு வியப்பின் விளிம்பைத் தொட்டவளாய்த் தன் நீள் விழிகளை அகல மலர்த்தினாள். ''அப்படியா!.... பாண்டியப் பேரரசர் தாங்கள் கோரிய படையுதவியைத் தங்களுக்கு அளித்து விட்டாரா, இளவரசே ?''

கோவிந்த வர்மனின் கண்டத்திலிருந்து ஒரு குறும்புச் சிரிப்பு உருண்டது. ''நான் இங்கு வருவதற்கு முன்பே என் தலைமையை எதிர்பார்த்து இந்த அரண்மனைக் கோட்டையின் கிழக்கு வாயிலில் மாபெரும் படையொன்று காத்து நிற்கிறதே, அதை நீ பார்க்கவில்லையா?''

இளங்கோப்பிச்சி குழம்பித் தவித்தாள். அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை.

''கவலைப்படாதே, இளவரசி! உன் மனத்தில் எழும் கேள்விகளுக்கெல்லாம் உனது அத்தையார் பாண்டிமாதேவி பதிலிறுப்பார். அவர் மூலம் நீ எல்லா விவரங்களையும் அறிந்துகொள்ளலாம்.'' - இப்படிக் கூறிய கோவிந்தவர்மன் குலுங்கிச் சிரித்தான்.

''அன்று 'நீங்கள் என்னை அலட்சியப் படுத்தி என் இதயத்தில் நெருப்பை அள்ளிக் கொட்டியது போல் இனி ஒரு நாளும் செய்ய மாட்டீர்கள் என்று நான் உறுதியாக நம்பலாம் அல்லவா?'' என்று துயரம் முட்டிய குரலில் விம்மிக் கொண்டு கேட்டாள் அவள்.

கோவிந்தவர்மனின் முகம் வாடியது! ''மன்னித்துவிடு, கண்ணே! இந்த ஜன்மத்தில் மட்டுமல்ல, இனி வரும் ஜன்மத்திலும் உன்னையே காதலியாக அடைய வேண்டுமெனப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கும் நான், அப்படி ஒரு போதும் நடந்துகொள்ள மாட்டேன்.''

பரபரப்புடன் கண்களைத் துடைத்துக் கொண்டு ஓர் அழகுப் புன்னகையுடன் நிமிர்ந்த இளங்கோப்பிச்சி கணீரென்ற குரலில், ''பார்புகழ் கொண்ட பல்லவ குல மாணிக்கமே! வீரத்தின் மகனுய்ச்சென்று, வெற்றியின் மூத்ததலை மகனுய்த் திரும்பி வாருங்கள்!'' என்று கூறிக் கொண்டே தன் நிலாப்பிறை நுதலில் வேர்வையால் நீர்த்துத் தளதளத்திருந்த திலகச் சாந்தைத் தொட்டு அவனது விசாலமான நெற்றியில் வீரத் திலகமிட்டாள்.

கோவிந்தவர்மன் அவளை அப்படியே இழுத்து அணைத்துத் தன் விரிந்த மார்பில் ஐக்கியப்படுத்திக் கொண்டு, ஒருகணம் மெய்ம்மறந்திருந்தான். மறுகணமே அவளைப் பளிரென விலக்கி ஒதுக்கிவிட்டு அரண்மனை முன்றிலை நோக்கிப் பாய்ந்தோடினுன்.

**சோ**திடர்கள் குறித்த சுப நேரம் நெருங்கியது. அந்த நேரம் பார்த்து அங்கு வந்து சேர்ந்த 'அறிவர்' என்னும் சித்தர் ஒருவர், ''பழம் பெரும் பாண்டி நாட்டைச் சூழ வந்த சளுக்கியக் காரிருள் இருவருளின் துணையால் அகலுமாக! சிவநேசச் செல்வராம் நின்றசீர் நெடுமாறர் நெல்வேலிச் செரு வென்று வெற்றி வாகை சூடி வருவாராக!'' என்று வாழ்த்துக் கூறினுர்.

கரம் குவித்துத் தலை வணங்கி நின்றிருந்த பாண்டியப் பேரரசர் நெடுமாறர் வில்லெனத் துள்ளி நிமிர்ந்தார். ஆலவாய் அழகிக் கோயிலின் குருக்கள் கொண்டு வந்து வழங்கிய திருநீற்றுப் பிரசாதத்தைப் பயபக்தியுடன் பெற்றுத் தம் நெற்றியிலும் மேனியிலுமாகத் தீற்றிக்கொண்டு திரும்பிய அவரது பார்வை அந்த முன்றிலின் உள் வாயிலை நோக்கிச் சென்றது.

குங்கும மங்கல மஞ்சள் நீர்த் தட்டுடன் தமது மனைவியை நோக்கி வந்தார் பாண்டிமாதேவி மங்கையர்க்கரசி. அவர் கண்கள் இலேசாகக் கலங்கியிருந்தன.

"தேவி, உன் கலக்கத்துக்கும் கவலைக்கும் காரணம் அறிவேன்! எதிர்பாராமல் நமக்கு ஏற்பட்டுவிட்ட இந்த நெருக்கடி நிலைமையால், திருமருத மூன்துறை சிவன் கோயிலில் எடுப்பித்து வந்த திருக்கைக்கோட்டித் திருப்பணி பாதியில் நின்றுவிட்டதே என்று வருந்தப்படுகிறாய்; வருந்தாதே, தேவி! எல்லாம் திருவருளின் சித்தப்படிதான் நடக்கும். நான் இப்போது ஏற்று நடத்தப்போகும் யுத்தமும் இறைவனுக்குப் பிடித்தமான ஒரு மாபெரும் திருப்பணிதான்! அதர்மத்தை அழித்து அறத்தை நிலைநாட்டுவது எல்லாவிதத் திருப்பணிகளிலும் தலையாயது அல்லவா? ஆகவே, நிறை மனத்தோடு நீ எனக்கு விடைகொடுக்க வேண்டுகிறேன்!"- இளநகை மேவிய கம்பீரக் குரலில் இவ்வாறு கூறித் தம் தேவியாரின் முகத்தைத் தரிசித்தார் பாண்டியப் பேரரசர்.

"என் வணக்கத்துக்குரிய இறைவா! வீரமுடன் சென்று, வெற்றியுடன் திரும்பி வருவீராக!" — மெல்லிய தொனியில் இவ்வாறு கூறிக் கொண்டே தம் மணாளரை மும்முறை வலம் வந்து வணங்கி, மங்கல ஆரத்தி எடுத்து, அவரது வெண்ணீறணிந்த நெற்றியில் வீரத் திலகம் இட்டார் பாண்டிமாதேவி.

திரிபுரமெரித்த விரிசடைச் சிவனே அங்கு எழுந்தருளி வந்தாற்போல் அத்தனை வீறார்ந்த கோலத்தில் விளங்கிய மாமன்னர் நெடுமாறர், தங்கச் சிலையெனத் தலைகுனிந்து நின்ற இளங்கோப் பிச்சியின் எதிரில் போய் நின்றார். உறை விட்ட நீண்ட வாள் ஒன்றைப் பொன் தாம்பாளத்தில் வைத்து ஏந்திக் கொண்டு அங்கு விரைந்து வந்து நின்றார் அமைச்சர் குலச்சிறையார்.

"சோழிய குல வீரத் திருமகளே! வெற்றிகளை மட்டுமே சந்தித்துப் பழக்கப்பட்ட இந்த வீர வைர வாளை உன்னுடைய வீறார்ந்த கரங்களால் வழங்கிப் பெற வேண்டுமென நான் விரும்புகிறேன்!" என்று கூறி அவள் முன் தம் இரு கைகளையும் நீட்டினார் மன்னர்.

இளங்கோப்பிச்சியின் முகம் பெருமிதப் பாங்குடன் பொலிவு பெற்று மலர்ந்தது. அவளது பூவுடல் சிலிர்த்துப் பூரித்தது. "பாண்டியர் அடையப் போகும் வெற்றி எங்கள் பல்லவ நாட்டின் விடிவுக்கு வழிகோல வேணுமாய் எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன்!" என்று நடுங்கும் குரலில் கூறியவாறு பொன் தட்டில் பளிச்சிட்டுக் கொண்டிருந்த வைர வாளை எடுத்து நெடுமாறரின் கரங்களில் நிமிர்த்திக் கொடுத்தாள்.

மூன்றாம் முறையாக ஆலய மணி ஓங்கி ஒலித்தது.

முன்றிலின் இரு புறமும் கும்பலாக நின்ற நாம்பெரும் குழுவையும், எண் பேராயத்தையும், அரசாங்க உயர்தர அதிகாரிகளையும் பார்த்து அமைதியாகச் சொன்னார் அமைச்சர் குலச்சிறையார்: "மதிப்புக்குரியவர்களே! பல்லவ நாட்டைக் கைப்பற்றிச் சுவை கண்ட சளுக்கியர்கள் இப்போது நம் பாண்டி நாட்டையும் பதம் பார்க்கத் துணிந்து படையெடுத்து விட்டார்கள். இன்று காலை விடியற்சாமப் போதில் பாண்டி நாட்டின் வட எல்லையான நெல்வேலியில் சளுக்கியருக்கும் நமக்கும் போர் மூண்டுவிட்டது. சளுக்கியப் படைத் தளபதி விக்கேசி என்பவன் என்ன காரணத்தினாலோ நெல்வேலிப் போர்முனைக்கு வராததால், சளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தனே நேரிடையாக வந்து போரில் இறங்கி விட்டானாம். எனவேதான் நம் மாவீர மாமன்னர் அவனுடன் நேரில் பொருது கொள்ள இப்போது போர்முனைக்குப் புறப்படுகிறார். நெல்வேலியை மையப் படுத்தி மேற்கிலிருந்து நம் இளவரசர் கோச்சடையரும், தெற்கிலிருந்து பாண்டிய மன்னரும், கிழக்கிலிருந்து பல்லவ இளவரசர் கோவிந்தவர்மரும் சளுக்கியப் படைகளின்மேல் மும்முனைத் தாக்குதல் நடத்தப் போகிறார்கள். இந்த நிலவரங்களை மனத்தில் கொண்டு நீங்கள் நம் உள்நாட்டு ராஜீய விவகாரங்களைத் திறம்பட நடத்திச் செல்ல வேண்டுமென்று மாமன்னரவர்களின் ஆணைப்படி உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்."

கூடிநின்ற குழுவினர் ஒரே குரலில் கோஷமிட்டனர். "பாண்டியப் பேரரசர் வாழ்க!... வெற்றி நமதே!"

முரசங்கள் முழங்கின. சங்கமும் கொம்பும் ஒருங்கு சேர்ந்து ஆர்த்தன. கிழக்குக் கோட்டை வாயிலில் கொந்தளித்து நின்ற சோழியப் படைகள் புழுதிக் கூடாரமிட்டுப் புறப்பட்டன.

அறுபத்தைந்து வயதைக் கடந்த நிலையிலும் வாலிபத்தின் பரிபூரண வலிமைச் செருக்கோடு விம்மிப் புடைத்து நின்ற நெடுமாறர், தம் அருகில் மதமேறிய களிறுபோல் விரைத்து நின்றுகொண்டிருந்த பல்லவ இளவரசன் கோவிந்த வர்மனின் திண்ணிய தோள்மீது கைபோட்டு அழைத்தவாறு அரண்மனை வாயிலில் நின்றிருந்த புரவிகளை நோக்கி மிடுக்கு நடைபோட்டு நடந்தார்.

மறு கணம், அவ்விருவரையும் தம் முதுகில் ஏற்றிக்கொண்ட புரவிகள் நாற்றிசையும் நடுநடுங்க, கனைத்துக்

கொண்டே மின்னலெனப் பாய்ந்து சென்று மறைந்தன.

இரவின் இரண்டாம் சாமம்.

பூஜையை முடித்துக் கொண்டு அப்போதுதான் அத்தாணி மண்டபத்துக்கு வந்து சேர்ந்த பாண்டிமாதேவி, அங்கு தனிமையில் இளங்கோப்பிச்சி இருக்கக் கண்டு வியப்படைந்தார்.

''குழந்தாய்! நீ இன்னும் உறங்கச் செல்லவில்லையா?''

சிந்தனையிலிருந்து விடுபட்டவளாய் எழுந்து நின்ற இளங்கோப்பிச்சி அவரைப் புன்னகையுடன் நிமிர்ந்து நோக்கினாள். ''அத்தையாரின் வருகையை எதிர்பார்த்துத்தான் இங்கு காத்திருக்கிறேன்...''

''எனக்காகக் காத்திருக்கிறாயா? என்ன விஷயம், குழந்தாய்?''

''நாளை விடியற்போதில் நான் ஆலம்பாக்கத்துக்குப் புறப்பட அத்தையார் அநுமதி தரவேண்டும்.''

''என்ன! பல்லவ நாட்டுக்குப் போகிறாயா? நெல்வேலிப் போர் முடியும் வரை நீ இங்கேயே தங்கி யிருப்பாய் என்றல்லவா நான் எண்ணிக் கொண்டிருக்கிறேன்?''

''இல்லை, அத்தை! நான் போய்த்தான் ஆக வேண்டும்.''

''உன் விருப்பத்துக்குத் தடை சொல்வதாக நினைக்காதே, குழந்தாய்! உனது அருமைத் தந்தையார் எத்தகைய சூழ்நிலையில் என்னென்ன காரியங்களைச் செய்து வருகிறார் என்பது பற்றிச் சற்றுமுன் உன்னிடம் விளக்கிக் கூறிச் சென்றேன். இந்நிலையில் நீ பல்லவ நாட்டுக்கோ, பழையாறைக்கோ போவது அத்தனை உசிதமாக எனக்குப் படவில்லையே!''

''அத்தையார் மன்னிக்க வேண்டும்; நான் அங்கு போக வேண்டிய ஒரு கட்டாயம் எனக்கு இருக்கிறது.''

''அந்தக் கட்டாய நிலை என்ன என்பதை நான் அறியலாமா, இளவரசி?''

''பல்லவபுரம் அரண்மனையில் ஒரு பெரிய காரியத்தை நான் சாதிக்க வேண்டியிருக்கிறது. அதை எப்படியும் சாதித்தே ஆக வேண்டுமென எனக்கு நானே சபதமும் ஏற்றிருக்கிறேன். எனவேதான்...''

நீண்ட நேரச் சிந்தனைக்குப் பின் பெருமூச்சுவிட்டு நிமிர்ந்த பாண்டிமாதேவி, ''சரி, குழந்தாய். இதற்கு மேல் உனக்கு நான் ஏதும் சொல்ல இயலாது. உன் விருப்பப்படியே நாளைக் காலை நீ பல்லவ நாட்டுக்குப் பயணமாகலாம்'' என்று உள்ளார்ந்த கவலையுடன் முணுமுணுத்தார். (தொடரும்)

# செம்மங்குடி அளிக்கும் இரு நூல்கள்

**முசிறி சுப்பிரமணிய அய்யர்**

ஒரிஸ்ஸாவில் பன்னிரண்டாம் நூற்றுண்டில் வாழ்ந்த ஜயதேவ கவியின் கீத கோவிந்த மகாகாவியம் அஷ்டபதிகள் அல்லது எட்டு அடிகள் கொண்ட இசைப் பாடல்களும் சுலோகங்களும் அடங்கிய வடமொழி நூல்; இந்தப் பாடல்கள் தமிழ் நாட்டில் பஜனை பத்ததியில் முக்கியமான இடம் பெற்று வந்துள்ளன.

ஜயதேவர் இயற்றிய வர்ணமெட்டுக்கள் நாளடைவில் மறைந்துவிட்டன போலும். சுமார் இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னர் போதேந்திர ஸ்வாமிகள் அக்காலத்திலிருந்த சிறந்த இசை விற்பன்னர்களைக் கொண்டு சபை கூட்டி இந்தப் பாடல்களுக்கு இசை அமைத்ததாகத் தெரிகிறது. அம்முறையே தமிழ் நாட்டில் வழங்கி வருகிறது.

இந்நிலையில் ஸ்ரீ செம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயர் அவர்கள் தமிழ் நாட்டில் பஜனை பத்ததியில் சம்பிரதாயமாகக் கையாளப் பட்டு வரும் முறையையொட்டி ஸ்வர தானக் குறிப்பு எழுதி, தேவநாகரி, மலையாள லிபிகளில் இந்நூலை வெளியிட்டுள்ளது மிகவும் வரவேற்கத் தக்கது.

முதல் அஷ்டபதியின் முதல் அடியைச் சம்பிரதாய முறையில் கொடுத்து மற்றவற்றை இராகமாலிகையாக அமைத்துள்ளார். பைரவி, ஆனந்த பைரவி அஷ்டபதிகளை அவற்றின் சொற்களுடைய சந்த அமைப்



பைத் தழுவி, ஆதி, ரூபக தாளங்களில் அமைத்துள்ளார்.

ஒவ்வொரு ராகத்தின் லக்ஷணத்தையும் தெளிவாகக் கொடுத்துள்ளமை பாராட்டத்தக்கது. கண்டா, ஆஹிரி, தேசாக்ஷி, மங்கள கைசிகி ராகங்களுக்கு அந்தந்த அஷ்டபதிகள் சிறந்த இலக்கியங்களாக அமைந்துள்ளன. தேவநாகரியில் வெளியிட்டுள்ளபடியால் வட நாட்டினரும் இவற்றின் சுவையை உணர்ந்து கொள்ள வாய்ப்புக் கிடைத்திருக்கிறது.

**கீத கோவிந்தம்** *(ஸ்வர தானக் குறிப்புடன்)*; கிடைக்குமிடம்: இண்டியன் மியூஸிக் பப்ளிஷிங் ஹவுஸ், 4, பந்தர் தெரு, சென்னை-1; விலை: ரூ. 3.00.

ஸ்வர சாஹித்தியமாக அமைந்துள்ள தியாகராஜ ஸ்வாமிகளின் பஞ்சரத்தினக் கீர்த்தனைகளைப் பற்றி அறியாதவர் இருப்பது அரிது. இவை எல்லாருக்கும் ஒரே மாதிரியான பாடாந்தரமாக இருக்க வேண்டும் என்ற அவா பலருக்கும் இருந்து வருகின்றது. உமையாள்புரம் ஸ்ரீ சுவாமிநாத அய்யரிடம் இவற்றைப் பாடம் செய்துள்ள ஸ்ரீ செம்மங்குடி ஸ்ரீநிவாச அய்யர் அவர்கள் உமையாள்புரம் பாடம் என்று பிரசித்தி அடைந்துள்ள பாடாந்தரத்தையொட்டி இந்நூலை வெளியிட்டுள்ளார். இவ்வெளியீடு அனைவராலும் வரவேற்கத்தக்கது.

பஞ்சரத்னக் கீர்த்தனங்களை ஸ்வர தானக் குறிப்புடன் முன்னர் வெளியிட்ட ஸ்ரீமான் தச்சூர் சிங்காராசாரியார், ஸ்ரீமான் சுப்பராம தீக்ஷிதர், ஸ்ரீமான் கே. வி. ஸ்ரீனிவாச ஐயங்கார் முதலியோர் நாட்டை, கௌளை, ஆரபி, ஸ்ரீராகக் கிருதிகளை மட்டுமே கொடுத்துள்ளார்கள். வராளி பஞ்சரத்தினம் கிடைக்கவில்லை என்று எழுதியுள்ளார்கள். பின்னர் திருவொற்றியூர் ஸ்ரீ எஸ். ஏ. ராமஸ்வாமி ஐயர் ஐந்தையும் ஸ்வர தானக் குறிப்போடு வெளியிட்டார். ஆயினும் வராளி ராகத்தைக் குருமுகமாகப் பாடம் செய்யக் கூடாது என்பது மரபாதலால் வராளிக் கீர்த்தனை மட்டும் மிருதியாகப் பிரசாரத்துக்கு வராமலே இருந்து வந்தது. பின்னர் வெளியான பாடங்களிலும் குறில், நெடில் பொருத்தம் இல்லாமல் இருந்தது. இந்தத் தருணத்தில் வராளிக் கீர்த்தனத்தின் சுத்தமான பாடத்தை ஸ்ரீ செம்மங்குடி அவர்கள் வெளியிட்டிருப்பது மிகவும் போற்றத்தக்கது. நாட்டையில் அமைந்துள்ள "ஜகதா நந்த" வில் தைவதம் இல்லாமலே கொடுக்கப் பட்டிருப்பது கவனிக்கத் தக்கது. காலஞ்சென்ற சங்கீத கலாநிதி ஸ்ரீ டி. எஸ். சபேச ஐயர் அவர்களுடைய பாடத்திலும் தைவதப் பிரயோகம் கிடையாது.

ஸ்வரங்களை மட்டும் மலையாள லிபியிலும் சாஹித்தியத்தை மலையாள, தமிழ் லிபிகளிலும் கொடுத்துள்ளார். ஸ்வரங்கள் ஏழு எழுத்துக்கள் ஆதலால் அவற்றை யாவரும் எளிதில் கற்றுக் கொள்ளலாம்.

## படித்துப் பாருங்கள்

கர்நாடக இசை உலகில் இருபத்தைந்து ஆண்டு அநுபவம் வாய்ந்த ஸ்ரீ செம்மங்குடி ஸ்ரீநிவாச அய்யர் அவர்கள் ஸ்வாமிகளின் மற்றக் கீர்த்தனைகளையும் இசை உலகுக்குக் கொடுத்து உதவ வேண்டுமென்று விரும்புகிறோம்.

**ஸ்ரீ தியாகராஜரின் பஞ்சரத்தினக் கீர்த்தனைகள்**; கிடைக்குமிடம்: பிரின்ஸிபால், ஸ்வாதித் திருநாள் சங்கீத கலாசாலை, திருவனந்தபுரம்; விலை: ரூ. 1.50.



# ஆங்கிலத்தில் திருக்குறள்

> வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
> வான்புகழ் கொண்ட தமிழ் நாடு

என்று மகாகவி பாரதி வள்ளுவர் குறளைப் பற்றிப் பாடி வைத்தார். ஆம்! வள்ளுவரது குறள் தமிழ் மொழியில் எழுதப்பட்டது தமிழ் மக்களுக்கு அழியாப் பெருமை தருவதாகும். அதிலும் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னமேயே இத்தகைய ஒரு நூல் தமிழ் மொழியில் எழுதப்பட வேண்டுமானால் அதற்கு எத்தனையோ ஆயிரம் வருஷங்களுக்கு முன்பே தமிழ் மக்களது வாழ்வு சிறந்திருக்க வேண்டும். ஆனால் வள்ளுவன் தமிழ் மக்கள் வாழுவதற்கு உரிய நெறிகளை மட்டும்தானா கூறினான்? உலக மக்கள் அனைவருமே வையத்தில் வாழ்வாங்கு வாழ்வதற்கு உரிய நெறிகளை அல்லவா அவன் வகுத்து உரைத்திருக்கிறான்? ஆதலால் அந்த நெறிமுறைகளை உலக மக்கள் அனைவருமே தெரிந்து கொள்ள வகை செய்ய வேண்டியது, அந்த நூலைத் தம் பெரும் தனிச் சொத்தாகப் பெற்ற தமிழருடைய கடமை. அந்த முயற்சியில் அன்று முதல் இன்று வரை பலர் ஈடுபட்டு வந்திருக்கிறார்கள். ஆங்கில நாட்டில் பிறந்தவனானாலும், தன்னைத் 'தமிழ் மாணவன்' என்று சொல்லிக் கொள்வதிலே பெருமை கொண்ட டாக்டர் போப்பையர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார். அவருடைய அடிச் சுவட்டில் வ. வெ. சு. அய்யர், ராஜாஜி போன்ற தமிழர்களும் இன்னும் சிலரும் ஆங்கிலத்திலேயே மொழி பெயர்த்திருக்கிறார்கள். இன்னும் இத்திருக்குறள் ஜெர்மன், ருஷ்ய முதலிய பிற மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றது. சமீபத்தில் வடமொழியாகிய சமஸ்கிருதத்திலும், இந்தியிலும் வேறு மொழிபெயர்த்திருக்கின்றனர். இப்படி உலக மக்களுக்கு வள்ளுவர் கூறிய நெறியை உணர்த்தும் பணியிலேதான் அன்பர் திருவாசகமணி அவர்கள் முனைந்தார். Tirukkural என்ற இந்நூலை எழுதும் முன்னமேயே திருவாசகத்தையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெற்றி கண்டவர் அவர்.

செய்யுள் வடிவிலே உள்ள ஒரு நூலை மற்றொரு மொழியிலும் செய்யுள் வடிவிலேயே மொழிபெயர்ப்பதற்கு மிக்க திறமை வேண்டும். மூல நூல் கருத்துக்களைக் கூட்டாது, குறைக்காது, சிறிதும் சிதைக்காது மொழிபெயர்ப்பது என்பது எளிதில் கைவரும் சாதனை அன்று. இந்த முயற்சியில் ஆசிரியர் முற்ற வெற்றியே கண்டிருக்கிறார்.

இன்னும் இந்த நூலாசிரியர் மொழி பெயர்ப்போடு நிறுத்தாமல் பல வகைகளில் உள்ள கருத்துக்களையும் எடுத்து ஆராய்ந்து விரிவான விளக்கமும் எழுதி யிருக்கிறார். தருமபுரம் ஆதீனத்தார் வெளியிட்டுள்ள உரை வளத்தில் வள்ளுவர் நூலுக்கு எழுதிய தொன்னிய உரையெல்லாம் வரிசையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவற்றில் எவை எவை ஒப்புக்கொள்ளத் தகுந்தவை எவை எவை தள்ளத் தகுந்தவை என்பதைப் பற்றி விரிவான விமரிசனம் இந்த ஆங்கில நூலில் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. அத்துடன் ஆங்கில இலக்கியங்கள் பலவற்றிலிருந்து ஒப்புமைப் பகுதிகள் எல்லாம் எடுத்து எழுதப்பட்டுள்ளன. இவ்வளவு விரிவாக எழுதியிருப்பது ஒன்றே ஆசிரியரது இலக்கியத் திறமையையும், பன்னூற் புலமையையும் விளக்கப் போதியதாகும். பொருளதிகாரத்துக்கு விளக்கங்கள் இன்றைய உலகத்துக்குத் தேவையான முறையிலும் இன்றைய அரசியல் அமைப்புக்களுக்கு விளக்கம் தருகின்ற முறையிலும் அமைந்திருக்கின்றன. ஒரு பெரும் பணியை எடுத்து அதைப் பூரணப் பொலிவுடன் முடித்துத் தந்திருக்கிறார் திருவாசகமணி. இனி அவரைத் திருக்குறள் மணி எனவும் அழைக்கலாம் தானே?

—தொ. மு. பா.

வெளியிடுவோர்: மணலி லக்ஷ்மண முதலியார், தர்ம பரிபாலன நிதிக் குழு, சென்னை—1. கிடைக்குமிடம்: ஹரிவெட்ட் பிரிண்டர்ஸ், திருச்சி-2. விலை ரூ. 15.00

சமீபத்தில் நடைபெற்ற ஆங்கிலத்தில் திருக்குறள் வெளியீட்டு விழாவில் மந்திரி ஸ்ரீ பக்தவத்சலம் திருவாசகமணிக்குப் பொன்னாடை போர்த்துகிறார்.




கிராமத்துப் பெரிய மனிதர், பணக்காரர் கைலாசம் பிள்ளையின் பெண் புனிதம் நவ நாகரிக நங்கை. சபாபதி அவள் அண்ணன்; வெறும் முரடன்: முருகப்பனின் முறைப் பெண்ணான இல்லையைக் காதலிக்கிறான். சிலம்பப் போட்டியில் வெற்றி பெறுகிறவனுக்குத்தான் இல்லை, தோற்பவனுக்கு அவள் இல்லை' என்கிறான் அவள் தகப்பன். புனிதத்தின் சூழ்ச்சியால் முருகப்பனைச் சிலம்ப வித்தையில் தோல்வியடையச் செய்து இல்லையின் கரம் பற்றுகிறான் சபாபதி. இதனால் மனம் புண்பட்ட முருகப்பன் புனிதத்தையே மணப்பதாக அவளிடம் சபதம் செய்து ஊரை விட்டு வெளியேறி, நாகரிக மனிதனாக மாறிப் புனிதத்தை ஏமாற்றி மணந்து கொள்கிறான்.

குடுமி வைத்துக் கொண்டு பட்டிக்காட்டு மனிதனாக வரும்போதும், பிறகு பட்டணம் சென்று நாகரிக மனிதனாக மாறிப் புனிதத்துடன் கைகோத்து ஆடும்போதும், அக்காள் களங்கப்படுத்தப்பட்டு, வீட்டை விட்டு வெளியேறி விட்டது தெரிந்து கண்ணீர் விட்டுக் கதறியபோதும் எம். ஜி. ராமச்சந்திரன் அருமையாக நடித்திருக்கிறார்.

சரோஜா தேவி பெரிய இடத்துப் பெண். இடைவேளைக்கு முன்பு கவுனும், பைஜாமாவும் அணிந்து, துள்ளிக் குதித்து; ரசிகர்களின் உள்ளங்களை அள்ளிக்கொள்ளுகிறார். பிறகு கணவனால் வெறுக்கப்பட்டுக் கண்ணீரில் கரைகிறார். அவருடைய மாறுபட்ட தோற்றங்கள் மிக நன்றாக இருக்கின்றன. தோழிகளோடு விருந்தில் ''ரகசியம்... பரம ரகசியம்... இது நமக்குள் இருப்பது அவசியம்'' என்று அதியற்புத முக பாவங்களோடு ஆடிப் பாடியது கண்ணிலும் கருத்திலும் நிறைந்து விட்டது. பி. சுசீலா அந்தப் பாட்டுக்குக் குரல் கொடுத்திருப்பது நன்றாயிருக்கிறது.

எம். ஆர். ராதா கைலாசம் பிள்ளை. வழக்கமாக நல்லவனை இம்சித்துக் கடைசியில் இறந்து போகிறார்.

முருகப்பனின் தமக்கை கங்கையம்மாள் கைலாசம் பிள்ளையினால் களங்கப்படுத்தப்பட்ட பின்பு மறைந்திருந்து அவனைத் தீர்த்து விட்டுப் படத்தில் சிறிது நேரத்துக்கு ஒரு 'சஸ்பென்ஸை' உண்டாக்கிக் கடைசியில் ஆற்று வெள்ளத்தில் குதித்துவிடுகிறாள். கைலாசம் பிள்ளையைத் தான் கொன்ற விவரத்தை ஒரு கடிதத்தில் எழுதி வைத்து விட்டுத் தற்கொலை செய்து கொள்ளும் புத்திசாலித்தனத்தைப் பாராட்ட வேண்டியது தான்! அதை விடப் புத்திசாலித்தனம் இன்ஸ்பெக்டர் அந்தக் கடிதத்தைக் கண்டெடுத்தது. டி. ஆர். ராஜகுமாரி அந்தப் பாத்திரத்தை ஏற்று அழகாக நடித்திருக்கிறார்.

வெளிப்புறக் காட்சிகள் யாவும் பார்த்துக் கொண்டே இருக்கவேண்டும் என்று தோன்றுகின்றன. ஒவ்வொரு காட்சியிலும் ஒளிப்பதிவின் சிறப்பு திகைக்க வைக்கிறது!

சக்தி கிருஷ்ணசாமி கதை வசனம் எழுதியிருக்கிறார். நிகழ்ச்சிகளின் காரண காரியங்களைப் பற்றி அதிகமாகக் கவலைப்படாமல், எது வந்தால் என்ன என்று பார்ப்பதானால் கதையை யாரும் ரசிக்க முடியும்.

''அன்று வந்ததும் இதே நிலா,'' ''பட்டணம் பார்த்த மாப்பிள்ளை'' என்ற பாடல்களை எம். ஜி. ஆரின் அபிநய ஆட்டப் பாட்டங்களுடன் கேட்பது மிகவும் வேடிக்கையாக இருக்கிறது. அப்பொழுது தியேட்டரில் கரகோஷம் அமோகப்படுகிறது. ''அவனுக்கென்ன தூங்கிவிட்டான்'' என்ற பாட்டுக்கு எம். ஜி. ஆரின் முக பாவங்கள் நன்கு விளக்கம் தருகின்றன.

நாகேஷ் தாம் உதைபடும் இடங்களில் கூட எல்லோரையும் சிரிக்க வைக்கிறார்! கடலில் பெரிய மீன் பிடிக்கும் வேளையில் அதனுடன் போராடும் காட்சி தத்ரூபமாக இருக்கிறது! வெறும் கேலிக் கூத்து அடிக்கும் பாத்திரமாகப் போடாமல், கதையிலும் அவருக்கு முக்கிய பங்கு அளித்திருப்பது பாராட்டத் தக்கது.

பெரிய இடத்துப் பேர்கள்' படத்தைப் பற்றி என்ன சொன்னாலும், ''பெரிய இடத்துப் பெண்'' தனக்கென்று தனி ரசிகர்களைத் தேடிக்கொண்டுவிட்டாள்! ஒவ்வொரு காட்சியையும் கைதட்டி வரவேற்க அவர்கள் இருக்கிறார்கள்!

— காந்தன்

# எழுத்தும் தொழிலும்

“உங்கள் வீட்டுக் காரிலே நீ ஏன் பள்ளிக்கூடம் வருவதில்லை? உங்கள் அப்பா கண்டிப்பானவரா? அல்லது கருமியா...?”

என் குழந்தைகளுடன் படிக்கும் சக மாணவ மாணவிகள் என் மீது சுமத்தும் குற்றங்கள் இது போன்றவை. என்னிடமே சிலர் கேட்பார்கள்: ''உங்கள் பங்களா எந்த வீதியில் இருக்கிறது...?''

''உங்கள் டெலிபோன் நம்பர் என்ன?''

இவர்களுக்கு என்ன பதில் சொல்வது? எங்காவது ஒரு கூட்டத்திலே என்னை அறிமுகம் செய்து வைத்தால் 'ரேடியோ நாடக' என்ற தொடரை மறந்து விடுவது இயல்பு. 'தயாரிப்பாளர்' என்பதை மட்டும் நினைவில் வைத்திருந்து கூறுவார்கள். இதனால் ஏற்படும் பல சிக்கல்களுள் பால்காரர், தையற்காரர், சலவைக்காரர், குடியிருக்க வீடு கொடுத்தவர்-யாவரும் அதிகமான பணத்தை என்னிடம் எதிர்பார்ப்பது முக்கியமானது; தலைவேதனை அளிப்பது.

சினிமா உலகத்துள்ளே வருகிற 'தயாரிப்பாளர்' என்ற சொல்லுக்குள்ள பணம், பங்களா, பாக்யாதிகள் யாவற்றையும்,





என் மீது வர்ஷிக்கிறார்கள்: சமயா சமயத்தில் 'முக வெட்டு உள்ளவர்கள் திரை உலகில் புதுமுகமெனத் தங்களை 'அறிமுகம்' செய்து வைக்க வேண்டும் என்று கேட்கவும் வந்து விடுகிறார்கள். இது போன்ற கூத்துக்கள் ''தயாரிப்பாளர்'' என்ற சொல்லால் விளையும் பலன்கள்; சுகங்கள். ஆனால் நானோ ரேடியோ நிலைய நாடகத் தயாரிப்பாளன்!

நாலாண்டுகளுக்கு முன்னால் சென்னை வானொலி நிலையம் என்னைத் தயாரிப்பாளராக ஏற்றுக் கொண்டது.

என் வேலை என்ன? பொறுப்பு என்ன?

வானொலி நாடகங்களை எழுதுகிற ஆசிரியர்களின் உள்ளக் கிடக்கையை, எழுத்திலே இருக்கிற பாவத்தை, சொல்லிலே இருக்கும் சுவை ஆழத்தை வானொலி கேட்பவர்கள் ஒப்புக் கொள்ளும் வண்ணம், உவந்து பாராட்டும்படியாக ஒலிபரப்ப வேண்டும். இதுவே எனது வேலை.

மேலெழுந்தவாரியாகப் பார்த்தால், 'நாடகத்தை எழுத்தாளர்கள் அருமையாக எழுதி விடுகிறார்கள்; நடிகர்கள் திறம்பட நடித்து விடுகிறார்கள்; அறிவிப்பை, அறிவிப்பாளர் 'கணீர்' என்று அறிவித்து விடுகிறார்; 'எல்லாம் சரி, நாடகத்துள் உமக்கென்ன வேலை; நீர் சாதிப்பது என்னவாம்?' என்று பலருக்குத் தோன்றுவது இயல்பு. இவ்வாறு தோன்ற வைப்பதுதான் சிறந்த தயாரிப்பாளர் வேலையும் ஆகும்!

ஒலிபரப்புக்கு ஏற்கப்பட்ட நாடகத்தின் கதைச்சுவை குன்றாதபடி, கலைச் சுவைகளாம் (நடிப்பு, இசை, 'எபெக்ட்ஸ்' என்னும் ஒலி இணைப்புக்கள், அறிவிப்பு, காலக் கணக்கு) யாவற்றையும் நிறுத்துப் பார்த்து இணைத்து வழங்க வேண்டும். அணு அணுவாய்ப் பொறுப்பைச் சரிவரச் செய்து விட்டால் நீரில் கரைந்த உப்பைப் போன்று, கதைக்குள்ளே, இனம் காண முடியாதபடி ஒன்றிக் கலந்து போவார் தயாரிப்பாளர். வானொலி நேயர்கள் நெஞ்சிலும் நினைவிலும் நடிகர்கள் முதலிடமாய், எழுத்தாளர் இரண்டாம் இடமாய் நிலைத்து நிற்பார்கள். தானனைத்தையும் செய்ததாகச் சொல்லிக் கொள்ள முடியாதபடி எல்லாவற்றுள்ளும் இணைப்புப் பாலமாக அமைவது தயாரிப்பாளர் வேலை.

சிறுகதை, நாவல் எழுதுவதைப் போன்று எழுத்தாளரின் தனித் தன்மையாலோ, தனித் திறமையாலோ, நாடக

இலக்கியம் வளம் பெறுதல் இயலாது: நாடகம், கூட்டு முயற்சியால் விளைந்த கலைச் சரக்கு. அதில் ஈடுபடும் அனைவரும் கலைஞர்கள்; எனவே கலையின் விளக்கத்திலே கருத்து வேற்றுமை கொண்டவர்கள். கலைத் தன்மையை வெளியிடும் போது அவரவர் விரும்பும் வண்ணமும், அவரவருக்கு இயல்பாகத் தோன்றும் கற்பனைப் படியும் வெளியிடுவார்கள். தங்கள் தங்கள் கற்பனை வெளியீடே சிறப்பு என்றும் விவாதிப்பார்கள். உதாரணமாக நாடகாசிரியர் 'வெரு பேஷ்' என்று எழுதி வைக்கிறார். எழுதும் முறையில் எந்த நாடக ஆசிரியராலும் வேறு வகையாக 'வெரு பேஷ்' என்பதை எழுத முடியாது. ஆனால் நடிகர்கள் ஒவ்வொருவரும் வெவ்வேறு கட்டங்களில் இதனை உச்சரிக்கும் விதம் வெவ்வேறாக இருக்கும் அல்லவா?

சொல்லும் விதத்தில் 'வெரு பேஷ்' என்பதை ஒன்பது ரசமும் தோன்ற ஒன்பதாயிரம் விதமாக உச்சரிக்கலாம். ஆகவே, 'வெரு பேஷ்' என்று எழுதிய நாடகாசிரியன் எந்த விதமாக உச்சரிக்க விரும்புகிறார் என்பதைப்

தில் சில பகுதிகளைக் குறைப்பதும் கூட்டுவதும் தயாரிப்பாளருடைய பொறுப்பு.

திரைப்படக் காமிரா கண்டு பிடிக்கப்பட்டபின் மேடை நாடகங்கள் பல திரைப் படங்களாக மாறின. மேடை நாடகங்களில் நாம் காணக் கூடிய சில குளறுபடிகள், யதேச்சையாக நேர்ந்து விடும் சில தப்பு தவறுகள், அதன் விளைவாக ஏற்படும் திடீர் ஹாஸ்யங்கள், அன்றைய தினசரியில் நாம் பார்க்கக் கூடிய சூடான செய்திகளுக்கு ஏற்ப வேண்டுமென்றே மாற்றி அமைக்கப்பட்ட வசனங்கள் — இவற்றைத் திரைப்படத்திலே நாம் எதிர்பார்க்க முடியாது.

இதே போல் டேப் ரிக்கார்டர் வந்த காரணத்தால் எதிர்பாராத விநோதங்களை ரேடியோ நாடகங்களில் வடிகட்டிவிட முடிகிறது: காமிரா போன்று உணர்ச்சிகளைப் பெரிது, சிறிதுபடுத்தவும் துணை செய்கிறது டேப் ரிக்கார்டர். இவ்வாறின்றி நாடக நிகழ்ச்சியை ஒலிப்பதிவு செய்யாது நேர் முகமாக ஒலிபரப்பும்போது சில சமயம் பாத்திரங்கள் மாறுபட்டுப் போவார்கள்.

# ஓசை தரும் இன்பம்!

## சுகி சுப்பிரமணியம்

சமீப காலத்தில் வானொலி நிகழ்ச்சிகளில் இடம் பெற்ற "அபாஸ் வீடு", "காப்புக் கட்டிச் சத்திரம்" ஆகிய இரு தொடர் நாடகங்களையும் ஆயிரக்கணக்கில் தமிழர்கள் கேட்டு மகிழ்ந்தார்கள். அவற்றின் வெற்றிக்கு முக்கிய காரியகர்த்தாவான சுகி சுப்பிரமணியம் அவர்கள் பத்திரிகை உலகுக்கும் பல காலமாகத் தொண்டாற்றி வருபவர். வானொலி நிலையத்தில் நாடகத் தயாரிப்பாளராகப் பணிபுரிகையில் தமக்கு நேர்ந்த ரசமான அநுபவங்களை நகைச்சுவை ததும்பக் கல்கி நேயர்களுக்கு வழங்குகிறார்.

புரிந்து கதைகளுக்குச் சித்திரம் போடுவது போன்று நடிகர் சொற்சித்திரமாய்ப் பேசுகிறாரா என்று கண்காணிப்பது தயாரிப்பாளர் பொறுப்பு. தவறின் பாவத்தை விளக்கி 'இவ்வண்ணம் பேசுக' எனக் குறிப்போ, கோடியோ காட்ட வேண்டும்.

எனவேநாடகாசிரியன் உள்ளத்தைச் சொற்களின்துணைகொண்டு நடிகர்களுக்கு உணர்த்துவது தயாரிப்பாளர்களின் முக்கிய பொறுப்பு; அதுவும் வேண்டும்போது வேண்டிய அளவு மட்டும் உதவ வேண்டும். தயாரிப்பாளர் உதவி கூடினாலும் குறைந்தாலும் நடிகர்களுக்குப் பயன் இல்லை. கதை, கட்டுரைகளிலே வரும் வேண்டாத பகுதியைப் பத்திராதிபர் "எடிட்" செய்வது போன்று நாடக ஓட்டத்துக்காக (Tempo) நாடகத்

டேப் ரிக்கார்டர் ஒலிப்பதிவு செய்யாத காலத்தில் ரேடியோ நாடகங்களில் நடந்த சில வேடிக்கைச் சொற்களையும் விந்தைச் சம்பவங்களையும் நினைவுபடுத்துகிறேன். வீராவேசமாய்ப் பேசுகிறார் நடிகர். "பணமாம் பணம். யாரைப் பார்த்துப் பணம் என்று கேட்கிறாய். ஒவ்வொரு தம்பிடியும் ரத்தத்தால் சேர்த்த காசு. நெஞ்சில் இரக்கமில்லாத அரக்கனே! உன் கடன் முழுவதையும் மூன்றே தவலைகளில் தந்து...." நடிகர் மேலே பேச முடியாமல் திகைத்து நின்றார்.

கடனை மூன்று தங்கத் தவலைகளாகச் செய்து தரப் போகிறாரா அவர்?

தவணை என்பதைத் தவலை என்றது போல், சொற்களில் ஏற்படும் மாற்றங்கள் சிலவற்றைப் பட்டியல் செய்து தருகிறேன்.

| | சொன்னது : | | சொல்ல வேண்டியது : |
|---|---|---|---|
| அ. | என் படையலில் ஒரே குழலப்பமாய் இருக்கிறதே | அ. | என் படையில் ஒரே குழப்பமாய் இருக்கிறதே |
| ஆ. | உன் அம்பால் நான் பிழைத்தேன் | ஆ. | உன் அன்பால் நான் பிழைத்தேன் |
| இ. | தபாக்கா, தலாக்கா, தர்க்கா தகவக்கா | இ. | தபால் இலாகா தரும் தகவல்கள் |
| ஈ. | ஏகதாசி விரத மகிமை | ஈ. | ஏகாதசி விரத மகிமை |
| உ. | யுவஜாரா | உ. | யுவராஜா |
| ஊ. | உன் செத்தப்பாபடி நடிக்காதே | ஊ. | உன் சித்தப்படி நடக்காதே |

மேடையில் நடிப்பவர்கள், ரேடியோவில் நடிக்க வரும்போது கையை ஆட்டி, காலை ஆட்டி ஆர்ப்பாட்டம் செய்வார்கள். அடி, உதை என்று கலாட்டா வரும்போது எதிரே நிற்பவரைப் பிடித்து விடுவார். அல்லது தம் சட்டையை முண்டாவுக்கு மடக்குவார். ஒரு சமயம் 'காலில் விழுந்து கெஞ்சுகிறேன்' என்ற வரியைப் படித்த நடிகர் திடீரென்று நெடுஞ்சாண்கிடையாக ஸ்டூடியோவுக்குள் விழுந்து நடித்தார். காலில் விழுந்தவர் எழுந்து அடுத்த வரியைப் படிப்பதற்குள் நாடகத்தின் வேகம் என்னவது?

நடிகர் ஒருவர், குரல் பரீட்சைக்கு (ஆடிஷனுக்கு) வந்து தேர்வு கிடைக்கவில்லை போலும். அவர் ஆறு மாதங்களுக்குப் பின் என்னைத் தெருவில் சந்தித்து, தம்மிடம் என்ன குறை என்று அறிய விரும்பினார்.

''பல வருஷமா நடிக்கிறவன் நான். என் குரலில் என்ன தவறு? பாலும் தேனும் போன் இல்லையா?'' என்று கேட்டார்.

நாடகத்தை எழுதுகிறவர்கள் பற்றிய இரண்டொரு நிகழ்ச்சிகள் என் நினைவில் வருகின்றன. தமிழகத்தில் திரை—மேடை—நாடகங்கள் எழுதித் தேர்ச்சியடைந்த எழுத்தாளர் அனுப்பிய ரேடியோ நாடகம் ஒன்று ஏற்றுக் கொள்ளப்படவில்லை.

''என் நாடகத்தில் என்னய்யா குற்றம்?''

''நீங்கள் ரேடியோவுக்கு எழுதவில்லையே?''

''மேடைக்கு எழுதினேன். சற்று மாற்றிக் கொள்ள முடியாதா?''

''உங்கள் கதாநாயகன் ஊமை. ஊமையை வைத்துக் கொண்டு ரேடியோ நாடகம் நடத்துவது எப்படி?'' என்றபோதுதான் தவறு தமதென்று ஒத்துக் கொண்டார். மேடையில் ஊமை நடிக்கலாம். ரேடியோவில்?

ஒரு நாள் நிலைய நிர்வாகஸ்தர் திடீரென்று என்னை அழைத்து, ''ஒருவர் முப்பத்தொன்பது நாடகங்கள் அனுப்பியிருக்கிறாராம். அவர் ஆங்கிலத் தினப் பத்திரிகையில் தொடர் புள்ளவர். அவர் எழுதிய அத்தனை தமிழ் நாடகங்களும் மட்டமாகவா இருக்கும்? அவர் குறைப்பட்டுக் கொண்டார். உம்மைக் காண நாளைக் காலை வரும்படியாகத் தபால் எழுதியிருக்கிறோம். வருவார்'' என்றார்.

மறு நாள் வந்தவர், ''முப்பத்தொன்பது நாடகங்களுமா மட்டமாக இருக்கும்? அவற்றை எப்படி எழுதினேன் தெரியுமா? கடந்த இருபது ஆண்டுகளாக நடைபெற்ற ரேடியோ நாடகங்களைக் கேட்ட அனுபவத்தால்தான் எழுதியிருக்கிறேன். என்ன பதில் சொல்கிறீர்?'' என்று மடக்கினார்.

சட்டென்று, ''ஐயா! உங்களிடம் ஒரு உதவி நான் கேட்கிறேன். என் தகப்பனார் கடந்த ஐம்பது வருடங்களாகத் தங்கள் ஆங்கில தினசரியைப் படித்து வருகிறார். அவர் எழுதிய ஆங்கிலக் கட்டுரையை உங்கள் பத்திரிகையில் வெளியிட இயலுமா?''

''அதெப்படி முடியும்? அதற்கென்று தகு யான தரம் தேவை. ஐம்பது வருடங்கள் எங்கள் தினசரியைப் படித்த காரணத்துக்கா. ஒருவர் கட்டுரையை வெளியிட முடியுமா?''

''உங்கள் நாடகங்கள் திருப்பி அனுப்பப் பட்டதற்கும் இதுவேதான் காரணம்'' என்றபோது அவர் திருப்தியுடன் போனார்.

இன்னொருவரின் நாடகப் பிரதியைப் படித்துவிட்டு நான் கூறினேன்: ''ஐயா உங்கள் நாடகம் பதினைந்து நிமிட நாடகம் இடையிடையே 'தாமதம், தாமதம்' என்று எழுதியிருக்கிறீர்கள். இந்தத் தாமதம் ஒவ்வொரு இடத்திலும் இரண்டு, மூன்று நான்கு, பத்து விநாடி என்றெல்லாம் குறி[illegible] இருக்கிறீர்கள்...''

''இவ்வாறு எழுதாவிட்டால் நடிகர்க[illegible] எக்ஸ்பிரஸ் வேகத்தில் படித்துக்கொண்டே போவார்களே'' என்றார் அவர்.

தாமத விநாடிகளை நான் ஒன்றாகச் சேர்[illegible]த்துக் கூட்டிப் பார்த்தேன். மொத்தம் அரை மணி வந்தது. ''பதினைந்து நிமிட நாடகத்துக்கு அரை மணி நேரம் தாமதத்தை எப்படித் தருவது?'' என்றேன். அவர் சற்று[illegible] தாமதியாமல் நடையைக் கட்டினார்.

பாரதியாரின் ஞான ரதத்தை 'ஞான[illegible] திருமகன்' என்ற தலைப்பில் நிகழ்ச்சியா[illegible] அமைத்து ஒலிபரப்பி விருந்தோம். நாட[illegible]கத்துக்கு 'முகப்பு கீதம்' சிகரம் போ[illegible] இருந்ததென எண்ணிப் பெருமையுடன் இருந்தோம். மறு தினம் ஞான ரதத்தை[illegible] நாடகமாக்கிய ஆசிரியர், ''நாடகத் தய[illegible]ரிப்பு, இசை அமைப்பு வெகு பிரமாதம் ஆனால் ஒரு குறை. உங்களுக்கு வாத்திய[illegible] கோஷ்டியில் வாசிக்க 'வண்ணான் வ[illegible] தானே' மெட்டுத்தானா கிடைத்தது? அது[illegible]வும் பாரதியின் ஞானரதத்துக்கு?'' என்று கூறி வருந்தினார்.

நான் அயர்ந்து போனேன். வெகு சிரமப்பட்டு நாங்கள் தேர்ந்தெடுத்த முகப்பு கீதம் எது தெரியுமா? 'ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்!' ஒலிப்பதிவை மீண்டும் போட்டுக் கேட்ட போதுதான் இரண்டும் ஒரே மெட்டமைப்பு கொண்டவை என்பதை உணர்ந்தேன்.

சாதாரண மெட்டாக இருந்தாலும் கவி[illegible]யரசருடைய வார்த்தைகளின் வன்மையால் அது எப்படி உயிர்த் துடிப்புடன் இலங்கிறது ஜீவனுள்ள அந்தச் சொற்களின்றி அதே இசை எப்படிப் பெருமை குன்றி ஒலிக்கிறது என்பதைப் புரிந்துகொண்டேன்.

ஆசை தரும் இன்பங்கள் ஆயிரம் ஆயிரம் இருக்கலாம். ஓசை தரும் இன்பம் உவமையிலா இன்பம்!

மே 17 முதல்

பாரகன்
மகாராணி
புவனேஸ்வரி
ஜெயராஜ்

மற்றும்





அன்பு
பிலிம்ஸ்

# ஆசை அலைகள்

வசனம்-டைரக்ஷன்-A.S.A.சாமி

தயாரிப்பு
J.D.பர்னாண்டோ &
M.ஆரோக்கியசாமி



NEGATIVE RIGHTS CONTROLLED BY SRI. K.S.VENKATASUBBA REDDIAR

# மில்க் ஆப் மக்னீஷியா என்பது என்ன?

இது மெக்னீஷியம் ஹைட்ராக்ஸைடின் எமல்ஷன். அமில நாசினியும் மலமிளக்கியுமான இது இரைப்பை சம்பந்தமான (அஜீரணக்) கோளாறுகளின் சிகிச்சையில் ஏராளமாக உபயோகப்படுத்தப்படுகிறது.

மில்க் ஆப் மக்னீஷியாவிற்கு, மெக்னீஷியம் ஹைட்ராக்ஸைட் மிக்ஸ்சர் B.P., மெக்னீஷியா மாக்மா யு.எஸ்.பி., க்ரீம் ஆப் மக்னீஷியா B.P. போன்ற பெயர்களும் உண்டு. எப்பெயரால் அழைக்கப்பட்டாலும் இதன் அடிப்படையான பொருள் ஒன்றே. மேலும் ஒரு அங்கீகாரமான ஔஷதகரண விதியின் கண்டிதமான நியதிக்கும், பிரமாணத்திற்கும் தக்கபடி இது உற்பத்தி செய்யப்படுகிறது. இது எந்த வர்த்தகப் பெயரில் விற்பனை செய்யப்பட்டாலும் சரி அப்பெயர் தயாரிப்பாளரை சுட்டிக் காட்ட அனுகூலமாகுமே தவிர இதன் தரத்தை உயர்த்தவோ, தாழ்த்தவோ செய்யாது.

இருந்த போதிலும், விற்பனைப் பெயர், வாடிக்கையாளரை பொறுத்த மட்டில் மிகவும் முக்கியம். ஏனென்றால் நன்கு தெரிந்த ஒரு பெயர் அவருக்கு தயாரிப்பாளரின் நம்பகத்தன்மையைப் பற்றி உறுதியளிக்கிறது. இக்காரணத்தினால் தான் கணக்கற்ற வாடிக்கையாளர்கள் அன்றாடம் 'மந்த்' (MandH) மில்க் ஆப் மக்னீஷியாவை வாங்குகிறார்கள். இது யுனைடெட் ஸ்டேட்ஸ் ஔஷதகரண விதிகளின்படி தயாரிக்கப்பட்டு குணத்திற்கும் தரத்திற்கும் நன்கு பரிசீலனை செய்யப்படுகிறது. ஆகையால் இதன் தரமும், தூய்மையும் கேள்விக்கு இடமற்றதாக விளங்குகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக, மற்ற எல்லா 'மந்த்' (MandH) தயாரிப்புகளைப் போலவே, மருந்துகள் தயாரிப்பதில் 50 வருடங்களுக்கு மேலாக உள்ள அனுபவத்தின் சிறப்பையும் பெற்றுள்ளது.

மார்டின் & ஹாரிஸ் (பிரை) லிட்.
ரிஜிஸ்டர்டு ஆபீஸ்: மெர்கண்டைல் பில்டிங்ஸ், லால் பஜார், கல்கத்தா-1
பம்பாய் . புது தில்லி . சென்னை




## 10 தலைசுற்றல் மயக்கம்
## (கண்ணைக் காக்க)

'கண்ணைக் காக்கத்தான் இமைகள் இருக்கின்றனவே! வேறு நாமென்ன செய்யக் கிடக்கிறது என்கிறீர்களா? எத்தனையோ இருக்கின்றன. அவை என்னென்னவென்று சொல்லுமுன் ஒரு விஷயத்தைப் பொதுவாகச் சொல்ல வேண்டும். நமது தினசரிப் பழக்க வழக்கங்களிலும் ஆகாராதிக் கிரமங்களிலும் கண்ணுக்கு ஹிதமானவை சிலவற்றை ஏற்றலும், அஹிதமானவற்றைத் தவிர்த்தலும் வேண்டும்.

இவ்வகைப் பழக்கங்களைக் கர்நாடகம் என்றும், பிற்போக்கு என்றும் நாமகரணங்கள் செய்து நமது பழக்கத்திலிருந்து விட்டு விட்டோம். இது ஒன்று: அவ்விதமே கண்களுக்கு அஹிதமானவைகளான சில பழக்க வழக்கங்களை நவீனம், நாகரிகம், முற்போக்கு என்ற பெயர்களைச் சூட்டி அனுஷ்டிக்கவும் செய்கிறோம். அதனுலெல்லாந்தான் கண்களுக்குக் கோளாறுகள் ஏற்படுவதும், அதைத் தொடர்ந்து மற்றுமுள்ள விளைவுகளும் சம்பவிக்கின்றன. இதற்கெல்லாம் சில உதாரணங்களைச் சொன்னால்தான் பூர்த்தியாக விஷயம் விளங்கும்.

கரிசலாங்கண்ணிச் சாறு பிழிந்து அதில் நனைத்து உலர்த்திய நூல் திரியை ஆமணக்கெண்ணெய் தீபத்திலிட்டுப் பொருத்தி, எரியும் அத்தீபத்திலின்றும் வரும் புகையை ஒரு புதிய மண் மடக்கில் ஏற்று, அதில் ஒட்டியிருக்கும் கரியைத் திரட்டி எடுத்து ஆமணக்கெண்ணெய் விட்டுக் குழைத்து வைத்துக் கொண்டு அதைக் கண்ணுக்கு அஞ்சனமாகத் தீட்டிக் கொள்வது.

இது நம் முந்நாளையப் பழக்கம். கைக்குழந்தைகளாயுள்ள பிராயம் முதல் 3–4 வயது வரை ஆண் குழந்தைகளுக்கும் பெண் குழந்தைகளுக்கும் எல்லாக் காலத்துக்கும் இதைக் கண்களுக்குத் தீட்டி வருவது வழக்கம். இதனால் கண்களுக்கு ஹிதம். அழகுக்கும் ஏற்றது. இவ்விதப் பழக்கம் இன்று கிடையாது. சுலபமாகக் கிடைக்கக் கூடிய 'அழகு சாதனம்' என்ற உண்மையைச் சொல்லியே விளம்பரப்படுத்தப்படும் அஞ்சனங்களையே இப்போது உபயோகிக்கிறோம். இதனால் அழகு கிடைக்கலாம். ஆனால் முன் சொன்ன மையை உபயோகிப்பதால் கண்களுக்கு ஏற்படும் நற்பயன் கிடைக்காது. இவ்வகைப் போக்கின் இன்னலுக்கு இலக்கானவள்தான் முன் கட்டுரையின் ஆரம்பத்தில் சொன்ன எட்டு வயதுச் சிறுமி.

கைக்குழந்தை பிராயம் முதல் தினசரி எண்ணெய்க் குளி தவறாது. பிறகு குழந்தை ஒன்று அல்லது ஒன்றரை வயதாகும்போது தினசரி எண்ணெய்க் குளியை ஒரு தினம் விட்டு ஒரு தினமாகச் செய்யும், அல்லது செய்விக்கும் பழக்கம். அதற்கும் பிறகு வாரம் இரு முறை தவறாமல் எண்ணெய்க் குளி செய்வதும் வழக்கம். இக்காலங்களில் எல்லாம் கண்ணுக்கு எண்ணெய் கட்ட அல்லது கட்டிக்கொள்ளத் தவற மாட்டோம். இப்போது இந்தப் பேச்சே கிடையாது. ஐயா, சனி நீராடு என்பதையொட்டி வாரம் ஒரு முறையாவது உண்டா? சொல்லப் போனால் ''மேல் நாட்டவர்கள் எண்ணெயா தேய்த்துக்கொள்கிறார்கள்? அவர்கள் என்ன கெட்டுப் போய்விட்டார்கள்?'' என்று குதர்க்கம் (இதற்குக் குருநாதன் தேவையில்லை) பேசுகிறார்கள் இன்றைய இளைஞர்கள். இந்த 'இளைஞர்களோ' இன்று 'எல்லோரும் நம் நாட்டு மன்னர்' என்று விழிப்புப் பெற்றவர்கள். தோட்டத்திலுள்ள தென்னம்பிள்ளைக்கு வெய்யில் காலமாச்சே என்று காலை மாலை தண்ணீர் ஊற்ற வேண்டுமென்றால் ''களத்து மேட்டில் உள்ள எருக்கஞ் செடிக்கும், முள்ளுக்கீரைச் செடிக்கும் யார் தண்ணீர் ஊற்றுகிறார்கள்?'' என்று கேட்பது பொருந்துமா?

இப்படிச் சொல்கிறேனே என்று இன்று முதல் நாளும் எண்ணெய்க் குளியையும் அப்போது கண்ணுக்கு எண்ணெய் கட்டிக் கொள்வதையும் தொடங்குகிறேன் என்று ஆரம்பிக்க வேணுமென்றில்லை. ஒருகால் அந்த எண்ணெய் முழுதும் எள்ளெண்ணெயாயில்லாமலிருந்தால் — குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொண்ட கதையாகும்.

''அதிகக் கடினமான பொருளை வாயிலிட்டுக் கடிக்காதேம்மா!'' என்று மகளைப் பார்த்துச் சொன்னால், ''ஏன் கடித்தால் என்னவாம்? ஊற வைத்துத்தான் மெல்ல வேணுமென்றால் வாயில் பற்கள் முளைத்தது எதற்கு? என்ன காரணம் — என்ன பயன்? காக்கையைப் போல் எல்லாவற்றையும் விழுங்கி விடலாமே'' என்று கேட்கிறாள் 'செல்ல மகள்.' ''ஐயோ! அப்படிக் கடித்தால் கண் தெறித்து விழுந்துவிடும் என்று சொல்வார்கள்'' என்று மெதுவாகச் சொல்கிறாள் பாட்டி. ''அப்படியா? அது யார் அப்படிச் சொன்னது? யாருக்குச் சொன்னது? எப்போது சொன்னார்கள்? ஊஹும். இதோ பார்'' என்று ஐந்தாறு முழுப் பாக்குகளை வாயிலிட்டுக் கடமுடவென்று கடிப்பார்கள். வாயிலிட்டுக் கடமுடவென்று கடித்து மென்று ''உம்! கண் தெறித்து விழுந்துவிடவில்லையே!'' என்று எக்காளத்துடன் பேசுகிறாள் 'செல்ல மகள்.' இதைக் கண்டு, ''ஈசுவரா! இந்தக் குதர்க்க புத்தி எங்கு போய் நிற்குமோ? விபரீத அளவுக்கு இது பெருகும் முன்பு எனக்கு அழைப்பை அருள வேணும் அப்பனே!'' என்று மனத்திலாவது எண்ணத் தோன்றுகிறது. இவ்விதம் பலதரம் எண்ணவும் நேரிடுகிறது. விழிப்பின் விளைவு, முற்போக்கின் வகை! எப்படி?




தசரதராம பாகவதர் ஜவுளிக் கடைக்குள் நுழைந்தார். கடைக்காரர் பாய்ந்து வந்து அவருக்குத் தேவையான வேஷ்டி ரகங்களைப் பரப்பினார். பாகவதர் வெகு நேரம் வேஷ்டிக் கரைகளைப் பரிசோதித்து விட்டுக் கடைசியில் ஒரு வேஷ்டியைப் பொறுக்கி எடுத்து விலை பேசி வாங்கினார்.

''வேறு நல்ல அங்கவஸ்திரங்கள் இருக்கு, பார்க்கிறீர்களா?'' என்று கேட்டார் கடைக்காரர். ''இதோ பாருங்க. இது ரொம்ப உயர்ந்த சரக்கு. இதை மேலே போட்டுக் கொண்டு மேடையில் கச்சேரி செய்ய உட்கார்ந்தீர்களானால் ரொம்ப ஜோராக இருக்கும்!''

''சரி! வாங்கிக் கொள்கிறேன். இந்த அங்கவஸ்திரத்தைப் போட்டுக்கொண்டு ஜம்மென்று மேடையில் உட்கார நீங்கள் ஏதாவது ஒரு சபாவில் ஒரு கச்சேரிக்கு ஏற்பாடு செய்துவிட வேண்டும்! என்ன சரிதானே?'' என்று கேட்டார் தசரதராம பாகவதர்.

—சாமா

''அப்பா! இந்த வெய்யிலில்தான் போக வேணுமா? சற்று வெய்யில் குறைந்த பிறகு வெளியே போகலாமே! வெளியில் தலையை நீட்ட முடியவில்லை. கண் தெறித்துப் போகும்போல் இருக்கிறது. தலை வெடித்து விடும்போலிருக்கிறது'' என்று தான் சொல்லிக் கொண்டிருக்கும்போதே தனது மகன் வெளியே புறப்பட்டு விடுகிறான். இதைப் பார்க்கும் தாயாருக்கு எப்படி இருக்கும்?

''செருப்பைப் போட்டுக் கொண்டு குடையையும் எடுத்துக் கொண்டு போய் வாப்பா!'' என்கிறாள் அன்னை.

''போம்மா! நீ ஒரு பூஞ்சை!'' என்று சொல்லிவிட்டு வீறு நடை போட்டு விரைகிறான் மகன். இந்த மகனின் தாயார்தான் ஒரு காலத்தில் முன் சொன்னபடி பாக்குகளைக் கடமுடவென்று கடித்துக் ''கண் தெறித்துப்போகவில்லையே!'' என்று குதர்க்கம் பண்ணின 'செல்லப் பெண்.'

இப்படியாகத் தார் போட்ட ரோட்டில் தலை வெடிக்கும் வெய்யிலில் க்ஷேத்ராடனம் செய்துவிட்டு வந்த மகன் மறுநாள் என்னவோ முள்ளின் மேல் நடப்பது போலவும், பனிக்கட்டிப் பிரதேசத்தில் சறுக்கல் விளையாட்டுக்காரன் நடப்பது போலவும் நடக்கிறான். அதற்கும் மறு நாள் உள்ளங் காலில் கொப்புளங்கள். என்ன செய்வான் பாவம்! ''நான் சொன்னதைக் கேட்டானா?'' என்கிறாள் தாயார். அவள் மட்டும் பாட்டி சொன்னதைக் கேட்டாளா? ஆகவே....

ஒரே நரம்பின் கிளைகள்தான் கண், காது, மூக்கு, நாக்கு, பல், தலை ஆகிய பிரதேசங்களில் பரவி அவற்றை இயக்குவிப்பது. இத்தகைய கிளைகளில் ஏதாவது ஒன்றினால் இயக்கப்படும் பிரதேசத்தில் ஓர் அபிகாதம் ஏற்படுமாயினும் அவ்வதிர்ச்சி அக்கிளை நரம்பின் வாயிலாக அடி நரம்புக்கும் சென்று அழற்சியை யுண்டாக்கும். ஆகவே பல்லினால் கடினமானதைக் கடித்தாலும் கண்ணுக்கும் அந்த அதிர்ச்சி ஏற்படுவது இயல்புதானே? அவ்விதமே மிகவும் அருகில் உள்ள வஸ்துக்களைப் பார்ப்பதும், மிகச் சிறிய பொருள்களைப் பார்ப்பதும், கண்ணுக்களிக்கும் கடுந்தண்டனையாகும். இதன் விளைவு அதி பயங்கரமாக இருக்குமென்பது சாஸ்திரம்.

வெறுங் காலால் வெய்யிலில் நடந்து வந்தவர்கள் வீட்டில் வந்தவுடனே காலிலுள்ள சூடு ஆறவேணும் என்பதற்காக வந்ததும் வராததுமாகக் காலில் நாலு செம்பு தண்ணீரை ஊற்றிக் கழுவிக்கொள்ளுவார்கள். இதனாலும் கண்ணுக்குக் கெடுதல் வரும். இவ்வாறு செய்வதால் 'நகுலாந்தம்' என்னும் கண் வியாதி ஏற்படும் என்று சாஸ்திரம் சொல்கிறது. இதில் பார்க்கும் பொருள்களெல்லாம் வான வில்லைப் போல் பல நிறங்களில் உள்ளவைகளாகத் தென்படும். இரவிலோ மாலைக் கண்காரர் போலக் கண்ணே தெரியாது.

இப்படிப் பலவகைப்பட்ட அபத்தியங்களைத் தவிர்த்தும், பத்தியங்களைத் தவறாமல் சேவித்தும் கண்களைக் காத்துக்கொள்ளும் முயற்சிகளை நமது பழக்க வழக்கங்களில் ஆசரித்து வந்தோம். அப்போதெல்லாம் நமக்குக் கண்களால் ஏற்படும் சாளேச்வரம் அல்லது கண்கட்டி, தலை சுற்றல் மயக்கம் எதுவும் ஏற்பட்டதில்லை. இப்போது....?

சரீரத்தில் ரத்தக் குறைவு இருக்குமானால் அதனாலும் தலைசுற்றல் மயக்கம் ஏற்படுவது உண்டு. இதை ஆறுவது காரணமாகச் சொன்னது நினைவிருக்கும். ரத்தக் குறைவு என்றதால், ரத்தத்தில் உள்ள சிவப்பு நிற ஜீவாணுக்கள் குறைந்துள்ளன என்று பொருள். இந்தச் சிவப்பு நிற ஜீவாணுக்கள் தான் நமது சுவாசத்தின் வாயிலாகக் கிடைக்கும் காற்றிலுள்ள பிராண வாயுவைச் சுமந்து சென்று சரீரத்தில் ஒவ்வொரு ஊசி முனைக்கும் தவறாமல் கொடுத்து உதவுகின்றன. இந்தச் செயலை ''ஜீவனம்'' என்று நமது சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறார்கள். ''ஜீவனம்'' என்றால் உயிர் தரித்திருத்தல்—உய்தல் என்று பொருள் அல்லவா? இந்தச் சிவப்பு நிற ஜீவாணுக்கள் வெளிக் காற்றிலிருந்து பிராணவாயுவை ஏற்றுச் சுமந்து சென்று சரீரம் முழுதும் வியாபித்து அங்கங்கும் பிராணவாயுவைத் தந்துதவும் செயலைச் சொல்லுங்கால் — பிராணவாயுவை ''அமிருதம்'' என்றும் ''பீயூஷம்'' என்றும் சொல்லியிருப்பதிலிருந்தும் இந்தப் பிராண வாயுவை ''ஜீவஸ்ய ஆதாரபூதம்'' என்று சொல்லியிருப்பதிலிருந்தும் நமது உயிர் நிலைக்கப் பிராண வாயு எவ்வளவு இன்றியமையாதது என்பது விளக்கப்பட்டதென்று தெரிகிறதல்லவா?

# Firestone

## பயர்ஸ்டோன்

### நியூ டிலக்ஸ் சாம்பியன் டயர்

**நீங்கள் இதுவரைக் கண்டிராத மிகவும் பாதுகாப்புள்ள டிரெட் உடையது**

இதோ இந்த பயர்ஸ்டோன் நியூ டிலக்ஸ் சாம்பியன் டயரின் பக்கவாட்டைப் பாருங்கள். இந்த டிரெட்டின் டிசைன், மோட்டாரோட்டிகளுக்கு மிகவும் கூடுதலான டயர் பாதுகாப்பை யளிப்பதற்கென சோதனைத் தளங்களிலும் ஓட்டப் பந்தயப் பாதைகளிலும் நன்கு சோதித்துப் பல ஆண்டுகளாக நடத்திய ஆராய்ச்சியின் விளைவு. ஆயிரக்கணக்கான பாதுகாப்பளிக்கும் கோணங்கள் ரஸ்தாவைக் கவ்விப் பிடிப்பதால், உங்களுக்கு வண்டி யோட்டுவது எளிதாகவும், புறப்படும் போதும் நிறுத்தும்போதும் நல்ல இழுப்புத் தன்மையுடனும் இருக்கின்றன. நீங்கள் பயர்ஸ்டோன் வாங்கும்போது எதைப் பெறுகிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியும்.





**பயர்ஸ்டோன் தரத்துக்கும் உழைப்புக்கும் உங்கள் சின்னம்**

# தர்ம யுத்தம்

எஸ். கிருஷ்ணமூர்த்தி

"நேற்றுப் பிறந்த பயலுக்கு இவ்வளவு திமிரா!" என்று பொருமினார் தருமலிங்கம்.

"காலம் கெட்டுப் போச்சு, தருமலிங்கம்" என்றார் அருணாசல அம்பலகாரர். "இந்தக் காலத்து இளவட்டங்களுக்குப் பெரியவர்களிடம் மரியாதை கிடையாது. வயதானவர்களுக்கு மதிப்புக் கொடுக்கத் தெரியாது. இவர்கள்தான் நாட்டை ஆளப் போகிறார்களாம். நாடு எப்படி உருப்படும்?"

"ஆமாம், ஆமாம்!" என்று ஆமோதித்தார்கள் கூடியிருந்த மற்றவர்கள்.

அந்த ஊரில் பெரிய பண்ணைக்கும் சிறிய பண்ணைக்கும் இடையே விரோதம் இன்று நேற்று உண்டானதல்ல. அது தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வருவது. இரண்டு குடும்பத்தினரும் பங்காளிகள். நேரடியாகச் சண்டை இல்லாத நாட்களில் அவர்கள் சகஜமாகப் பழகிக் கொண்டாலும் எப்போதுமவர்களிடையே பகைமை கனிந்து கொண்டிருக்கும், நீறுபூத்த நெருப்புப் போல. ஏதாவதொரு அற்ப விஷயத்தில் தகராறு ஏற்பட்டால் போதும், அந்த விரோதம் உடனே கொழுந்து விட்டு எரிய ஆரம்பித்து விடும். அவ்வளவுதான்; இரு கட்சிகளும் கடைசிக் கோர்ட்டு வரை போய் யாருக்கு வெற்றி என்று பார்த்து விட்டுத்தான் ஓயும். வக்கீல்களுக்கும், சாட்சிக்காரர்களுக்கும் நல்ல வேட்டை........



இப்போதும் சண்டை ஏற்படக் காரணம் ஓர் அற்ப விஷயந்தான். ஒரு தேங்காய் மூடி. பழத்திலிருந்து தான் இந்தத் தகராறு ஆரம்பித்து விட்டது.

பெரிய பண்ணை தருமலிங்கம் ஊருக்குப் பெரியவர். நல்ல பசையுள்ளவர். விவசாயத்திலும், சொத்துக்களை நிர்வகிப்பதிலும் கெட்டிக்காரர். குலப் பெருமையுடன் பணப் பெருமையும் சேர்ந்து கொண்டதால் அவருக்கு ஊரில் நல்ல செல்வாக்கு.

இப்போது சிறிய பண்ணையின் நிலைமை இதற்கு நேர் எதிர். அவர்களிடமிருந்த பணமெல்லாம் சென்ற தலைமுறையுடனேயே கரைந்து போய்விட்டது. காலியான பெருங்காயச் செப்பில் பெருங்காயத்தின் வாசனை மட்டும் மிஞ்சியிருப்பது போலச் சிறிய பண்ணையில் மிஞ்சியது பெயர் மட்டுந்தான். அந்தப் பெயருக்கு வாரிசு இருபத்தைந்து வயது நிரம்பிய ஆறுமுகம்.

ஆறுமுகம் பட்டணத்தில் படித்துப் பட்டம் பெற்றிருந்தான். அந்த ஊரிலேயே முதன் முதலாக ஆங்கிலப் படிப்பு கற்றவன் அவன்

தான். அந்த ஊர்க் கோயிலின் நிர்வாக அதிகாரியாக அவனை நியமித்திருந்தார்கள்.

அந்த ஊர்க் கோயிலின் சித்திரைத் திருவிழா அந்தப் பக்கத்திலேயே மிக முக்கியமான திருவிழா. அதையொட்டிப் பெரிய மாட்டுச் சந்தை, வாண வேடிக்கை, தெருக்கூத்து எல்லாம் நடக்கும். பல ஊர்களிலிருந்தும் ஜனங்கள் அங்கு வந்து கூடுவார்கள்.

அந்த ஆண்டுத் திருவிழா ஆறுமுகம் நிர்வாக அதிகாரியான பின் நடைபெறும் முதல் திருவிழா. ஆகையால் அதை மிக விமரிசையாகச் செய்ய வேண்டுமென்ற ஆசை ஆறுமுகத்துக்கு. இராப் பகல் பாராமல் உழைத்துத் திருவிழா ஏற்பாடுகளையெல்லாம் செய்தான் அவன்.

திருவிழா மிக நன்றாக நடந்தது. ஆறுமுகத்தின் நிர்வாகத் திறமையை வியந்து பாராட்டாதவர்கள் இல்லை. இதுமாதிரி அவ்வளவு விமரிசையாக இது வரை திருவிழா நடந்ததே இல்லை என்று எல்லாரும் பேசிக் கொண்டார்கள்.

திருவிழாவின் கடைசி நாள். சுவாமி ஊர்வலமெல்லாம் முடிந்து விட்டது. உற்சவ மண்டபத்தில் நல்ல கூட்டம். உற்சவருக்குத் தீபாராதனை நடந்தது.

அதன் பிறகு கோயிலின் சார்பாக ஊராருக்கு மரியாதை செய்வது வழக்கம். குருக்கள் ஒரு தட்டில் சுவாமிக்கு நிவேதனம் செய்த வெற்றிலை பாக்கு, தேங்காய், பழம் இவைகளை வைத்து எடுத்துக் கொண்டு முன்னே வந்தார்.

தருமலிங்கமும் ஆறுமுகமும் சேர்ந்தாற் போல் நின்று கொண்டிருந்தார்கள். குருக்கள் தட்டை அவர்களுக்கு முன்னால் நீட்டினார். ஆறுமுகம் கையை நீட்டி அதை வாங்கிக் கொண்டான்.

தருமலிங்கத்தின் முகத்தில் ஈயாடவில்லை. குருக்கள் திகைத்துப் போய் நின்றார். கூடியிருந்தவர்கள் இடையே சலசலப்பு ஏற்பட்டது. அடுத்த நிமிஷம் கோயிலை விட்டு வெளியேறினார் தருமலிங்கம்.

ஊருக்குப் பெரியவர் என்ற முறையில் முதல் மரியாதையைப் பெற வேண்டியவர் தருமலிங்கம்தான். ஆறுமுகம் தம்மை அவமானப்படுத்துவதற்காகத் தமக்கு முன்னால் கோயில் மரியாதையைப் பெற்றுக் கொண்டதாகத் தருமலிங்கம் எண்ணினார்.

சண்டைக்கு வேறென்ன வேண்டும்? ஊர் இரண்டுபட்டது. பெரும்பாலோர் தருமலிங்கத்தை ஆதரித்தார்கள். இளவட்டங்களெல்லாம் ஆறுமுகத்தின் கட்சி.

சண்டை கோர்ட்டுப் படி ஏறியது. பணம் தண்ணீராய்ச் செலவழிந்தது. ஊராருக்குக் கொண்டாட்டம். சாட்சிப் பணம், பிரயாணப்படி என்று பல வழிகளில் அவர்களுக்கு வரும்படி. இரண்டு பேர்கள் சண்டை போட்டுக் கொண்டு குட்டிச் சுவராகப் போவதை வேடிக்கை பார்ப்பதில் இயல்பாக உண்டாகும் உற்சாகம் வேறு.

தருமலிங்கத்தை அவமானப்படுத்தும் நோக்கம் தனக்குக் கொஞ்சங்கூட இல்லையென்று வாதாடினான் ஆறுமுகம். தான் பல வருடங்களாக ஊரில் இல்லாததால் ஊர்ப் பழக்க வழக்கங்கள் தனக்குத் தெரியாது என்றும், குருக்கள் தேங்காய் பழம் எடுத்துக் கொண்டு வந்த போது கோயிலின் நிர்வாக அதிகாரி என்ற முறையில் தனக்காகத்தான் கொண்டு வந்திருப்பதாக எண்ணி அதை எடுத்துக் கொண்டதாயும் அவன் சொன்னான்.

ஜில்லாக் கோர்ட்டில் பல மாதங்கள் வழக்கு நடைபெற்றது.

ஜில்லாக் கோர்ட்டில் தர்மலிங்கத்துக்குச் சாதகமாகத் தீர்ப்பாயிற்று. நிர்வாக அதிகாரி என்ற முறையில் ஆறுமுகம் ஊர்ப் பழக்க வழக்கங்களை அறிந்து கொண்டிருக்க வேண்டுமென்றும், தெரியாமல் செய்தாலும் அவன் செய்தது குற்றந்தான் என்றும் கோர்ட்டார் அபிப்பிராயப்பட்டார்கள். ஆறுமுகம் தன்னுடைய தவறுக்கு ஊரார் முன்னிலையில் தருமலிங்கத்திடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும் என்று தீர்ப்பளிக்கப் பட்டது.

ஆறுமுகத்துக்கு ஏற்பட்ட ஆத்திரத்துக்கு அளவில்லை. அவன் ரோசக்காரன். ஊரார் முன்னிலையில் பங்காளியிடம் மன்னிப்புக் கேட்பதா! இப்படி அவமானப்படுவதைவிட உயிர் விடுவது எவ்வளவோ மேல். இப்போதும் ஒன்றும் குடி முழுகிப் போய்விடவில்லை. ஹைகோர்ட் இருக்கவே இருக்கிறது.

ஆனால் அப்பீல் செய்யப் பணம் வேண்டுமே? பணத்துக்கு எங்கே போவது? அவனிடமிருந்த கொஞ்ச நஞ்சம் பணமும் ஜில்லாக் கோர்ட்டு வழக்கிலேயே செலவழிந்து போய் விட்டது. கடன் வாங்கலாமென்றால், கடன் கொடுக்கக் கூடியவர்களெல்லாம் தர்மலிங்கத்தின் கட்சி. அவனை ஆதரிப்பவர்கள் காசில்லாதவர்கள். பணத்துக்கு என்ன செய்வது?

அப்போது ஆறுமுகத்துக்குத் துரைசாமி செட்டியாரின் நினைவு வந்தது. அவர் சிறிய பண்ணை, பெரிய பண்ணை இரண்டுக்கும் பொது நண்பர். அவர் எப்போதுமே ஊர்ச் சண்டைகளில் கலந்து கொள்வதில்லை. அவர் உண்டு, அவருடைய லேவாதேவித் தொழில் உண்டு. அவரை அணுகினால் நிச்சயம் பணம் கிடைக்கும்.

ஆறுமுகம் துரைசாமி செட்டியாரிடம் போனான். "நீங்கள்தான் எனக்கு இப்போது உதவ வேண்டும், மாமா! பெரிய மனசு பண்ணி எனக்கு ஒரு ஐயாயிரம் ரூபாய் கொடுங்கள். நான் நிச்சயம் அப்பீலில் ஜெயித்து விடுவேன். கொஞ்சம் கொஞ்சமாக உங்கள் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன். நீங்கள்தான் என் மானத்தைக் காப்பாற்ற வேண்டும்" என்று அழாக் குறையாகக் கெஞ்சினான்.

"இதோ, பார் ஆறுமுகம்! நான் எந்தக் கட்சியையும் சேர்ந்தவனில்லை என்று உனக்குத் தெரியும். நான் சொல்வதைக் கேள். நீங்கள் ஏன் அநாவசியமாகச் சண்டை போடுகிறீர்கள்? என்ன இருந்தாலும் தருமலிங்கம் உன்னைவிட வயதில் பெரியவர். அவரிடம் தாழ்ந்து போவதில் உனக்கு ஒருவித அவமானமும் இல்லை. நீ ஏன் சமாதானமாகப் போகக் கூடாது?"

"அதில்லை, மாமா! எனக்கும் சுயமரியாதை உண்டல்லவா? நான் எப்படிப் பங்காளிக்காரரிடம் மன்னிப்புக் கேட்பது? அது சரி, நீங்கள் எனக்குப் பணம் கொடுத்து உதவுவீர்களா, மாட்டீர்களா? அதைச் சொல்லுங்கள்."

## இடுப்புப் பக்கவலி கோவிந்தனை வேலை செய்ய வொட்டாமல் தடுத்தது...!

கோவிந்தன் சாதாரணமாச் சுறுசுறுப்பாக வேலை செய்பவனாச்சே! இன்று என்ன வந்தது?

ஒரே இடுப்புப் பக்கவலி சார்! வேலை செய்யவே முடியலே.

இந்த ஸாரிடானை சாப்பிடு— இடுப்புப் பக்கவலி உடனே நீங்கும்!

கோவிந்தன் ஸாரிடான் சாப்பிடுகிறான்

பிறகு: கோவிந்தனுக்கு இப்போ இடுப்புப் பக்கவலி இல்லவே இல்லே, பாச்!

# ஸாரிடான் ரோஷ்

**வலியைப் போக்குகிறது, ஆசுவாசப் படுத்துகிறது, புத்துணர்ச்சியூட்டுகிறது**

ஸாரிடான் துரிதமாக, நிச்சயமாக, கெடுதல் எதுவுமின்றி, வலியைப் போக்குகிறது. உடல்வலி, தலைவலி, பல்வலி, ஜுரம் வரும்போதிருப்பது, சாதாரண உடல் கோளாறுகள் இவற்றிலிருந்து நிவாரணம் பெற ஸாரிடான் சாப்பிடுங்கள். பெரியவர்களுக்கு 1 வில்லை; குழந்தைகளுக்கு ¼ லிருந்து ½ வில்லை வரை.




ஸாரிடான் ஒரே வில்லை போதும்
ஒரு வில்லை 13 நயா பைசா

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

JWT. VT.-4796

"ஆறுமுகம்! உன்னிடம் உண்மையைச் சொல்லி விடுகிறேன். உனக்குப் பணம் கொடுத்தால் அந்த விஷயம் தருமலிங்கத்துக்குத் தெரியாமல் போகாது. அவருக்கு இதனால் என்பேரில் விரோதம் ஏற்படும். நீங்கள் பங்காளிக்காரர்கள். இன்று சண்டை போடுவீர்கள், நாளை ஒன்று சேர்ந்து கொள்ளுவீர்கள். நான் தருமலிங்கத்தை விரோதித்துக் கொள்ளுவது தான் மிஞ்சும். எனக்கு ஏனப்பா இந்த வம்பு? என்னிடம் பணம் எதிர்பார்க்காதே அப்பா!" என்று தீர்மானமாகச் சொல்லி அனுப்பி விட்டார் துரைசாமி செட்டியார்.

ஆறுமுகம் மனம் உடைந்து போய் வீடு திரும்பினான்.

**ம**று நாள் காலை. ஆறுமுகம் வீட்டில் சோர்ந்துபோய் உட்கார்ந்திருந்தான். அப்பீல் செய்யாவிட்டால் அவனுக்கு ஊரில் தலை காட்ட யோக்கியதை இருக்காது. எப்படிப் பணம் புரட்டுவது?

எதிர்பாராத விதமாக அப்போது அங்கு வந்து சேர்ந்தார் துரைசாமி செட்டியார். "நேற்றிரவு முழுவதும் எனக்கு உன் நினைவு தான், தம்பி. உனக்கு உதவி செய்வது என்று தீர்மானித்து விட்டேன். ஆனால் ஒரு விஷயம். நான் உனக்குக் கடன் கொடுத்திருக்கும் சமாசாரம் ஒருவருக்கும் தெரிய வேண்டாம்."

கண் பெற்ற குருடன் போல் ஆனந்தப்பட்டான் ஆறுமுகம். "கடவுள்தான் உங்கள் மனத்தில் புகுந்து எனக்கு உதவி செய்யும்படி உங்களைத் தூண்டியிருக்கிறார், மாமா! எனக்கு நிச்சயம் வெற்றிதான். நான் உங்கள் உதவியை ஒருபோதும் மறக்க மாட்டேன்" என்று நன்றியுடன் கூறினான்.

சுமார் ஒரு வருட காலம் ஹைகோர்ட்டில் வழக்கு நடந்தது. கடைசியில் ஆறுமுகத்தின் பக்கம் தீர்ப்பு ஆயிற்று. "ஆறுமுகம் வேண்டுமென்றே தருமலிங்கத்தை அவமானப்படுத்தியதாக நிரூபிக்கப்படவில்லை. ஆகையால் அவன் மீது குற்றமில்லை" என்றது தீர்ப்பு. கோர்ட்டுச் செலவையும் தர்மலிங்கம் ஆறுமுகத்துக்குக் கொடுக்க வேண்டுமென்று உத்தரவாயிற்று.

தீர்ப்பு வெளியான பிறகு ஆறுமுகம் துரைசாமி செட்டியார் வீட்டுக்கு வந்து அவரை சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினான். "நீங்கள்தான் கடவுள் மாதிரி வந்து என்னைக் காப்பாற்றினீர்கள்" என்று நன்றி பொங்கக் கூறினான்.

மெல்லச் சிரித்தார் துரைசாமி செட்டியார். "நீ கும்பிட வேண்டியது என்னை இல்லையப்பா, உன்னுடைய பங்காளி தருமலிங்கத்தைத்தான்!" என்றார்.

ஆறுமுகத்துக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை.

"ஆமாம். உன் வெற்றிக்குக் காரணம் தருமலிங்கம்தான்!" செட்டியார் தொடர்ந்தார். "விவரமாகச் சொல்கிறேன், கேள். அன்று நீ என்னைக் கடன் கேட்டுவிட்டுப் போன பிறகு, தற்செயலாகத் தருமலிங்கத்தைச் சந்தித்தேன். நீ வந்துவிட்டுப் போன சமாசாரத்தை அவரிடம் சொன்னேன். அவர் சொன்னார்: 'எனக்கு ஆறுமுகத்திடம் சொந்த முறையில் விரோதம் ஒன்றுமில்லை. எனக்கு நேர்ந்த அவமானத்தை நான் ஒன்றும் பொருட்படுத்தவில்லை. இருந்தாலும் ஊரில் பெரியவன் என்ற முறையில் எனக்கு என் உரிமையை நிலைநாட்டிக்கொள்ள வேண்டிய கடமையுண்டு. நான் பேசாமலிருந்தால் ஊரில் உள்ளவர்கள் என்னை ஏசுவார்கள். தொன்றுதொட்டு வழங்கி வரும் பழக்க வழக்கங்களுக்கு மரியாதை இருக்காது. அதனால்தான் நான் அவன் மேல் வழக்குத் தொடர்ந்தேன். ஆறுமுகம் இப்போது பண முடையால் அப்பீல் செய்ய முடியாமல் போய்விட்டால் நான் ஜில்லாக் கோர்ட்டில் அடைந்த வெற்றி உண்மையான வெற்றியாகாது. வெறும் பண பலத்தால் வெற்றி பெறுவதில் என்ன கௌரவம்



### கஞ்சனார்?

"ஞாயிற்றுக்கிழமை ரொம்ப 'போர்' அடிக்கிறதே! சிவராமன் ரொம்ப நாளா தம்பதி சமேதராக வரச்சொல்லிப் பிராணனை வாங்கிண்டு இருக்கிறான். போய்விட்டு வரலாமா அவன் வீட்டுக்கு?" என்றார் மகாலிங்கம் தம் மனைவியிடம். மனைவி மீனாட்சி ஒப்புக் கொள்ளவே இரண்டு பேரும் வீட்டைப் பூட்டிக் கொண்டு கிளம்பினார்கள்.

தம்பதிகளைச் சிவராமன் வரவேற்று உட்கார வைத்தான். சிவராமன் தம்பதிகளும் மகாலிங்கம் தம்பதிகளும் வெகு நேரம் சிரித்துப் பேசினார்கள். கடைசியில், "அடடா! நாங்கள் இங்கு வந்து நான்கு மணி நேரமல்லவா ஆகிவிட்டது. நேரம் போனதே தெரியவில்லையே" என்று மகாலிங்கம்சொல்ல மீனாட்சி தாங்கள் கொண்டு வந்த பையைத் திறந்து டிபன், காப்பி வகையறாவை எடுத்து மேஜையின் மேல் பரப்பினாள். இருவரும் சாப்பிட ஆரம்பித்தார்கள்.

"என்னய்யா இது?" என்றான் சிவராமன்.

"டிபனய்யா, டிபன்! உங்க வீட்டுக்கு வந்தால் டிபன், காப்பி ஒன்றும் கொடுக்க மாட்டீர்கள் என்று தெரியும். அதனால் வரும்போதே ஹோட்டலில் வாங்கிக் கொண்டு வந்தோம்" என்றார் மகாலிங்கம்.

"ஓய், இவ்வளவு நெருங்கிய நண்பனாயிருந்துண்டு நீர் இப்படிப் பண்ணலாமா? வாங்கிண்டு வந்தது தான் வந்தீர்; எங்களுக்கும் சேர்த்து வாங்கி வந்திருக்கப்படாதோ?" என்றான் சிவராமன்.

—சாமா




இரவு மணி பத்து. நான்கு வயதுள்ள மணி அயர்ந்து தூங்கும் தன் தாயாரிடம் வந்து, "அம்மா! அம்மா! அம்மோவ்!" என்று கூக்குரலிட்டான். "ஏண்டா இப்படிப் பிராணனை வாங்கறே! என்னடா வேண்டும்? சொல்லித் தொலையேன்" என்றாள் தாய்.

"அம்மா! ரொம்பத் தாகமா இருக்கு. தண்ணி கொண்டா" என்றான் மணி. அலுத்துக்கொண்டே எழுந்து போய்த் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்துவிட்டுப் படுத்துக் கொண்டாள் தாய்.

இரவு மணி பதினொன்று.

"அம்மா! அம்மா! தண்ணீர்.... தாகம், தாகம் .." என்றான் மணி. "இதென்ன இவன் தூங்க விட மாட்டான் போலிருக்கே?" என்று கடிந்து கொண்டே போய் ஒரு கூஜா நிறையத் தண்ணீர் கொண்டு வந்து வைத்து, "இந்தா இதோ நிறையத் தண்ணீர் வைத்துவிட்டேன். ராத்திரி பூராக் குடிச்சுண்டு கிட" என்று சொல்லிவிட்டுப் படுக்கையில் விழுந்தாள் அவன் தாய்.

இரவு மணி பன்னிரண்டு. "அம்மா... அம்மா!.... என்று தாயை உலுக்கி எழுப்பினான் மணி. "ஐயோ! ஈசுவரா! இது என்ன தொல்லை! தண்ணீர்தானே வேணும்? அதோ கூஜாவில் வைத்திருக்கிறேனே!" என்று இரைந்தாள் தாயார்.

"வேண்டாம்மா! தாகம் நின்னு போச்சு! அதைச் சொல்லத்தான் உன்னை எழுப்பினேன்!" என்றான் மணி. அவன் அம்மாவுக்கு எப்படியிருக்கும்?

—சாமா

இருக்கிறது? நீங்கள் ஆறுமுகத்துக்குப் பணம் கொடுப்பதில் எனக்கு ஆட்சேபமில்லை.'

"நான் சொன்னேன்: 'நீங்கள் இப்போது இப்படிச் சொல்கிறீர்கள். ஆனால் கடைசியில் தீர்ப்பு உங்களுக்குப் பாதகமாக ஆகிவிட்டால் என்ன நினைப்பீர்களோ? அப்போது நான் ஆறுமுகத்துக்குப் பணம் கொடுத்ததால்தான் அவனால் அப்பீல் செய்து ஜயிக்க முடிந்தது என்பதை நினைக்கத்தானே செய்வீர்கள்?'

"தருமலிங்கம் சொன்னார்: 'செட்டியாரே? நீங்கள் பயப்படுவது நியாயம்தான். மனிதனுடைய மனம் ஒரே நிலையில் எப்போதும் இருக்காது. நான் சொல்வதைக் கேளுங்கள். ஆறுமுகத்துக்கு நீங்கள் உங்கள் பணத்தைக் கொடுக்க வேண்டாம். நானே உங்கள் மூலம் பணம் தருகிறேன். ஆனால் ஆறுமுகத்துக்கு மட்டும் இது தெரிய வேண்டாம். தெரிந்தால் அவன் பணத்தை வாங்கிக் கொள்ள மாட்டான்.'

"நான் உனக்குக் கொடுத்த பணம் உண்மையில் தர்மலிங்கத்தின் பணம்தான்" என்று சொல்லி முடித்தார் துரைசாமி செட்டியார்.

தருமலிங்கத்தின் வீட்டுத் திண்ணையில் அவருடைய நண்பர்கள் உட்கார்ந்துகொண்டு ஹைகோர்ட்டுத் தீர்ப்பைப் பற்றிக் காரசாரமாக விவாதித்துக் கொண்டிருந்தார்கள்.

தருமலிங்கம் சொல்லிக் கொண்டிருந்தார்: "சரிதான், விட்டுத் தள்ளுங்கள். இப்போது என்ன குடி மூழ்கிப் போய்விட்டது? ஆறுமுகம் என்னை வேண்டுமென்றே அவமானம் செய்யவில்லை என்பதுதானே தீர்ப்பு? எனக்கு வேறென்ன வேண்டும்? எனக்கு ஏதோ தோல்வி ஏற்பட்டு விட்டதாக நினைத்து, நீங்கள் ஆத்திரப்படுவானேன்?"....

அப்போது ஓர் அதிசயம் நடந்தது. எதிர்பாராத விதமாக அங்கே தோன்றினான் ஆறுமுகம். தருமலிங்கத்தின் கால்களைப் பிடித்துக் கொண்டு, "என்னை மன்னித்து விடுங்கள்! நான் உங்கள் குணத்தைப் புரிந்துகொள்ளாமல் தவறு செய்துவிட்டேன்" என்று கதறினான்.

கூடியிருந்தவர்களுக்கு ஒரே வியப்பு! தருமலிங்கத்துக்கே ஒன்றும் புரியவில்லை. ஆறுமுகத்தைத் தூக்கி உட்கார்த்தி வைத்து, "என்ன தம்பி, என்ன சொல்கிறாய்?" என்று கேட்டார்.

"நீங்கள் தெய்வம்! ஏதோ சிறுபிள்ளைத்தனமாக நான் நடந்துகொண்டதைப் பெரிய மனசு பண்ணி மறந்துவிடுங்கள். இப்போது தான் துரைசாமி செட்டியார் எல்லாம் சொன்னார். நீங்கள் என்னை மன்னிக்கத்தான் வேண்டும்."

"ஆ. அதுவா! அதைத்தானா இவ்வளவு பெரிது பண்ணிப் பேசுகிறாய்? நான் கடவுளுமில்லை, மனிதத் தன்மைக்கு அப்பாற்பட்ட ஒரு தனிப் பிறவியுமில்லை. நான் வெறும் மனிதன்தான். சண்டையிடுவதிலும் முறை ஒன்று உண்டல்லவா! அதன்படி நடந்து கொண்டேன். அவ்வளவுதான்; சண்டையில் வெற்றி. தோல்வி முக்கியமில்லை. நியாயம் தவறாது சண்டையிடுவதுதான் முக்கியம். பாரத யுத்தத்தில் அந்தச் சிறு பையன் அபிமன்யுவை நிராயுதபாணியாக்கிப் பலபேர்கள் சேர்ந்து கொன்றார்களே, அதற்கு வெற்றி என்று பெயர்? நான் என்னால் முடிந்தவரை தரும யுத்தம் செய்ய முயன்றேன். நான் உன்னை மன்னிக்க என்ன இருக்கிறது? பணமில்லை என்ற காரணத்தால் உன்னால் அப்பீல் செய்ய முடியாமல் போயிருந்தால் நான் என்னையே மன்னித்துக்கொண்டிருக்க முடியாது. நான் செய்தது என் மனத் திருப்திக்காகத்தான்" என்று கூறி ஆறுமுகத்தைத் தழுவிக் கொண்டார் தருமலிங்கம்.

கூடியிருந்தவர்கள் தங்கள் கண்களைத் துடைத்துக் கொண்டார்கள்.

# IN NEED

low-priced quality vacuum flasks...

**INDEED!**










two distinguished,

low priced models created by '**SHIMADA**'

Manufactured by:

**SHIMADA GLASS & FLASK FACTORY (PVT.) LTD.**

Madras 23.

Sole Selling Agents: **CERAMIC SALES AGENCIES**

182, Broadway, Madras 2.

MPS

*Sub Agents for South India:*

M/s. POPPAT JAMAL & SONS

182, Broadway - Madras - 1

**இன்னும் ஆறு மாதம்... இன்னும் ஆறு மாதம்...**

சிருநாத சர்மா கொடுத்த விபூதியை ரங்கன் மிகுந்த பயபக்தியுடன் பெற்றுக் கொண்டான்.

"சுவாமி, நல்ல வாக்காகச் சொன்னார் ரங்கா. ஒன்றும் கவலையில்லே. இந்த விபூதியைக் குழந்தையின் நெத்தியிலே இடு. எல்லாம் சரியாயிடும்."

"ரொம்ப நன்றிங்க. கடவுள் மாதிரி நீங்கதான் காப்பாத்தறீங்க."

தன் குழந்தையின் காய்ச்சல் நீங்கி விடும் என்பதில் ரங்கனுக்கு இப்போது சிறிதும் சந்தேகமில்லே. விபூதியைக் கண்களில் ஒற்றிக் கொண்டு வீட்டுக்கு விரைந்தான்.

சர்மா அவனைப் பார்த்துக் கொண்டே நின்றார். அவருக்கு எழுபது வயதைத் தாண்டிய பருவம். நேர்மையாலும் சாதனையாலும் உரம் பெற்ற உடலென்றாலும் இயற்கையின் நியதிக்கு ஒப்பச் சில விதங்களில் பலவீனம் வந்துதான் விட்டது.

வயதினால் சற்றே வளைந்த உயரமான சிவந்த வடிவம். ஞானப் பிழம்பாய் ஒளிரும் முகத்தில் பவித்திரமான திருநீறு. பஞ்சகச்சமாய்க் கட்டியிருந்த வேஷ்டியின் மேல்சட்டையின்றித் தோளில் ஒரு துண்டு மட்டுமே தொங்கியது. பார்த்தவுடனேயே மரியாதை எழுப்பும் கம்பீரம் அவர் அங்கந்தோறும் பொலிந்து கொண்டிருந்தது.

"ஐயா!"

அவர் திரும்பினார். பால் பண்ணை சொந்தக்காரன் வேலாயுதம் எதிரில் கைகட்டி மரியாதையாய் நின்றான்.

"என்னய்யா?"

"என் எருமை மாடு திடீர்னு என்னமோ படுத்துட்டு தூங்க. இரை எடுக்கிறதில்லே. வாயாலே ரத்தமாக் கொட்டுது."

"வைத்தியரைக் கூப்பிட்டாயோ?"

"ஆ...... ம்" வேலாயுதம் குன் கொட்டினான். "அவருகிட்டே எனக்கு நம்பிக்கை இல்லேங்க. நீங்க சாமிக்குப் பூஜை போட்டுத் திருநீறு குடுத்தீங்கன்னா...."

சர்மா அவனது ஆவல் மிகுந்த முகத்தை யோசனையுடன் பார்த்தார். அவனது நம்பிக்கை யெல்லாம் அவரிடம் அடைக்கலமாகி எதிரே காத்துக் கொண்டிருந்த காட்சியினால் அவருக்குப் பெருமிதம் தோன்றவில்லே; மாறாக, பணிவே எழுந்தது. அதனுடன், ஒரு பவித்திரப் பொறுப்பைச் சுமந்து கொண்டிருந்த கவலை தோய்ந்த நிதானமுமிருந்தது.

"இரப்பா, இதோ வரேன்."

அவர் உள்ளே சென்று திரும்பும் வரை வேலாயுதத்துக்குத் தவிப்புத் தீரவில்லே. அந்தச் சிறிய கல் வீட்டின் முன்னால் கவலேயுடன் மேலும் கீழும் நடந்தவாறிருந்தான்.

"வேலாயுதம்!"

அவன் தலே சட்டென்று நிமிர்ந்தது: அவரை ஆவலாக ஏறிட்டுப் பார்த்தான். முகம் மலர்ந்தது. சர்மா புன்னகையுடன் காட்சியளித்தார். அப்படியானால் அவர் நல்லதாகச் சொல்லுவார் :

"பூஜை செய்தேன் வேலாயுதம். சுவாமி 'நல்லபடியாகும்'னு மனசிலே உணர்த்திட்டார். இந்தா விபூதி. உன் எருமை ரெண்டும் பிழைச்சுடும்."

"நீங்க நல்லா இருக்கணும், ஐயா! கண் கண்ட தெய்வம் நீங்கதான்!" என்று விபூதியும் நன்றியுமாக வேலாயுதம் அங்கிருந்து விரைந்தான்.

சர்மா சோர்வுடன் வாசல் திண்ணையில் அமர்ந்தார். மூக்குக் கண்ணாடியை இடது கையில் கழற்றி வைத்துக் கொண்டு குனிந்து வலது கையால் வேஷ்டி நுனியைப் பிடித்து முகத்து வேர்வையைத் துடைத்தார்.

'அப்பாடா! என்ன அசதி! இன்னும் எத்தனை நாள் இந்தச் சடலம் நிலேக்கப் போகிறது!' கண்ணே அசத்தியது. சாம்புவைக் காணுமே? அவன் வந்து ராமாயணத்தைப் படித்தாலாவது நிம்மதியாய்க் கண்ணே மூடியவாறு கேட்டு அனுபவிக்கலாம்.



# திருவுள்ளம்

ஆர். சூடாமணி

"மாமா!"

"வந்தியா சாம்பு? என்ன இன்னிக்கு இத்தனை நேரம்?"

"ஒண்ணுமில்லே.... மைதானத்திலே, நாலு பேர் சிநேகிதர்கள் கிரிக்கெட் ஆடிண்டிருந்தா...."

"உன்னையும் கூப்பிட்டா, நீயும் விளையாடினே, அதுதானே?"

பையன் தலையைச் சொறிந்தான். பதினான்கு வயது. ராமாயணம் படித்துக் காட்டவா தோன்றும்? ஏதோ அவரிடம் உள்ள மரியாதையினால்தான் மறுக்காமல் கோடி வீட்டிலிருந்து தினமும் வந்து படித்து விட்டுப் போகிறான். கிரிக்கெட். அது என்ன ஆட்டமோ! இந்தப் பட்டிக்காட்டுக் கிராமத்துக்குக்கூட வல்லவா நாகரிகம் வந்துவிட்டது!

"போகட்டும்டா. இப்போ கொஞ்சம் உட்கார்ந்து நேத்து விட்ட இடத்திலேயிருந்து படி. ராமர் நகைகளைப் பார்க்கிற இடத்திலே விட்டோம், இல்லையா?"

"மாமா.... நாளைக்குப் படிக்கிறேனே. வீட்டிலே அப்பா அம்மா கவலைப்படுவா....."

"நீ இங்கே வந்து எனக்குப் படிச்சுச் சொல்றது அவாளுக்குத் தெரியாத மாதிரி இல்லே பேசறே! சாக்குச் சொல்லாதேடா, வா, படி.."

"மாமா...."

"சோம்பலைப் பார்க்காதேடா. இன்னும் எத்தனை நாளுக்கு உன்னைக் கேட்கப் போகிறேன்? நான் கண்ணை மூடிவிட்டால் அப்புறம் உன்னை இப்படி யாரும் தொந்தரவு செய்ய மாட்டா. புஸ்தகத்தை எடுத்து வா."

அந்தப் பேச்சுக்கு ஊரில் யாருமே பதில் சொல்ல முடியாது. ரகுநாத சர்மா கண்ணை மூடி விடுவது என்றுமே நினைக்க முடியாத உற்பாதமாக எல்லோரும் கருதினார்கள்.

சாம்பு அவருடைய வீட்டுக்குள்ளிருந்து ராமாயணத்தை எடுத்து வந்து படிக்கலானான். சர்மா கண்களைப் பாதி மூடிக்கொண்டு அநுபவித்தார். உள்ளம் தெய்வ நினைவில் நீராய்க் கலந்து கரைந்தது. அந்தப் பக்திப் பக்குவம் இல்லையானால் வாழ்வில் இத்தகையதொரு சக்தியை ஆண்டவன் அவர் பொறுப்பில் விட்டிருப்பானா?

"சர்மா ஸார்!"

கண்கள் திறந்தன. எதிரே பத்மநாபன் நின்றிருந்தார்.

"ராமாயணம் கேட்கிறப்போ வந்து கெடுத்துட்டேனேன்னு நினைக்கப்படாது. அவசரமான விஷயம்."

"என்ன சொல்லுங்கள்" என்றார் சர்மா பொறுமையாக.

"பையன் பட்டணத்துக்கு வேலை விஷயமாய் ராத்திரி புறப்படறான். அவன் போகிற காரியம் காயா பழமான்னு கொஞ்சம் ஸ்வாமி திருவுள்ளத்தைப் பார்த்துச் சொன்னால் உபகாரமாக இருக்கும்...."

சர்மா எழுந்து உள்ளே சென்றார். எப்படி மறுக்க முடியும்? உலகில் அவரது வேலை என்று தெய்வம் விதித்திருந்த பணியல்லவா இது?

சிறிய பூஜை அறைக்குள் அவர் கைகால்களைக் கழுவிக் கொண்டு நுழைந்தார். பீடத்தின் மேல் பூஜையலங்காரங்களினிடையே ஸ்ரீராமனின் திருவுருவப் படம் காணப்பட்டது. சர்மா அதன் எதிரில் சென்று உட்கார்ந்தார். ஓர் ஊதுவத்தியைக் கொளுத்தி ஏற்றி விட்டுக் கைகளைக் கூப்பித் தியானத்தில் ஆழ்ந்தார்.

உணர்வுகள் ஒருமைப்பட்ட அந்தத் தவநிலையில்தான் உள்ளத்தினுள் ஆண்டவனின் பதில் வருவதாக அநுபவம் ஏற்படும். அது ஒலியல்ல, குரலல்ல. சட்டென்று உயிரின் ஆழத்துள் தோன்றும் ஓர் உணர்வுதான். ஒரு கணம் தெய்வ சான்னித்தியம் நெஞ்சில் பளிச்சிட்டு மறைவது போன்ற தோற்றம்.

தியானத்திடையே உணர்வு தட்டியது: 'அவன் காரியம் ஜெயிக்கும்.'

அவர் கண்களைத் திறந்து தெய்வத்துக்கு வணக்கம் செய்து விட்டுப் புன்னகை தவழ விபூதியுடன் வெளியே வந்தார்.

"வெற்றிதான் பத்மநாபன். பிள்ளையைத் தாராளமாய் அனுப்புங்கள்."

இப்படித் தினம் தினம் எத்தனை நிகழ்ச்சிகள்! இந்த அமானுஷ்ய சக்தியைத் தம்மிடம் உணர்ந்த காலத்திலிருந்து சர்மா அதைத் தெய்வம் ஒப்பித்திருந்த அடமானப் பொருளாக மதித்துப் பயத்துடன், பணிவுடன் காத்து வந்தார். கிராமத்து மக்கள் எல்லா விஷயங்களுக்கும் அவரையே வந்து கேட்பார்கள். பூஜை அறையினுள் தெய்வ சந்நிதிக்கு முன் அவர் நெஞ்சில் உதயமாகும் உணர்வு இதுவரை பொய்த்ததே இல்லை.

ஏதாவது கேடு நேர்வதாக இருந்தால் அவருக்குத் தியான நிலையின் சூனியம் நிலைக்கும்.

"வீட்டுக்காரருக்கு உடல் நலம் சரியில்லை. பூஜை செய்து விபூதி கொடுங்க" என்று ஒரு சமயம் ஒரு பெண் ஓடி வந்து அழுதாள். அவர் உள்ளே சென்று ராமனின் முன் அமர்ந்து கண்களை மூடிக் கொண்டார். நேரம் கடந்தது. உள்ளத்தில் குரல் ஒலிக்கவில்லை. தெய்வம் மௌனமாய் இருந்தது. வாட்டத்துடன் வெளியே வந்த அவர் அப்பெண்ணிடம், "விபூதி இன்று தயாராயில்லை அம்மா. பிறகு வா" என்று சொல்லியனுப்பி விட்டார். அவள் வேதனையுடன் திரும்பிச் சென்றாள். இரண்டு நாட்களில் அவள் கணவன் இறந்து விட்டான். ஜயிக்காத காரியங்களென்றால் இப்படித்தான் நேர்ந்தது.

உலகில் உறவென்று யாருமின்றி அவர் அந்தக் கிராமத்துக்கு ஐம்பதாவது வயதில் வந்தது முதல் கிராம ஜனங்களின் அன்புக்குப் பாத்திரமாகி விட்டார்.

திடமாயிருந்த உடல் சமீபத்தில் கொஞ்ச காலமாக வாட்டமடையத் தொடங்கியிருப்பதைச் சர்மா உணரலானார். கண்கள் முன் போல் தெரியவில்லை. கால்கள் தள்ளாடின. அவ்வப்போது தலை சுற்றி மயக்கம் வந்தது. சர்மா இந்த அறிகுறிகளை நன்கு புரிந்து கொண்டார். வண்டி எவ்வளவு நாள்தான் ஓடும்? வயது ஏறி விட்டது. என்னதான் தெய்வ சான்னித்தியம் பெற்ற உயிரென்றாலும் மனித உயிர்தானே? ஒரு நாள் மரிக்கத்தான் வேண்டும். மரணத்தை எண்ணி அவர் அஞ்சவில்லை. ஆனால் ஓர் ஆசை. தம் வாழ்வு இன்னும் எத்தனை நாளைக்கு என்று தெரிந்து கொள்ள அவர் விரும்பினார்.

சுத்தமாக ஸ்நானம் செய்து விட்டுத் திருநீறு அணிந்து அவர் பக்திப் பெருக்குடன் ராமனுக்குப் பூஜை செய்தார்.

'ஆண்டவனே, பதில் கூறு. நான் இன்னும் எவ்வளவு காலம் உயிரோடு இருப்பேன்?'

ஊருக்கெல்லாம் வருங்காலத்தின் லட்சணங்களைச் சொல்லும் அவருக்குத் தம்மைப் பற்றி மட்டும் அறிய முடியவில்லை. அவருக்கு அளித்திருந்த சக்தியை அவர் விஷயத்துக்கு மட்டும் பயன்படாமல் செய்ய வேண்டும் என்பதுதான் ஆண்டவனின் திருக் குறிப்போ? அல்லது என்றாவது ஒரு நாள் பதில் வருமோ?

மனதில் பல எண்ணங்கள். உயிர் போகுமுன் ஒரு தரம் திவ்விய க்ஷேத்திரங்களைத் தரிசித்து வரவேண்டும் என்பது அவரது நெடுநாளைய ஆவல். அவர் கைவசம் கொஞ்சம் பணம் இருந்தது. அவர் உதட்டை அசைத்துக் கேட்டால் கிராமமே ஒன்றாய் எழுந்து நன்கொடை திரட்டித் தரும். க்ஷேத்திராடனம் நடக்க வழி ஏற்படும். ஆனால் ஏனோ இன்னும் அதற்கான ஒரு வேகம் தோன்றவில்லை.

'இனி எத்தனை நாள்? சீக்கிரம் கிளம்ப வேண்டியதுதான்' என்று அடிக்கடி நினைத்துக் கொள்வார். ஆனால் எப்படியோ காலம் கடந்தது. இஷ்ட தெய்வமான ராமனின் புண்ணிய வரலாற்றைச் செவி இனிக்க, மனம் குளிரக் கேட்டு வருவதொன்றுதான் இந்த நிலையில் நெஞ்சுக்கு ஆறுதலளித்தது. கிராமக் கணக்குப் பிள்ளையின் மகன் சாம்புதான் தற்போது வேலை எதுவும் இல்லாமல் சுதந்திரமாய் இருந்தான். பார்வை சரியாகத் தெரியாத தமக்கு ராமாயணத்தைப் படித்துச் சொல்லும்படி அவர் கேட்ட போது, இளரத்தத்தின் துடிப்பு அந்தச் சாந்தமான முதிர்ந்த பணியை எண்ணிச் சோம்பினாலும் பையன் மறுக்கவில்லை.

அன்று என்னவோ காலையிலிருந்தே சர்மாவுக்கு நெஞ்சு படபடத்தது. இன்னதென்று புரியாத கலவரத்தில் ஒரு வேலையிலும் மனத்தைச் செலுத்த முடியாமல் தவித்தார். பூஜை அறையில் தியானத்தில் ஆழ்ந்து, "ராமா! என் வாழ்வு இன்னும் எத்தனை காலத்துக்கு?" என்று மனம் உருகிக் கேட்டார். பதிலில்லை. 'கடவுளே, ஊருக்கெல்லாம் சொல்கிறேன், எனக்கு மட்டும் என்னைப் பற்றித் தெரியக் கூடாதா?'

மாலையில் ஒரு வழியாகச் சாம்பு வந்தான். ரகுநாத சர்மா சற்று நிம்மதியுடன் வந்து திண்ணையில் சாய்ந்து கொண்டார். கைவிசிறி ஒன்றால் விசிறிக் கொண்டே, "மனசுக்குச் சாந்தியாய்க் கொஞ்சம் படிடா" என்றார்.

சாம்பு வழக்கம் போல் உள்ளே யிருந்து அவருடைய ராமாயண நூலை எடுத்து வந்து அவர் எதிரே அடக்கத்துடன் உடலைச் சுருக்கி உட்கார்ந்து புத்தகத்தைப் பிரித்தான்.

அனுமன் பிராட்டிக்குக் கணையாழி கொடுக்கும் பருவம். மெய்ம்மறந்து சர்மா கதையில் தம்மை இழந்தார்.

"ஆஹா, ராமாயணத்திலேயே ரொம்ப சிரேஷ்டமான இடம் இதுதான்டா, சாம்பு!"

சாம்பு இயந்திரம் போல் படித்துக் கொண்டே சென்றான்.

"அனுபவிக்காமல் படிக்கிறியேடா, முட்டாள். இந்த அழகைக் கவனிடா! சுந்தர காண்டம் பாராயணம் செய்தால் எல்லாப் பலன்களும் கைகூடும்னு சொல்லுவா. நீ என்னடான்னா திவச மந்திரம் படிக்கிறாப்போல..."

சட்டென்று நாவைக் கடித்துக் கொண்டார் சர்மா. அம்மாதிரியான அபச் சொல் அவர் வாயினின்று அது வரை வந்ததேயில்லை. அதுவும் புனிதமான ராம கதையைப் பற்றிப் பேசும்போதா? ஏன் அம்மாதிரி வந்தது? இன்று என்னவோ மனமே சரியாயில்லை....

சாம்பு படித்துக் கொண்டே இருந்தான். நேரம் கடந்தது.

"ஏண்டா! இப்போதான் அனுமார் சீதையோட பேசிண்டிருந்தார். அதுக்குள்ளேயே லங்கா தகனம்கிறியே!"

"நான் வரிசையாய்த்தானே மாமா படிச்சிண்டு வரேன்."

"என்னடா, இத்தனை வேகம்? கொஞ்சம் நிதானமாய்ப் படி. கதையில் மனசைச் செலுத்தி அனுபவிக்க வேணும்?"

சாம்பு கொட்டாவி விட்டான்.

"ரொம்பக் களைப்பாயிருக்கு மாமா. இன்னிக்குப் போதுமா?"

"அதென்னடா, அதுக்குள்ளே களைப்பு? சும்மா கதை விடாதே, படி!"

"இது இருக்கட்டும் மாமா. நேத்து மத்தியானம் சில சிநேகிதர்களோட நான் பக்கத்து டவுனிலே ஒரு சினிமா பார்த்தேனே, அந்தக் கதையைச் சொல்லட்டுமா?"

"ஒண்ணும் வேணும். இதைப் படி."

"இதுதான் இருக்கவே இருக்கே. அந்தச் சினிமாவிலே வந்து...."

"டே, சாம்பு!" சர்மா இரைந்து கத்தினார். "இப்போ ராமாயணத்தைப் படிக்கப் போறி

# இதைப்போன்ற புள்ளிகளை நீங்கள் சுவர்களில் கவனித்ததுண்டா?



மிகவும் கவனமாக அவைகளைப் பாருங்கள்— அவைகள் மூட்டைப்பூச்சிகளின் அடையாளங்கள் அதாவது உறக்கமற்ற இரவுகளின் அறிகுறிகள். நீங்கள் அறிந்திருப்பதைக்காட்டிலும் மூட்டைப் பூச்சிகள் மிகமிக வேகமாகப் பெருகுகின்றன. அவைகளை அலட்சியப்படுத்தாதீர்கள். அவைகளை இப்பொழுதே 'டால்ப்'க் கொண்டு அழித்தொழியுங்கள். கொஞ்சம் டால்பைத் தெளியுங்கள்.... நீங்கள் அறியுமுன்பே மூட்டைப் பூச்சிகள் செத்துப்போயிருக்கும்.

டால்பின் ஒரே ஒரு தெளிப்பு அல்லது அதன் ஸ்பரிசம் பட்டாலே போதும். டால்ப் மூட்டைப் பூச்சிகளை உடனடியாகக் கொல்வதுடன் நீடித்த வன்மையுடையது. எல்லாவற்றையும்விட டால்ப் மிகவும் சிக்கனமானது. ஒவ்வொரு பாட்டிலிலிருந்தும் ஐந்து முழு ஸ்ப்ரே டப்பிகளையோ அல்லது சிகிரெட் டின்களையோ இதன் கரைசலால் நிரப்பலாம்.







# டால்ப்

மூட்டைப்பூச்சிகளுக்கு சாவு மணியடிக்கிறது

> ஈசுவரனைத் தரிசிக்க விரும்பினீர்களானால் மனிதனுக்குச் சேவை செய்யுங்கள்! நாராயணனை அடைய வேண்டுமானால் பட்டினியில் துயருறும் கோடிக்கணக்கான தரித்திர நாராயணர்களுக்குப் பணி புரியுங்கள்!
>
> —ஸ்வாமி விவேகானந்தர்

ழுமா, இல்லையா? ஏண்டா, இன்னும் எத்தனை நாளைக்கு உன்னை இப்படிக் கேட்கப் போறேன்?''

அந்தக் கேள்வி அவர் வாயிலிருந்து புறப்பட்ட கணமே தட்டென்று உள்ளத்தில் ஒரு வெளிச்சம். காதிலுள் ஓர் அர்த்தத்தின் உணர்வு: இன்னும் ஆறு மாதம்!

சர்மாவுக்கு மெய் சிலிர்த்தது. இன்னும் ஆறு மாதம்! அவர் தினந்தோறும் ஆண்டவனைக் கேட்டு வந்த கேள்விக்குக் கடைசியில் பதில் வந்து விட்டதே! ஆறு மாதம்! ஆறு மாதம்தான்!

உள்ளத்தில் ஒரு நூதன உணர்ச்சி எழுந்தது. ஆறு மாதங்களில் உலகை நீத்துச் செல்ல வேண்டும் என்ற ஒரு புதிய கறுகறுப்புத் தலை தூக்கியது.

''நான் படிச்சிண்டே இருக்கேன். நீங்க பாட்டுக்கு ஏதோ யோசனையில் இருந்தால் எப்படி?'' என்றான் சாம்பு சிறிது கோபமாக.

சர்மாவின் நினைவு மீண்டது.

''படிச்சது போதும்டா சாம்பு. புத்தகத்தை மூடி வை. நாளைக்கு உன் அப்பாவையும் ஊரில் மற்ற முக்கியமானவர்களையும் நான் இங்கே வரச்சொன்னதாகச் சொல்லு.''

''என்ன மாமா விசேஷம்?''

''விசேஷம் இருக்கு. நீ போய்ச் சொல்லு.''

சர்மாவின் வேண்டுகோளின்படி நிதி திரட்டி உதவி செய்வதை ஊர்ப் பிரமுகர்கள் தம் பாக்கியமாய்க் கருதினார்கள்.

ராமனை வணங்கி எழுந்த சர்மா தமது எளிய உடைமைகளைச் சிறிய மூட்டையாகக் கட்டினார். பெட்டிக்குள் ராம சித்திரம் ஒன்றைப் பத்திரப்படுத்திக் கொண்டார். எத்தனை நாளைய ஆசை நிறைவேறப் போகிறது!

''ஏன், சர்மா சார், தலங்களைத் தரிசனம் செய்துவிட்டுத் திரும்பி வந்து விடுகிற உத்தேசம்தானே?'' என்று பத்மநாபன் கவலையோடு விசாரித்தார்.

''அந்த இடங்கள் நல்லா யிருக்குன்னு அங்கேயே மெய்ம்மறந்து உட்கார்ந்துடாதீங்க!''

''சாமி, திரும்பி வந்துடுவீங்களில்லே?''

சர்மாவின் கண்களில் நெகிழ்ச்சியின் மிகுதியால் நீர் கசிந்தது. ''உங்க அன்பையெல்லாம் விட்டுட்டு நான் 'வேறே எங்கே போகப் போறேன்? சுவாமி தரிசனம் பண்ணி விட்டுத் திரும்பி வந்து உங்க நடுவிலே, இந்த இடத்திலேதான் உயிரை விடுவேன்.''

அவர் கிளம்பி விட்டார்.

காலும் கண்ணும் தாளும் சிரமும் உடலும் உள்ளமும் புகழும் நாவும் தூய்மையுற, தலங்களை ஆசை தீரத் தரிசனம் செய்தார் சர்மா. ஐந்து லிங்க மூர்த்திகளையும் இதயத்தில் இருத்திக் கொண்டார். பரந்தாமனையும் பரமேசுவரனையும் அன்னையையும் பற்பல வடிவங்களில் கண்களிகூரக் கண்டு நெக்குருகி நின்றார். பிறப்பெடுத்த பயன் கைவரப் பெற்றவராய் உடலின் திருநீற்றுப் பூச்சிலே உள்ளத்தையும் உயிரையும் ஒளிமிகும் தூய்மையாக நிறைத்துக் கொண்டு மூன்று மாதங்களில் ஊர் திரும்பினார்.

அவர் உள்ளத்தில் அமைதி குடிகொண்டது. ராமனின் திருமுன்னே பக்தியாகக் கரைந்து நெஞ்சம் நன்றியாய்க் கனிந்துருகினார்.

அதன்பின் நிதானமாக ஒவ்வொரு நாளையும் கடத்தி, இறுதியான, அந்த நாளை நிறைவுடன் எதிர்நோக்கி இருக்கலானார் சர்மா. மறுபடியும் மாலை நேரங்களில் சாம்புவைக் கொண்டு ராம கதையைப் பருகினார். இதயம் பூரண பக்குவத்தோடு அஞ்சலி செய்தது.

காதிலே 'ஆறு மாதம்' என்று ஒலித்த குரலைக் கேட்டு இன்றோடு சரியாக ஆறு மாதங்கள் பூர்த்தியாகி விட்டன.

ரகுநாத சர்மா உள்ளத்தில் அதீதமான நிறைவுடன் காலையில் கண் விழித்தார். நிதானமாக, கவனமாக, ஸ்நானம் செய்தார். ஆண்டவனை அடையப் போகும் தினம் உள்ளத்திலோ, உடலிலோ சிறிதும் மாசு இருக்கலாகாது. உடலெங்கும் வெண்மை மிளிர நீறு அணிந்து நின்றார். மனத்தில் ததும்பாத நிறைவாக ராமனை நிரப்பிக் கொண்டார். வெளி உலகின் உணர்வு தானாகக் கழன்று விழுந்தது. உயிரெல்லாம் தெய்வ மணம் கமழ உடல் புல்லரிக்கப் பூஜை அறைக்குள் வந்தார் அவர். கதவைத் தாளிட்டுக் கொண்டு ஆண்டவன் முன் அமர்ந்தார். ஒரு தரம் ஆசை தீரப் படத்தில் ராமனை அங்கம் அங்கமாகப் பார்த்துப் பூரித்தார். 'ராமா! நீ சொன்ன நாள் இது. உன்னிடம் வருகிறேன்' என்று நினைத்துக் கொண்டவராய்க் கண்களை மூடித் தியானத்தில் ஆழ்ந்தார். எந்த நிமிஷமும் உடலிலிருந்து விடுபடத் தயாரான உணர்ச்சிச் சிலிர்ப்புடன் காத்து உட்கார்ந்திருந்தார்.

திடீரென்று வெளியே ஆரவாரம்.

''ஐயோ, ஐயோ.....!''

சர்மா சட்டென்று கண்களைத் திறந்தார். வெளியில் கூச்சல் அதிகரித்தது.

''ஐயோ, இதென்ன அக்கிரமம்! மாமா, வெளியே வாருங்களேன், இந்த அநியாயத்தைக் கேளுங்க... சின்னப் பிள்ளை, இந்த வயசிலேயே போயிட்டானே, நீச்சல் அடிக்கிறேன்னு சொல்லி இவனை யாரு ஆத்திலே குதிக்கச் சொன்னது? ...''

யார்? யார்? சர்மாவுக்குத் திடீரென்று அதிர்ச்சி எழுந்தது. எதையோ புரிந்து கொண்ட தாபத்தில் உடல் பதறியது.

''சர்மா, வெளியே வாருங்களேன், சாம்பு ஆத்தோட போயிட்டானே. ஐயோ...''

சற்று நேரம் ஒன்றுமே புரியவில்லை. அவர் கண்கள் வெறி கொண்டது போல் வெறித்தன. உடல் துடிக்க ராமனின் உருவத்தை ஏறெடுத்துப் பார்த்தார்.

'இன்னும் எத்தனை நாள் உன்னைக் கேட்கப் போறேன்!' என்று அவர் சாம்புவிடம் சொன்ன போது 'இன்னும் ஆறு மாதம்' என்று வந்த பதிலுக்கு இதுவா அர்த்தம்?

''ஐயோ, கடவுளே!'' என்று நெஞ்சைக் கிழித்துக் கொண்டு வந்த கூவலோடு அவர் தெய்வ பீடத்தின் முன் விழுந்து கதறினார்.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.




மைத்தான் ஏவி, பாக்ரா டிவி 900 மிமீ, 1200 மிமீ, 1400 மிமீ, 1500 மிமீ.



டிலக்ஸ் 400 மிமீ மேஜை மாடல்

- சுழட்டக்கூடிய வலைக்கூண்டு
- இஷ்டமான கோணத்தில் பொருத்தி, இருபுறமும் திருப்பி வீசக்கூடியது.
- மிகச்சரியான வடிவமும் சம நிலையுமுள்ள அலுமினியம் பிளேடுகள்
- மூவகை வேகம்
- ஒரு சில நிறங்களில் எனாமல் பூச்சு.

# AEI

# ஸீலிங்
## மற்றும்
# மேஜை விசிறிகள்

மிகுந்த சக்தியுடையதாக, குறைந்த மின்சாரச்செலவே ஆகும்படி அமைக்கப்பெற்ற ஏஇஐ ஸீலிங் மற்றும் மேஜை விசிறிகள், பொறுக்கியெடுத்த சிறந்த உறுப்புக்களைக் கொண்டு நிர்மாணிக்கப்படுவதாகும். ஏஇஐ விசிறிகளின் தயாரிப்பில் தொழில் நுட்பத் திறமையுடன், இந்தியாவின் மிகப்பெரிய மின்சார சாதன சப்ளை ஸ்தாபனத்தின் விசேஷ ஆற்றலும் அனுபவமும் கூடியிருக்கிறது

**அசோஸியேடட் எலக்டிரிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) பிரை. லிட்.**
கிரெஷம் ஹவுஸ்; 13, ராஜேந்திரநாத் முகர்ஜி ரோடு, கல்கத்தா-1.
கிளைகள்; பம்பாய் - புதுடில்லி - மதராஸ் - பெங்களூர் - கோயமுத்தூர் - நாகபுரி.

AEI-47A TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon